ஸ்ரீ:







ஸ்ரீமதே சடகோபாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை.

(இரண்டு பாகங்களும்.)

புவனகிரி, ஸ்ரீமதித்யாதி,
அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்
அருளிச் செய்தது.



பண்ணுருட்டி.
புதுவை, விலக்ஷணகவி,
ஸ்ரீமத், ஏ. வே. இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள்
சபையின் வெளியீடு.

1968



ஸ்ரீ:

இந்நூலை அச்சேற்றுவதற்கு "குறிப்பறிந்
கொடை" என்ற அறப்பொருளை அறிந்து செ
வழங்கிய வள்ளலார்களின் திருநாமங்களும் தொக

ஸ்ரீமான்கள் ரூ

| | |
|---|---|
| பண்ணுருட்டி. இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் சபையார். | 500 |
| மாளிகைமேடு K. நாராயண ரெட்டி (செலவு வகையில்). | 200 |
| சம்பாரெட்டிப்பாளையம். M. வரதராஜுலு நாயுடுகாரு. | 100 |
| மாளிகைமேடு. M. பக்தவத்ஸலு ரெட்டியார். | 50 |
| கோழிப்பாக்கம். V. L. இராமகிருஷ்ண ரெட்டியார். | 50 |
| ஆதிநாராயணபுரம். ந. சீனிவாசலு நாயுடுகாரு. | 50 |
| ,, R. ரங்கமன்னார் நாயுடுகாரு. | 50 |
| கோவை. உடுமலைப்பேட்டை, உருத்திராபாளையம். நம்மாழ்வார் ராமாநுஜகூடம். ப. அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள். | 50 |
| சம்பாரெட்டிப்பாளையம். S. H. பாஷ்யம் நாயுடுகாரு. | 25 |
| பள்ளிஓடை. V. அரங்கராமாநுஜம். | |
| ஆதிநாராயணபுரம். கே. வெங்கடசாமி நாயுடுகாரு. | |
| மாளிகைமேடு. D. திருமலை ரெட்டியார். | 2 |
| ,, R. கிருஷ்ண ரெட்டியார். | |
| கணிசப்பாக்கம். M. வரதராஜுலு ரெட்டியார். | |
| திருப்பாச்சனூர். S. B. S. சுப்பராயலு ரெட்டியார். | |
| வடக்கு கீழ்வாதி. D. நரசா ரெட்டியார். | |
| கடலூர். 2., ஸரஸ்வதி பிரஸ்காரர். (பத்திரிகை) | |

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை.

(இரண்டு பாகங்களும்.)

புவனகிரி, ஸ்ரீமதித்யாதி,

அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

அருளிச் செய்தது.

பண்ணுருட்டி.

புதுவை, விலக்ஷணகவி,

ஸ்ரீமத், இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் சபையின்,

வெளியீடு.

சபையின் காரியதரிசியில் ஒருவரான மாளிகைமேடு,

K. நாராயண ரெட்டியாரால்,

"...த்னம் பிரஸ்" 11, பத்ரையன் தெரு, சென்னை-1.

பதிப்பிக்கப்பட்டது.

1968

[ரூ. 2—00.

இப்புத்தகம் கிடைக்குமிடம் :—

**K. நாராயண ரெட்டியார்,**

மாளிகை மேடு,

மாளிகை மேடு (Post),

(Via) பண்ணுருட்டி.

S. A. Dt.

15-4

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

புவனகிரி

# ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

# துதிப்பா.

வி. பூதூர், வித்வான்

**கி. வேங்கடசாமி ரெட்டியார்**

இயற்றியது.




விருத்தம்.

ஓங்குதிரைக் கடல்சூழ்ந்த உலகின் மேன்மை
உற்றதமிழ் நாட்டிலொரு வகுப்பினேரே
பாங்குபெற அதிகாரம் செய்த நாளில்
பணவமுதல் பொருளறியா துழந்த நாளில்
தீங்குமலி நாத்திகமும் சேர்ந்த நாளில்
திறல் வெய்யோ னெனப்புவன கிரியிற் றோன்றி
ஆங்கெவரும் மகிழ்ந்திட நன்னெறியே காட்டும்
அழகிய நன்மணவாளர்க் கன்பு செய்வாம். (1)

தொண்டாலும் பேச்சாலும் தோற்றத்தாலும்
தொல்லடியார் குழாம்பெருகச் செய்து நந்தம்
பண்பாய மால்சமயம் ஓங்கும் வண்ணம்
பணிபுரிந்த ஏகாங்கி அடிகளாரைக்

கண்டாலும் கேட்டாலும் நினைத்திட்டாலும்
கசடுறு வாதியர் வயிற்றில் நெருப்பே யென்ன
தண்டாமல் நின்றருளும் தலைமையாரை
தமிழ்நாட்டில் அறியாதார் அறியாதாரே. (2)

அப்பெரியார் இலரேல்நாம் திருமால் தொண்டர்
ஆகாமல் வேறுவிதத் தொண்டராகி
இப்புவியில் அழிந்திருப்போம் உண்மையிந்நாள்
ஏற்றமுற்றோம் பிறர்நம்மை கண்டால் தங்கோள்
செப்பிடவே நாணுகின்றார் இவைதா மெல்லாம்
சிறப்புறு மவ்வடிகளார் தம்மால்ஆகும்
எய்ப்பினில் வைப்பென விளங்கும் அவர்தம் நற்றாள்
ஏற்றுதலே நங்கடமை யாகுமாதோ. (3)

புவனகிரி, ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி
ஸ்வாமிகள் திவ்ய திருவடிகளே சரணம்.

---



புவனகிரி
ஸ்ரீமதித்யாதி அழகிய மணவாள ராமாநுஜ
ஏகாங்கி ஸ்வாமிகள்.

15-4

ஸ்ரீ:

மாறன் மலரடி துணை.

## முன்னுரை.



நம்முடைய பண்டைத்தமிழர் சமயமாகிய ஸ்ரீவைஷ்ண வத்தின் கொள்கைகள் பண்டைத் தமிழ் இலக்கண இலக் கியங்களில் இலைமறை காய்போல் மறைந்து கிடந்த அவற்றை தம்முடைய திவ்யப் பிரபந்தத்தின் மூலமாக வெளிப்படுத்தியவர் நம்மாழ்வார். அந்நெறிகளை உலகத் தில் பரவச்செய்து நிலை நிறுத்தியவர்கள்; நாதமுநிகள், ஆளவந்தார், இராமாநுசர், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர், அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் முதலிய பெரியோர்களாவர். இவர்களுள், பிள்ளை லோகாசாரியர் அருளிச்செய்த 'அஷ்டாதச ரஹஸ்யம்' என்னும், பெயரிய அரியபெரிய நூல் அத்தீதில் நன் னெறியை உள்ளங்கை நெல்லிக்கனி போன்று விளக்கிக் காட்டுவதாகும். இத் தொகை நூலுள் அடங்கிய முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசனபூஷணம் என்ற நூல் களுக்கும், பிள்ளை லோகாசாரியர் திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் அருளிச்செய்த ஆசார்ய ஹ்ருதயம் என்ற அரிய நூலுக்கும், மணவாள மாமுனிகள் அருளிச்செய்த வ்யாக்யானங்கள் குன்றின் மேலிட்ட விளக்காய்த் திகழ்கின்றன. இந்த நூல்களும், வ்யாக்யானங்களும் நம்மைப் போன்றவர்கள் அறிந்து உய்வு பெறுதற்கு அரியனவாயிருக்கின்றன.

ஆதலால், நம்மைப் போன்றவர்களும் அறிந்து உய்வு பெறுவதற்காக, புவனகிரி ஸ்ரீமத் அழகிய மணவாள ஏகாங்கி ஸ்வாமிகள் தமது பேரருளால், உரைநடையிலும், செய்யுள் வடிவிலும் அருளிச்செய்த நூல்கள் பல.

அவற்றுள் ; அர்த்தபஞ்சக ஸாராம்ருதம், நாலாயிரப்ரபந்த விசார ஆபாசதர்ப்பணம், திராவிடவேத வைபவப்ரகாசிகை, ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை, தில்லை திருச்சித்ரகூடக் கலம்பகம், இராமாநுச நான்மணிமாலை முதலிய நூல்கள் சிறந்தவை. இவற்றுள் ; "ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை"யாகிய இந்நூல் ஸ்ரீ வைஷ்ணவ மதக்கொள்கையை வினுவிடை ரூபமாக உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கிக் காட்டுவது. இரண்டு பாகங்களாக அமைந்தது. இவற்றுள் முதல் பாகத்தில் எட்டு இயல்களும், இரண்டாம் பாகத்தில் ஐந்து இயல்களும் அடங்கி இருக்கின்றன. ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஒவ்வொருவரும் கற்று பயன்பெறத் தக்க அரியதொரு நூலாகும் இது.

இந்நூலை பண்ருட்டி ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் சபை அமைச்சரும், இந்நூலாசிரியராகிய ஸ்ரீமத் புவனகிரி அழகிய மணவாள ஏகாங்கி ஸ்வாமிகளின் மாணுக்கருமான, மாளிகைமேடு ஸ்ரீமான் K. நாராயண ரெட்டியார் தமது பெருமுயற்சியால், அன்பர்கள் பலருடைய பொருளுதவியும் கொண்டு அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார்கள். இச்செயல் பெரியார் பலராலும் பாராட்டற்குரியது. இவருக்கு நமது நன்றி உரித்தாகும். இந்நண்பருக்கு இத்தகைய தெய்வத்தமிழ்த் தொண்டினை மேலும் மேலும் செய்துவருமாறு தக்க ஆற்றலை அளிக்குமாறு இறைவனைப் பிரார்த்திக்கின்றேம்.

இங்ஙனம்,

**B. R. புருஷோத்தம நாயடு,**
(ஓய்வுபெற்ற) சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்.
தமிழ்ப் பேராசிரியர், தமிழ்த்துறைப் பகுதி.

அண்ணுமலை நகர்,
15-7-1968.

ஸ்ரீ:

ஸ்ரீமதே சடகோபாய நம:

# பதிப்புரை.



அடியேன் சாமான்யன். அடியேனை ஆட்கொள்வதற்காகவே * 1920-ம் வருஷம் மாளிகை மேட்டிற்கு புவனகிரி, ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள் எழுந்தருளி கடாக்ஷித்தார்கள். அன்று முதலாக ஸ்வாமி காலக்ஷேபம் செய்யும் இடங்களுக்குச் சென்று ஸ்வாமியின் அம்ருத வாக்குக்களைக்கேட்டு ஆனந்திப்பதுண்டு. நாகந்தூர் பஜனை மடம் ஸம்ப்ரோக்ஷணையில் மூன்று மணி காலம் பிராட்டியின் க்ருபையைப்பற்றி ஆனந்தமாக உபன்யஸித்து சபையோரும் ஆனந்தக் கண்ணீர் பெருக ஸ்வாமியும் கண்ணீர் ததும்ப மெய் மறந்து நின்றார்கள். அப்போது அடியேன் உடனிருந்து ஸேவித்தேன். திருக்கோவலூருக்கடுத்த கீழூரில் பகவத் விஷய காலக்ஷபம் பலமாதங்கள் நடந்து சாத்துமுறை நடக்கும்போது காலக்ஷேபம் கேட்ட பாகவதர்களோடு அடியேனும் கூடியிருந்து அநுபவித்தேன். திருப்பாதிரிப்

---

* வித்வான் ஸ்ரீ கோ, சுந்தரராமாநுஜ ஸ்வாமிகள் 1956-ம் வருஷம் எழுதி பதிப்பித்த, ''புவனகிரி, ஸ்ரீமத், அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள் சரித்திரம்'' என்ற நூலில் 59, 60-ம் பக்கங்களில் அடியேனை ஸ்வாமி கடாக்ஷித்தமை எழுதியிள்ளார்.

புலியூர் பெருமாள் சந்நிதியில் "ஸமாச்ரயணம் ஸர்வாதிகாரம்" என்ற விஷயத்தை சாஸ்த்ர முறைப்படி தர்க்கித்து திருவஹீந்திரபுரம் ஸ்ரீ பாஷ்யமைய்யங்காரை வென்று நிலை நாட்டிய காலத்தில் அடியேன் உடனிருந்து அநுபவித்தேன்.

அடியேனை ஸ்வாமி செல்லமாகப் பாராட்டினார்கள். ஸ்வாமியை அடியேன் கேட்ட கேள்விகளும் அவைகளுக்கு அருளிய பதில்களும் சில ஆண்டுகள் சென்று ஸ்வாமியின் ஏற்றம் உணர்ந்த பின்னர் அடியேற்கு அன்பும் அச்சமும் உண்டாயிற்று. இவ்விஷயத்தை திருநெல்வேலியிலிருந்து மாதப்பத்திரிகையாக வந்துகொண்டிருந்த "ஸ்ரீ வைஷ்ணவன்" 1929-ம் வருஷம் பிப்ரவரி, மார்ச்சி மாதமாகிய தொகுதி 4 பகுதி 4-ல் "அன்பு வெள்ளம்" என்ற கட்டுரையில் விளக்கி எழுதினேன்.

1927-ம் வருஷம் ஸ்வாமி திருமேனி நலனிழந்து ஸ்ரீபெரும்பூதூரில் எழுந்தருளியிருக்கும்போது, எம்பெருமானார் உத்ஸவத்தையும் அநுசரித்து ஸ்வாமியை சேவிக்கச் சென்றிருந்தேன். அப்போது அடியேனிடம் "ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை" இரண்டாம் பாகம் கொடுத்து 'பன்ருட்டியிலிருக்கும் தமிழ்ப்பண்டிதர் கோ. சுந்தரராமாநுஜத்திடம் கொடுத்து அச்சிடச்சொல்' என்று, பணித்தார்கள். அங்ஙனமே எனது ஆசிரியர் அவர்களிடம் கொடுத்து விண்ணப்பித்தேன். அந்நூலை அடியேன் ஒரு படி எடுத்துக்கொண்டேன். அவ்வருடமே வைகாசி மாதக் கடைசியில் ஸ்வாமி திருநாடலங்கரித்துவிட்டார்கள்.

எனது ஆசிரிய ஸ்வாமிகள் 1959-ம் வருஷம் திருநாட் லங்கரித்துவிட்டார்கள். இடைநின்ற 32 ஆண்டுகள் அச்சிடப்படாமல் இருந்ததோடுகூட பின்னரும் 9 வருஷங் கள் கடந்துவிட்டன. கீரப்பாளையம் எனது ஆசிரியஸ்வாமி கைப்பிரதியும் கிடைக்கவில்லை. அடியேன் படியெடுத்து வைத்திருந்த ஒன்றைக்கொண்டே பதிப்பிக்க முயன்றேன். பொருளாதாரக் குறைவுடையேனுதலால், பலருடைய உதவியை நாடமுயன்றபோது இயற்கையில் உள்ள நாணத் தோடு "ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு, இரவின் இளி வந்தது இல்." (இயற்கையில் தெய்வீகத்தன்மை யுள்ள பசுவிற்கும் எளிதாகக் கிடைக்கிற நீர் வேண்டும் என்று அறம் நோக்கி இரந்து கேட்டாலும் அந்த இரத் தலைவிட நாவிற்கு இழிவானது மற்றொன்று இல்லை.) என்ற திருக்குறளும் துணை நின்று தடுத்துவிட்டது.

எனினும், இப்பணி செய்யவேண்டும் என்ற ஆவலால் "அன்பர்க்கு அரிய விண்ணப்பம்" என்ற பத்திரிகை அச்சிட்டு வழங்கினேன். கண்ணுற்ற சில அன்பர்கள தாமதிக்காமல் அன்போடு பொருள் வழங்கினுர்கள். மற்றும் குறைபடும் தொகையை அடியேன் ஏற்று அச் சிடத்துணிந்தேன். இரண்டு பாகமும் சேர்த்து அச் சிட்டால்தான் படிப்பவர்க்குப் பயன்தரும் என்று கருதி அச்சிடப்பட்டது. இந்நற்பணிக்கு பேருதவியாக இருந்து அடியேன் விருப்பத்திற்காக முன்னுரை எழுதித்தந்தவரும், அண்ணுமலை நகர் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரி யராயிருப்பவரும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராயிருந்து ஓய்வு பெற்றவரும், "திருவாய்

மொழி—பகவத் விஷயம்'' தமிழாக்கம் செய்து பத்து வால்யங்கள் வெளியிட்டவரும், "ஆசார்ய ஹ்ருதயம்—மணவாளமாமுனிகள் வ்யாக்யானம்'' தமிழாக்கம் செய்து இரண்டு வால்யங்களாக வெளியிட்டவரும், "ஸ்ரீ வசன பூஷணம்—மணவாளமாமுனிகள் வ்யாக்யானம்'' தமிழாக்கம் செய்து வைத்திருப்பவரும், புவனகிரி, ஸ்ரீமத். ஏகாங்கி ஸ்வாமிகளின் பூர்வாச்ரம திருத்தம்பியாரின் திருக்குமாரரும், அடியேனது நீண்ட நாள் ஆப்த நண்பரும் ஆய ஸ்ரீமான். வித்வான் B. R. புருஷோத்தம நாயடு அவர்கள் பேருதவிக்கு தலையல்லாற் கைம்மாறிலேன். இந்நூல் அச்சிட பொருள் வழங்கிய வள்ளலார்க்கு நன்றியுடையேன். இந்நூலை அழகாக அச்சிட்டு உதவிய சென்னை, 'ரத்னம் பிரஸ்'காரர் அனைவருக்கும் மிக்க நன்றியுடையேன். இந்நூலை அச்சிடுமுகத்தானே அடியேனைப் பொருட்படுத்திக்கொண்ட எம்பெருமானுக்கும், ஏகாங்கி ஸ்வாமிகட்கும் என்றும் வணக்கத்துடன் தொண்டு பட்டவனுவேன.

இங்ஙனம்,

சரமாவதி தாசன்,

**K. நாராயண ரெட்டி,**

மாளிகை மேடு.

(Via) பண்ணுருட்டி, S. A. Dt.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

புவனகிரி,

# ஸ்ரீமத். அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

திவ்ய சரித்திர சுருக்கம்.

நம் பாரத நாடு செய்த புண்ணியத்தினால் திகழும் நம் செந்தமிழ் நாட்டில், திவ்ய தேசங்களாகிய சித்திர கூடத்திற்கும் (சிதம்பரம்) ஸ்ரீமுஷ்ணத்திற்கும் இடையில் ஒரு சிறந்த திவ்ய தேச முண்டு. அதுதான் புவனகிரி என்ற பட்டணம். அத்திவ்ய தேசத்தில் திருவவதாரம் செய்து உலகை வாழ்விக்க வந்த பெரியார் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள். அவர் தம் பிள்ளைத்திருநாமம் அரங்கசாமி என்பதாகும். அவரைப் புத்திரனாகப் பெறும் பாக்கியம் கஸ்தூரி சின்னய்ய நாயுடு அவர்களுக்கு வாய்த்தது. இவருக்குப் பின் தோன்றலாக இராஜகோபால் என்பவரும், தங்கைமார்கள் மூவரும், சிறந்து விளங்கினார்கள். நம் ஸ்வாமிகள் இளமையிலேயே தமிழ், தெலுங்கு மொழிகளில் புலமை யடைந்தார்கள். கருவிலே திருவுடையரா யிருத்தலினால், திருக்கோவலூர் எம்பெருமானார் ஜீயர் மடாதிபதியிடம் சமாச்ரயணம் செய்துகொண்டார்கள். ஜீவனோபாயத்துக்குச் சிறந்த தொழிலான உழவும் வாணிபமும் மேற்கொண்டார்கள். கீரப்பாளையம் சேஷம்மாளை இல்லறக்கிழத்தியாகப்பெற்று நல்லறம் நடத்திவந்தார்கள்.

மக்களை வாழ்விக்க புவனகிரிக்கு எழுந்தருளிய புதுவை. விலக்ஷணகவி. ஸ்ரீமத். ஏ. வே. இராமாநுஜ

நாவலர் ஸ்வாமிகளிடம் தமிழ் இலக்கிய இலக்கணம பயின்ருர். நாவலர் ஸ்வாமிகளால் இடப்பட்ட திருநாமம் " **அழகிய மணவாள தாஸர்.**" அத்திருநாமமே ஸ்வாமி களது ஜீவித காலம் வரை நிலேத்து விளங்கியது. உலகா நுபவம் பெறவேண்டி, ஸ்வாமிகள் சுற்றிப்பார்க்கத்தொடங் கினுர். அப்போது சைவப் பெருமக்கள் தங்கள் செல் வத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்தி வைணவத்துக் குப்பெரிதும் இடையூறு செய்வதைக்கண்டார். அதனேக் கண்டிப்பான் வேண்டி "கடாவிடைச் சாட்டை" என்ற ஒரு நூல் வெளியிட்டார்கள். இவர் முன்னின்று வாதிட முடியாத அச்சமயத்தினர் வசைச்செய்யுள் ஸ்வாமிகள் மீது பாடினுர்கள்.

ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை மக்களுக்குப் போதித்து நல்லுணர்வு உண்டாக்கவேண்டும் என்ற திருவுள்ளம் கொண்டு கதா காலக்ஷேபம் செய்யத்தொடங்கினுர்கள். கீர்த்தனே வடிவில் தாமே இயற்றிய விப்ரநாராயண சரித் திரம், பேரன்கூரத்தாழ்வான் சரித்திரம், உருக்குமாங்கத சரித்திரம், பிரகலாத சரித்திரம் முதலியவைகளேக் கதா காலக்ஷேபம் நடத்தினுர்கள். சில காலத்துக்குப்பின்னர் வில்லிபுத்தூராழ்வார் பாரதம், கம்பராமாயணம், பாகவதம் முதலிய காவ்ய நூல்களேக் கையேடு படிப்பவர் துணே கொண்டு காவ்யப் பிரஸங்கம் செய்தார்கள். இதனேக் கேட்டு மகிழ்ந்த புவனகிரி சப்மாஜிஸ்ரேட் தாமோதர நாயுடு ஸ்வாமிகளுக்குப் பொருளுதவி செய்ய எண்ணி னுர்கள். அதனேப் பெற மனமில்லாத ஸ்வாமிகள், 'புவன கிரியில் கோயில் கொண்டுள்ள பட்டாபிராமனுக்குத் திருவாராதனே என்றும் நடைபெற ஏற்பாடு செய்க என்று

தெரிவித்தார்கள். ஸ்வாமி திருவுள்ளம் உகக்க இரண்டு ஏக்கர் நஞ்சை நிலமும், தோப்பும், குட்டையும் சந்நதி பெயரால் பட்டா செய்து கொடுத்தார்கள். அப்பட்டாபி ராமன்மீது ஸ்வாமிகள் ஒரு பதிகமும் பாடியுள்ளார்கள்.

ஸ்ரீ வைஷ்ணவ ரஹஸ்யக்ரந்தங்கள் ஆசார்யர்களி டத்துக் கேட்டு தாமும் வாழ்ந்து மக்களையும் வாழ்விக்க வேண்டு மென்ற அவாவினுல், ஸ்ரீமத் மணவாள மாமுனி கள் திருவடி ரேகாசமர் என்று கீர்த்திவாய்ந்த ஸ்ரீமத் வானமாமலை மடத்து ஜீயர் இருபத்து மூன்ருவது பட்டம் ஸ்ரீமத் சடகோப ராமானுஜ ஜீயர் ஸ்வாமிகள் திருவடி களில், ஆச்ரயித்தார்கள். ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர் ஸ்வாமிகள் திருவடி சம்பந்தியான அமரவாதிச் சீமான் திருவேங்கடாசார்யர் ஸ்வாமிகள் பால் ஸ்ரீ வைஷ்ணவ ரஹஸ்ய க்ரந்தங்களும், வடமொழி இலக்கிய இலக்கணங் களும் காலக்ஷேபம் கேட்டார்கள். இவ்விதமாக ஆசார்யர் களின் அநுக்ரஹத்தாலே ரஹஸ்ய க்ரந்தங்களும், பகவத் விஷயமும் நாட்டில் பல பேர்களுக்குச் சொல்லி வைண வத்தில் மக்களுக்கு ஊற்றம் உண்டாக்கிஞர்கள். இதனை கேள்வியுற்ற வானமாமலை ஸ்ரீமத் சின்ன கலியன் ராமா நுஜ ஜீயர் ஸ்வாமிகள் ; ஏகாங்கி ஸ்வாமிகளை வானமா மலைக்கு வரச்செய்து பகவத்விஷயம் சொல்ல ஆஜ்ஞா பித்து கேட்டு ஆனந்தித்தார்கள். திருவரங்கம் முதலான திவ்ய தேசத்திருவிழாக்கள் தோறும் எழுந்தருளி ஸ்ரீ வைஷ் ணவ ரஹஸ்ய தத்துவங்களைப் பொதுமக்கள் நன்கு புரிந்து கொள்ளுமாறு பிரஸங்கம் செய்து மகிழ்வித்தார்கள். அங் ஙனம் கேட்ட கள்ளக்குறிச்சி, திருக்கோவலூர், நல்லாண் பிள்ளை பெற்ருள், நாகலாம்பட்டு, பாஞ்சாலம், தேசூர், வந்தவாசி, ஏந்தூர் முதலான கிராமவாசிகள் தங்கள்

தங்கள் கிராமங்களுக்கு ஸ்வாமிகளை அழைத்துச் சென்று சம்ப்ரதாய க்ரந்தங்களைக் கேட்டார்கள். உஜ்ஜீவனத்தை அடைந்தார்கள்.

நம் ஏகாங்கி ஸ்வாமிகள் திவமென்னும் வாழ்வுக்கு வழிகாட்டும் ஆசிரியராய்ப் பொலிவதைக் கண்ட சிலர் சிஷ்யராக இருக்க எண்ணினார்கள். அப்போது கள்ளக் குறிச்சி திருக்குலத்தவர் திரு நாராயண தாஸர் சமாச்ரயணம் செய்துகொள்ள விரும்பியபடி திருக்கோவலூர் ஜீயர் ஸ்வாமிகள் அநுமதிபெற்று ஜீயர் ஸ்வாமிகள் தந்த சமாச்ரயணக் கோல்கொண்டு திருநாராயண தாசருக்குச் சமாச்ரயணம் செய்து திருமந்த்ரம் உபதேசித்து ஆசார்ய ஸ்தானம் வகித்தார்கள். பின்னர், இத்தொண்டுக்கு இல்லறத்தில் பல தொல்லைகள் இருத்தலை நினைந்து, இதனைவிட்டு விலக முடிவு செய்துவிட்டார்கள். பந்துக்கள் யாருக்கும் தெரியாமலே ஸ்ரீபெரும்பூதூரில் மடம் அமைத்துக்கொண்டுள்ள நத்தப்பட்டைச் சார்ந்த குருவினத்தம் கிராமத்தில் பிறந்த தூயதுறவியான ஸ்ரீமத் பாலகிருஷ்ண ஏகாங்கி ஸ்வாமிகளிடத்தில் காஷாயம் ஏற்று துறவியானார்கள். பின்னர் வைஷ்ணவ வேஷ தாரிகளைத் திருத்துவான் புகுந்து பல ஊர்களுக்குச் சென்றார்கள். அப்போது மைசூர், கோலாரைச் சார்ந்த மாரிகுப்பத்தில், திருக்குலத்தடியார் பலருக்கு தஞ்சை ராஜகோபால் என்பவர் தன்னை கிருஷ்ணவதாரம் என்று சொல்லிக்கொண்டு விபரீத ஆசாரம் போதித்து கெடுப்பதைக் கேள்வியுற்று, அவரைப் பலவகையில் திருத்த முயன்று பயன்படாமையால், சாஸ்த்ர பலத்தாலும் மக்கள் பலத்தாலும் விரட்டித் துறத்திவிட்டு, அவ்வூராருக்கு சதா சாரத்தைப் போதித்து நன்னிலைப்படுத்தினார்கள்

ஆழ்வார் திருநகருக்கு எழுந்தருளி வைகாசி விசாகோத்ஸ வத்துக்கு பாகவதர்கள் தங்குவதற்கும் காலக்ஷேபம் கேட்பதற்கும் ஓர் இடம் இல்லாமை கண்டு கட்டடம் ஒன்று ஏற்பாடு செய்துமுடித்தார்கள். பின்னரே உத்தர தேசம், மலைநாடு, தமிழ்நாடு திவ்யதேச யாத்ரை தொடர்ச்சியாகச் செய்து ஆங்காங்குள்ள எம்பெருமான் களை மங்களா சாசனம் செய்தார்கள். படிக்கும் வயதி லேயே மாணவர்களுக்கு வைஷ்ணவ சமய உணர்ச்சி வளருமாறு கல்வி போதிக்கவேண்டுமென்ற எண்ணங் கொண்ட ஸ்வாமிகள் பல பெரியோர்களின் பொருளுதவி கொண்டு ஸ்ரீரங்கத்திலேயே "ஸ்ரீ ராமாநுஜ தர்சன வித்யா சாலை" என்ற பள்ளிக்கூடம் தொடங்கினார்கள். சிறிது காலத்துக்குப் பிறகு அதன் வளர்ச்சியை முன் னிட்டு திருச்சித்ரக்கூடம் (சிதம்பரம்) மாற்றி ஸ்ரீமான் மரவாடி இராமாநுஜ ஸ்வாமிகளால் நிர்வாஹம் செய்யப் பட்டது. அதன் கிளைக்கலாசாலையாக 'வரவரமுனி பாடசாலை' என்றும் மற்றொன்று தோன்றியது. அந்த வித்யாசாலையில் படித்தவர்கள்தான் சென்னை யூனிவர் ஸிடியில் லெக்சரராக யிருந்த வித்வான் ஸ்ரீ. வே. வேங்கடராஜுலு ரெட்டியாரும், வித்வான். ஸ்ரீ. B. R. புருஷோத்தம நாயுடுவும், அண்ணாமலை யூனிவர் ஸிடியில் தமிழாசிரியராயிருந்த ஆ. பூவராகம் பிள்ளை முதலான வர்கள். அக்கலாசாலையில் ஆசிரியராக இருந்தவர்தான் கீரப்பாளையம், வித்வான் ஸ்ரீ. கோ. சுந்தரராமாநுஜ ஸ்வாமிகள்.

நம் தென்னாட்டு ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயம் வேளாளர் குலத்துதித்த ஸ்ரீமத் நம்மாழ்வாரைப் பிரத மாசார்யராகக் கொண்டு அநுஷ்டிக்கப்படுகின்ற பெருமை

யுடையதாக இருந்தும், ஒவ்வோர்காலத்தே ஒவ்வொருவர் வர்ணதர்மம், ஜாதிகர்வம் தலையெடுத்தவர்களாய்த் தங்கள் குலத்தையே உயர்வுபடுத்திப் பேசுவதும் தங்களுக்கே சில நூல்கள் உரிமையுடையதென்று எழுதுவதும் செய்கிறார்கள். அங்நிலையிலே 1918-ம் வருஷம் "தத்வத்ரய வ்யாக்யான தாத்பர்ய தீபிகை" என்ற நூல் ஸ்ரீரங்கம் நாராயண ஜீயரால் எழுதப்பட்டு வெளிவந்தது. அந்நூலில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய கருத்துக்களுக்கு மாறுபாடா இருக்கக் கண்ட நம் ஸ்வாமிகள். பிரஸங்க வாயிலாக அதனைக் கண்டித்தார்கள். பின்னர் "தத்வத்ரய வ்யாக்யான தாத்பர்ய தீபிகா விசாரம்" என்ற நூல் முகமாகவும் கண்டித்தார்கள். இன்ன பிற கருத்துடைய அவ்வினத்து மக்களையும், திருத்துவான் விரும்பி உலகம் உண்மை உணருமாறு "ஸமாச்ரயணம் ஸர்வாதிகாரம்" என்று உபன்யஸிக்கத் தொடங்கினார்கள். இவ்வுபன்யாஸம் கேட்ட சில வடவாரியர்கள் தென்னாரியர்களையே இவரோடு வாதிக்கவிடவேண்டுமென்று திருவஹீந்திரபுரம் ஸ்ரீமத் உ. வே. பாஷ்யமையங்கார் ஸ்வாமியை வாதிப்பதற்கு முன்னிற்குமாறு கேட்டுக்கொண்டார்கள். வாது செய்யும் புலமை யுடையவருமாவர். தகுதியுடையவர் தர்க்கிப்பதற்கு வந்துள்ளார் என்று அறிந்த ஏகாங்கி ஸ்வாமிகள் உத்ஸாகத்தோடு திருப்பாதிரிப்புலியூர் பெருமாள் சந்நதியில் பல பெரியோர்கள் புடைசூழ இருவரும் ரௌத்ரிஹு மாசிமீ 12-ம் தேதி எடுத்துக் கொண்ட விஷயத்தை தக்கமுறையில் விவாதித்தார்கள். கேட்டுக்கொண்டிருந்த பெருமக்கள் சாஸ்த்ர சர்ச்சையின் ரஸாநுபவத்தைப் பருகி ஏகாங்கி ஸ்வாமிகளுக்கு இவ்வளவு திறமையிருக்கின்றதே என்று ஆச்சரியப்பட்

டார்கள். முடிவு ஏகாங்கி ஸ்வாமிகள் பக்கமே வெற்றி யடைந்தது. எல்லா மக்களும் இதனையறியுமாறு "ஸமாச்ரயணம் ஸர்வாதிகார விஜயசக்ரம்" என்ற நூல் வெளியிடப்பட்டது. பின்னரும் 1922-ல் "ஸமாச்ரயணம் ஸர்வாதிகாரமென்னும் விஜயசக்ர பாஞ்சஜன்ய கோஷ பஞ்சனி" என்னும் நூலும் வெளியிடப்பட்டது. இத் தத்துவம் உணர்ந்தபின்னர் விருத்தாசலம் கண்ணபிரான், வரதராமாநுஜம், சுதர்சன ராமாநுஜம், பூவனூர் செல்வ நாராயண தாஸர், கௌரவப்பாளையம் பாகவதர்கள் அனைவரும் ஸ்வாமிகளிடம் சமாச்ரயணம் செய்துகொண்டு திருமந்த்ரோபதேசமும் பெற்றனர்கள். ஸ்வாமிகளிடம் சமாச்ரயணம் செய்துகொண்ட பிரதம சிஷ்யரான மஞ்சகுப்பம் கோவிந்தராமாநுஜ ஸ்வாமிகளைக் கொண்டு அநேகம் பேருக்கு சமாச்ரயணம் செய்வித்ததோடு மஞ்சகுப்பம் இராமச்சந்த்ர முதலியார், B.A., அவர்கள் வடகலையாயிருந்தும் தாமும் தம்மைச் சேர்ந்த முப்பது வடகலையார்களும் சமாச்ரயணம் செய்துகொண்டு தென்னுசார்ய ஸம்ப்ரதாயத்தை ஏற்று வாழ்வு பெற்றனர்கள்.

புன்சமயங்களிலே இருந்து வீணே அழிகின்றனர்களே என்ற கருணையால், சைவர்களாயிருந்த நல்லான் பிள்ளை பெற்றுள் ஊர் வாசிகளை மோக்ஷத்தை எளிதே தரத்தக்க தென்கலை வைஷ்ணவர்களாக்கி புத்ர பௌத்ரர்களோடு வாழ்வுபெறச் செய்தார்கள். க்ரந்த காலக்ஷேபங்களும் கேட்க வைத்தார்கள். இயற்கையிலேயே வைணவத்தில் பகையுள்ளங்கொண்ட பாம்பன் குமரகுரு தாஸர் நாலாயிர திவ்யப்பிரபந்த பாசுரங்களுக்கு மாறுபட்ட அர்த்தங்கள் செய்து வைணவர் மனம் புண்படுமாறு "நாலாயிரப் பிரபந்த விசாரம்" என்ற புத்தகம் வெளியிட்டார். அப்

புத்தகத்துக்கு மறுப்பாக அதனை எழுதினவரும் படிப்பவரும் உண்மையுணருமாறு தக்கமுறையில் விளக்கமாக 1908-ஆம் ஆண்டு "நாலாயிரப் பிரபந்த விசார ஆபாச தர்ப்பணம்" என்ற நூல் எழுதி வெளியிட்டார்கள். கிடைப்பதருமை. மறு பதிப்பு தேவை. அதற்கு முன்னரே 1906-ம் வருடம் அருளிச்செயலின் சீர்மை தெரியுமாறு "திராவிடவேத வைபவப் பிரகாசிகை" என்ற சிறந்த நூல் பிரஸுரித்தார்கள். ஸ்வாமி முதுமைப் பருவத்தில் தள்ளாடிக் கொண்டிருத்தலால், நம்மி ராமானுசன் திருவவதரித்ததாயும் நம் ஸ்வாமி துறவு மேற்கொண்டதாயும் இருக்கின்ற திவ்யதேசமான ஸ்ரீபெரும்பூதூரிலேயே எழுந்தருளியிருக்கச் செய்தல் நலமென்று எண்ணிய சிஷ்யர்கள், 1926-ம் வருஷம் ஒரு கட்டடம் வாங்கி "மணவாள மாமுனிகள் மடம்" என்ற பெயரமைத்து அங்கேயே எழுந்தருளுமாறு செய்தார்கள். அங்ஙனமே சிஷ்யப்ரசிஷ்யர்களோடு காலக்ஷேபம் சாதித்துக்கொண்டு இருந்தார்கள். மஹான்களைப் பேரானந்தத்தோடு எதிர்கொண்டழைக்கின்ற பரமபதநாதன் ஸ்வாமிகளுடைய குணாநுபவத்தை நித்யசூரிகளும் தானும் கண்டுகளிக்கத் திருவுள்ளங்கொண்டான். பிரபவஷு வைகாசிமீ 28உ (10—6—1927) வெள்ளிக்கிழமை இரவு 4 மணிக்கு பிரம்ம முகூர்த்தம் பூர்வபக்ஷம் ஏகாதசியில் தன் திருவடியில் சேர்த்துக்கொண்டான். 10—6—1927 சனிக்கிழமை காலையில் வானமாமலை மடத்து இருபத்தைந்தாவது பட்டம் பரமஹம்ச பரிவ்ராஜகா சார்ய ஸ்ரீமத் சின்ன கலியன் ஜீயர் ஸ்வாமி சென்னையிலிருந்து ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருளினபோது ஏகாங்கி ஸ்வாமிகள் திருநாடலங்கரித்தமை கேள்வியுற்று எழுந்தருளி

ஏகாங்கி ஸ்வாமிகளைக் கடாக்ஷித்து தம்பரிகரங்களையும் அனுப்பிவைத்தார்கள்.

ஸ்ரீபெரும்பூதூர் உத்தராதி மடம் என்று சொல்லப் படுகின்ற மடாதிபதி ஸ்ரீ லக்ஷ்மீப்ரபந்ந ஸ்வாமிகள் நந்த வனத்தில் அந்த ஸ்வாமி உவகையுடன் ஏற்றுக்கொண்ட ப்ரகாரம் முறையோடு ஸ்வாமிகளைத் திருப்பள்ளிப் படுத்தினார்கள். அதனை இன்றளவும் சிஷ்யர்களும் பாகவ தர்களும் சேவை செய்துகொண்டு வருகிறார்கள். ஸ்வாமி திருவவதாரம் செய்த புவனகிரி என்ற திவ்ய தேசத்தில் ஸ்வாமி மங்களாசாசனம் செய்த பட்டாபி ராமன் சன்னதி முன் மண்டபத்தை ஸ்வாமியின் ஏகபுத்ரி யான எதிராஜவல்லியை மணந்தவரும், சிஷ்யருமான கீரப்பாளையம், வித்வான் கோ. சுந்தரராமாநுஜ ஸ்வாமிகள் கருங்கற்களால் கைங்கர்ய ரூபமாகக் கட்டிமுடித்தார்கள். அதற்குத் தாரண ஹூ கார்த்திகைமீ 19உ (4-12-1944) திங்கட்கிழமை மகா ஸம்ப்ரோக்ஷணம் செய்யப்பட்டது. அம்மண்டபத்திலே ஏகாங்கி ஸ்வாமிகள் வழக்கமாக எழுந்தருளும் இடத்திலே கோயில் கட்டி 20—1—1945-ல் ஸ்வாமிகளின் அர்ச்சாமூர்த்தி பிரதிஷ்டை செய்யப் பட்டது. திருவாராதனம் நடந்துகொண்டு வருகிறது. ஸ்ரீரங்கத்தில் திருமஞ்சன காவேரி கண்ணன் மண்ட பத்தில் ஸ்வாமிகளின் அர்ச்சாரூபம் உலோகத்தால் அமைத்து திருவாராதனையில் இருக்கிறது. கள்ளக்குறிச்சி ஸ்ரீமான் கேசவ ராமாநுஜம் அவர்கள் ஸ்ரீரங்கத்தில் அடையவளைந்தான் வீதியில் ஓர் மடம் கட்டி 'அழகிய மணவாளன் மடம்' என்று பெயர் வைத்து ஏகாங்கி ஸ்வாமிகளின் திருவுருப்படம் திருவாராதனையில் வைக்கப் பட்டிருக்கிறது. பண்ணுருட்டி ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர்

ஸ்வாமிகள் சபையில் "அழகிய மணவாளன் வாசகசாலை" என்று ஸ்வாமிகள் பெயரால் நிறுவப்பட்டுள்ளது.

ஸ்ரீ பெரும்பூதூர் எனது நண்பர் ஸ்ரீமான் கோபால் என்பவர் ஸ்வாமிகள்மீது "அழகிய மணவாளன் மாலை" 'அழகிய மணவாளன் அந்தாதி' என்று இரண்டு நூல்கள் பாடினர். வி. பூதூர் வித்வான் எனது அன்பர் கி. வேங்கடசாமி ரெட்டியார் மூன்று துதிப்பாக்களால் தோத்தரித்தார். மயிலை வித்வான் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் ஸ்வாமிகளைப்பற்றி ஒரு பதிகம் பாடி அச்சிட்டு எல்லார்க்கும் உதவினர்கள். ஸ்வாமிகட்கு தனியன் வாழித்திருநாமம் நாள்பாட்டு எல்லாம் ஏற்பட்டு ஆசார்ய லக்ஷண பூர்த்தி அமைந்திருக்கிறது. ஸ்வாமிகளின் வைபவம் விரிவாய்த் தெரிந்துகொள்ள விரும்புவோர் கீரப்பாளையம் வித்வான் கோ. சுந்தரராமாநுஜ ஸ்வாமிகள் எழுதி 1956-ம் வருடம் கள்ளக்குறிச்சி ஸ்ரீமான் கேசவுலு நாயுடுகாரு பதிப்பித்த "ஸ்ரீமத் புவனகிரி அழகியமணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள் சரித்திரம்" என்ற நூல் பெற்று, வாசித்துத் தெரிந்துகொள்க. தமிழர் தந்தையான திரு. வி. க. எழுதிய அவர்தம் "வாழ்க்கைக் குறிப்பு" என்ற நூலில், 785-வது பக்கம் "ஸம்ஸ்காரம்" என்ற தலைப்பில் நம் ஏகாங்கி ஸ்வாமிகள் "வைணவ சீர்திருத்த வாதி" என்று குறிப்பிடுகின்றதையும் காண்க.

இங்ஙனம்,
சரமாவதி தாஸன்,
**K. நாராயண ரெட்டி,**
மாளிகைமேடு, P. O.,
(Via) பண்ணுருட்டி, S. A. Dt.

---

ஸ்ரீ:

# "ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை"

## இரண்டு பாகத்தின் உள்ளுறை பொருள்.

---

முதற்பாகம்

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சூ சி கை .



நலம் பல நிறைந்த நிலமிசை நிலவும் சமயங்கள் பல வற்றுள் பரம வைதிகமாகிய வைணவமே சிறந்த சமயமாம். சீர்மிகுந்த இச்சமயத்து வசன நடையி லமைந்துள சம்ப்ரதாய நூல்கள் அனைத்தும் பிறசமய நூல் போலாது தமிழும் சம்ஸ்க்ருதமும் கலந்த மணிப்ரவாள நடையிலமைந்துள்ளன. அவை இருப்புக்கடலைபோன்று கொள்ளுதற்கு அருமையாயிருத்தலின் பயில்வாரும் பார்ப் பாரும் அரியராய் எம்போலியர்க்கு முழுப்பயனளியாவா யின. அவற்றுள்ளும் அனைவரும் அவசியம் தெரிந்து கொள்ளவேண்டிய ஒழுக்கங்கள் பலவும் ஒரு தொடர்பாகக் கூறப்பட்டில.

ஆகவே, வைணவ ஒழுக்க முறைகளைத் தெளிவாக ஒரே நூலிற் காண விரும்பிய அன்பர் பலர் வேண்டுகோட் கிணங்கி அரிய நூல்கள் பல அருளிச் செய்தவரும், பன் மொழித் தேர்ச்சியும், சம்ப்ரதாய உணர்ச்சியும், அநுபவ முதிர்ச்சியும், ஒருங்கே அமைந்தவருமாகிய, ஸ்ரீமதித்யாதி, பு. அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள் வைணவ லௌகிக வைதிகராய இருபாலார்க்கும் ஏற்ப, முன்னோர் மொழிக்கிணங்க “ சரீரம் சரீரத்தை யிடமாகக் கொண்ட ஆத்மா இவ்விரண்டையும் நடத்துபவனான ஈச்வரன் ஆகிய தத்வம் மூன்றினோடு, வைணவரிலக் கணம், காலைக்கடன், நீராடல், திருமண்காப்பு, திருவாரா

தனம், திவ்யப்பிரபந்தம் சேவிக்கும் முறை, காலம், வைணவ மாதரொழுக்கம், பகவதாலயதரிசன விதி'' முதலிய வற்றை எளிதில் யாவரும் அறிந்துகொள்ளும்படி வினு விடையாக சுருங்கச் செய்து மனவிருளோட்டி அறிவுண் டாக்கவல்லதாதலின் '' ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை '' என்னும் மகுடஞ்சூட்டி உலகுக்கு உபகரித்தருளினர்.

இத்தகைய நூல் இதுவரையில் வெளிவந்திலது. இது ஸ்ரீ வைஷ்ணவ தீபிகையின் முதல் பாகம்; இரண்டாம் பாகம் இந்நூலிற் கூறிய விஷயங்களுட் சிலவற்றை விரித்தும், கூறப்படாத விஷயங்கள் பலவற்றைச் சேர்த்தும், * விரைவில் வெளியிடப்பெறும்.

இந்நூலியற்றுதற்குத் தூண்டுகோலாயிருந்து, அச் சேற்றியாண்டும் உலவுமாறு செய்துதவிய ஸ்ரீமான் களான திருவருணை மாநகர் ஆயுர்வேத வைத்தியர், அ. வேங்கடாசல முதலியாரவர்கள், இரும்புக்கடை இராம ஸ்வாமி நாயுடுகாரு, ஆகிய இவர்களது நன்றி என்றும் பாராட்டற்பாலதேயாம்.

இங்ஙனம்,

ஸ்ரீமதித்யாதி, பு. அ. ம. ரா. ஏகாங்கி ஸ்வாமிகள்,
மாணவ கழகத்துள் ஒருவனுன,

கீரப்பாளையம், கோ. சுந்தரராமாநுஜதாசன்.

---

* நாற்பத்தோராண்டுகள் கடந்துவிட்டன. (1968)

ஸ்ரீ:

    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை.

## முதற்பாகம்.

காப்பு

சீர்பூத்த வைணவமாந் தீபிகையைச் செப்புதற்கு
வேர்பூத்த பூம்பொகுட்டில் வீற்றிருக்கும்-நீர்பூத்த
காரிமகிழ் மாறனடி நற்றமிழாம் நாயஞ்சொல்
காரிமகிழ் மாறனடி காப்பு. (ஆம்நாயம் வேதம்.)

## I. சித்தியல்.

1. *உலகின்கண் சிறந்த சமயம் எது?* 1

வைஷ்ணவமே யாம்.

2. *வைஷ்ணவ சமயத்தில் தத்துவங்க ளெத்தனை?* 2

வேதாந்தங்களிற் சொல்லப்படும், சித்து, அசித்து, ஈசுவரன் என்னும் மூன்ருகும்.

3. *சித்தென்பது யாது?* 3

ஞானுதாரமான ஆத்மவஸ்துவாம்.

4. *ஆத்மா எப்படி யிருக்கும்?* 4

தேகம், இந்திரியம், மனம், ப்ராணன், ஞானம் ஆகிய இவற்றில் வேறுபட்டதாய், தனக்குத்தானே ப்ரகாசமாய், ஆனந்தவுருவாய், நித்தியமாய், அணுவாய், ஐம்பொறிகளாலறியப்படாததாய், இன்னபொருளைப் போன்றதென எண்ணப்படாததாய், அவயவமில்லாததாய், அசித்தைப்போல உண்டாதல், பிறத்தல், வளர்தல், பருத்தல், குறைதல், அழிதல், என்னும் ஆறுவித விகாரமில்லாததாய், ஞானத்துக்கு இருப்பிடமாய், ஈசுவரனுலே ஏவத்தக்கதாய், அத்தற்பரனுடைய சொரூப சங்கற்பங்களாலே தரிக்கப்பட்டதாய், அவனுக்கு * சேஷமாயிருக்கும்.

தேகாதிகளில் வேறுபட்டதாவது, நான் என்று சொல்லப்படும் ஆத்மா, என்னுடைய தேகம், என்னுடைய இந்திரியம், என்னுடைய மனம், என்னுடைய பிராணன் என்னுடைய ஞானம் என, என்னுடையது என்னும் புத்திக்கும் என்னுடையது என்னும் வியவகாரத்துக்கும் ஏதுவான, தேக, இந்திரிய, மன, பிராண, ஞானங்களில் வேருகத் தோற்றுவது.

அணுவாவது, நெல் வாலினது நுனியின் நூறு கூற்றில் ஒரு கூறளவினது.

சேஷமாவது, சந்தன புஷ்ப தாம்பூலாதிகளைப் போல ஈசுவரனுக்கு இஷ்டப்படி விநியோகப் படுத்திக்கொள்ளக் கூடியதாயிருப்பது.

---

* சேஷம் - அடிமை.

இவற்றில், தேகாதிகளில் வேறுபாடு, தனக்குத் தானே பிரகாசகம், ஆனந்தவுருவம், ஐம்பொறிகளாலறியப்படாமை, இன்னபொருளைப்போன்றதென எண்ணப்படாமை, அவயவ மில்லாமை, விகாரமில்லாமை, ஞானத்துக்கு இருப்பிடம் ஆகிய எட்டும் ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் பொது.

அணுவளவினது, ஈசுவரனாலே ஏவப்படுவது, அவனது சொரூப சங்கற்பங்களால் தரிக்கப்படுவது, அவனுக்கு சேஷமாயிருப்பது ஆகிய நான்கும் ஆத்மாவுக்கும் பிரகிருதிக்கும் பொது. நித்தியம், சேதனாசேதனங்களுக்கும் ஈசுவரனுக்கும் பொது. இப்பதின்மூன்றும் சேர்ந்தே ஆத்மாவுக்கு லக்ஷணமாம்.

5. *ஆத்மாவுக்குச் சுருங்கச் சொல்லும் லக்ஷணம் வேறொன்றுண்டா?* 5

உண்டு, அது சேஷத்துவத் தோடே கூடிய ஞாத்துருத்துவமாம்.

சேஷத்துவம், ஆத்மாவுக்கும் பிரகிருதிக்கும் பொது; ஞாத்துருத்துவம், ஜீவனுககும் ஈசுவரனுககும் பொது; சேஷத்துவததோடே கூடிய ஞாத்துருததுவம் ஆத்மாவுக்கே உள்ள தொன்று.

6. *இந்த லக்ஷணங்களையுடைய ஆத்மாக்கள் எத்தனை வகைப்பட் டிருக்கும்?* 6

நித்திய, முக்த, பத்த பேதத்தாலே மூன்று வகைப் பட்டிருககும்.

7. *நித்திய ராவார் யாவர்?* 7

நித்திய விபூதி யென்னும் பரமபதத்தில் ஒருநாளும் சம்சார சம்பந்த வாசனையுமில்லாதவராய், பகவ தனுபவ ஏக போகராய் ஈசுவர நியோகத்தாலே ஆக்கல் அளித்தல் அழித்தல் என்னும் முத்தொழிலைச் செய்யவும் வல்லராய், பரத்துவத்திற்போல வியூகம் விபவம் முதலிய எல்லா அவஸதைகளிலும் தொடர்ந்து அடிமைசெய்யக் கடவராய் இருக்கும் அனந்த, கருட, விஷ்வக்ஸேனுதி சூரித் தேவர்கள்.

8. *முக்த ராவார் யாவர்?* 8

மோட்ச ருசிக்கு விரோதியான கரும விசேஷங்கள் அனுபவத்தாலேனும், பிராயச்சித்த கருமங்களாலேனும், அரிய பெரிய புண்ணியங்களாலேனும் நசித்து ஜாயமான காலத்தில் பண்ணும் பகவத் கடாட்சத்தாலுண்டாகும் சாத்துவிக குணத்தின் எழுச்சியாலே, மோட்ச ருசி பிறந்து சத்ஸங்க முணடாய், சத்குருவை யடைந்து பரப்பிரம ஞானத்தைப் பெற்று அந்த பரப்பிரம்மத்தை யடைவதாகிய மோட்ச சித்தியின் பொருட்டுப் பண்ணும் கரும யோக ஞானயோகங்களை அங்கமாகவுடைய பக்தி யோகத்தாலே வரும் பகவத் கடாக்ஷத்தாலே யாதல்—ஈசுவரன் தன் னுடைய நிரேதுகஸௌஹார்த்த விசேஷத்தாலே, யாத்ருச் சிக, ப்ராஸங்கிக, ஆனுஷங்கிக, அஜ்ஞாத சுக்ருத பரம் பரைகளைக் கற்பித்து அதடியாக விசேஷ கடாக்ஷம் பண்ணி, அத்துவேஷ, ஆபி முக்கியங்களை யுண்டாக்கி, சாத்துவிக சம்பாஷணத்தை விளைப்பித்து, சதாசாரியனை ஆசிரயிப் பித்து, அக்குருமுகத்தா லுண்டாக்கும் தத்துவஞானத் தாலேனும், தன்னுடைய நிரேதுக விசேஷ கடாக்ஷத்தா

லேயே உண்டாக்கும் தத்துவ ஞானத்தாலேனும், மகா
விசுவாச பூருவகமாகப் பற்றப்படும் பிரபத்தி மூலமாக
வரும் பகவத் கடாக்ஷத்தாலே யாதல்—சம்சாரத்துக்கு
ஏதுவான சகல பாபங்களுங் கழிந்து அர்ச்சிராதி மார்க்கத்
தாலே போய், பரமபதத்தில், பகவதனுபவ கைங்கரிய
பரராய் வாழும்முனிவர்கள்.

9. *பத்தராவார் யாவர்?* 9

எள்ளினுள் எண்ணெய்போல பிரிக்க வொண்ணுத படி முக்குணங்களோடே கூடிய அனுதியான பகவன் மாயையினுலே மறைக்கப்பட்ட சொரூபத்தை யுடையராய் அஜ்ஞானத்தாலே சம்பாதிக்கப்பட்ட புண்ணிய பாவங் களாலே சூழப்பட்டு நானாவிதமாய் விசித்திரமா யிருக்கும் நால்வகை யோனி. எழுவகைத் தோற்றம், எண்பத்து நான்கு லக்ஷம் முகபேதமுடைய, தேவ, மனித, திரியக்கு, ஸ்தாவர தேகங்களிலே, மாறிமாறிப் பிரவேசித்து, தேகத்தில் நான் என்னும் புத்தியையும், தேகசம்பந்தமான பதார்த்தங்களில் என்னது என்னும் புத்தியையும் செய்து கெட்டவழியே போய்ப்போய், தத்தங் கருமானுகுணமாக வுண்டாகும் சுகதுக்க பரம்பரைகளை அனுபவித்துக் கொண்டு சம்சாரத்தில் பந்திக்கப்பட்டு உழல்பவர்கள்.

10. *நால்வகை யோனிகள் எவை?* 10

அண்டஜம், சுவேதஜம், உத்பீஜம், ஜராயுஜம், என்பவையாம்.

11. *அண்டஜம் என்பதன் பொருளென்னை? அவையாவை?* 11

முட்டையில் தோன்றுவன; அவை பறவைகளும், ஊர்வனவும், நீர்வாழ்வனவுமாம்.

12. *சுவேதஜம் என்பதன் பொருளென்னே? அவையாவை?* 12

வேர்வையில் தோனறுவன ; அவை, கிருமி, கீடம், பேன் முதலிய ஊர்வனவும், விட்டில் முதலிய சில பறவைகளுமாம்.

13. *உத்பீஜம் என்பதன் பொருளென்னே? அவையாவை?* 13

வித்து, கிழங்கு, வேர், கொம்பு, முதலியவைகளில் மேல்பிளந்து தோன்றுவன ; அவை மரம், செடி, கொடி, பயிர், புல், பூண்டு, முதலியவைகளாம்.

14. *ஜராயுஜம் என்பதன் பொருளென்னே? அவையாவை?* 14

கருப்பையில் தோன்றுவன ; அவை தேவரும், மனிதரும், நாற்கால் விலங்குகளுமாம்.

15. *எழுவகைத் தோற்றங்கள் எவை?* 15

தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, ஸ்தாவரம், என்பவையாம்.

16. *எண்பத்து நான்கு லக்ஷம் முகபேதம் எவை?* 16

தேவபேதம் பதினுன்குலக்ஷம், மனிதபேதம் ஒன்பது லக்ஷம், விலங்கின்பேதம் பத்துலக்ஷம், பறவைபேதம் பத்து லக்ஷம், ஊர்வனபேதம் பதினொருலக்ஷம், நீர்வாழ்வன பேதம் பத்துலக்ஷம், ஸ்தாவரபேதம் இருபது லக்ஷமாம்.

17. *தேகம் எத்தனை வகைப்படும்?* 17

ஸ்தூலதேகம், சூக்ஷ்மதேகம், என இரண்டுவகைப் படும்.

18. *ஸ்தூலதேக மாவது யாது?* 18

நிலம், நீர் நெருப்பு, காற்று, ஆகாசம், என்னும் ஐந்து பூதங்களினுடைய சேர்க்கையால், பரிணமித்ததாய், இந்திரியங்களுக்கு இடமாய்; தோல், எலும்பு, நரம்பு, மாமிசம், இரத்தம். நிணம், சுக்கிலம், என்னும் ஏழு தாதுக்களும் எழுபத்தீராயிரம் நாடிகளும் கூடியிருக்கிற உருவுடம்பாம்.

19. *சூக்ஷ்ம தேகமாவது யாது?* 19

மனம், புத்தி, அகங்காரம், சித்தம், என்னும் அகக்கரணங்கள் நான்கும்; பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்னும் வாயுக்கள் ஐந்தும் கூடிய சூக்ஷ்ம பூதங்களாகிய சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் தன்மாத்திரைகளைந்தாலும் கற்பத்தின் முதலில் உண்டாக்கப்பட்டு ஆத்மாக்கள் கருமத்துக் கீடாக எடுக்கும் ஒவ்வொரு பிறப்பின் ஆயுள் முடிவில் முன்னுடம்பு விட்டு, பின் உடம்பு எடுத்தற்கு ஏதுவாய், பிரளய, மோட்ச பரியந்தம் அழியாதிருக்கும் அருவுடம்பாம்.

20. *ஆத்மாக்கள் புண்ணிய பாப கருமங்களைச் செய்தற்கும், அந்த கரும பலன்களை அனுபவித்தற்கும் இடங்கள் எவை?* 20

புண்ணிய பாவ கருமங்களைச் செய்தற்கும் செய்த கரும பலன்களை அனுபவித்தற்கும் இடம் இவ்வுலகம். புண்ணிய கரும பலனை அனுபவித்தற்கு இடம் சுவர்க்கம் முதல் சத்தியலோகம் ஈருக மேலுலகங்கள். பாவ கரும பலனை அனுபவித்தற்கு இடம் இருபத்தெட்டு கோடி நரகங்கள்

21. *இவ்வுலகத்தில் கருமானுகுணமாக தேக மெடுக்கும் ஆத்மாக்கள் தேகத்தைவிட்ட பின்பு யாது செய்யும்?* 21

புண்ணியஞ் செய்த ஆத்மாக்கள் ஸ்தூல சரீரத்தை விட்டு சூக்ஷ்ம சரீரத்தோடு தேவ சரீரத்தை எடுத்துக் கொண்டு சுவர்க்கம் முதலிய தேவலோகங்களுக்குப் போய் தேவபோகமாகிய இன்பங்களை அனுபவிக்கும். பாவஞ் செய்த ஆன்மாக்கள் ஸ்தூல தேகத்தை விட்டு சூக்ஷ்ம தேகத்தோடு யாதனாசரீரத்தை எடுத்துக்கொண்டு போய், நரகங்களில் அளவில்லாத துன்பங்களை அனுபவிக்கும். இப்படியன்றி ஸ்தூல உடம்பை விட்டவுடன் இவ்வுலகத்திலேயே கருமத்துக்குத் தக்கபடி ஒரு யோனி வாய்ப்பட்டுப் பிறத்தலும் உண்டு.

22. *மேலுலகங்களில் இன்பம் அனுபவித்த ஆத்மாக்கள் பின்பு யாது செய்யும்?* 22

சாலிலெடுத்த நீர்போல புண்ணிய பலன் அனுபவித்துத் தீர்ந்தவுடன் மீண்டும் பூலோகத்தில் வந்து பிறக்கும்.

23. *நரகங்களில் துன்பம் அனுபவித்த ஆத்மாக்கள் பின்பு யாது செய்யும்?* 23

கரும சேஷத்தாலே திரும்பவும் பூமியில்வந்து முன்பு ஸ்தாவரங்களாயும், பின்பு நீர் வாழ்வனவாயும், பின்பு ஊர்வனவாயும், பின்பு பறவைகளாயும், பின்பு விலங்குகளாயும், பிறந்து முன் செய்த புண்ணியம் வந்து பொருந்தப் பின்பு மனிதர்களாய்ப் பிறக்கும்.

24. *எழுவகைப் பிறப்பினுள்ளும் எந்தப்பிறப்பு அருமை யானது?* 24

பரம்பொருளான நாராயணனேயறிந்து வழிபட்டுப் பேரின்ப வீடெய்தி, உய்தற்கியைந்த மனிதப் பிறப்பே அருமையானது.

25. *மனிதப்பிறப்பை எடுத்த ஆத்மாக்களுக்கு அப்பேரின்ப வீடு எப்பொழுது சித்திக்கும்?* 25

அவர்கள் தத்தம் பக்குவத்துக்கேற்பப் பிறவிதோறும், சாருவாகம், பௌத்தம், சமணம் முதலிய புறச் சமயங்களிலே யேறி யேறி அவ்வச்சமய நூல் விதிப்படியொழுகி, வைதிக மார்க்கத்தை யடைந்து பின்பு வேத சாஸ்திரங்களை யுணர்ந்து அந்த பாக்கியப் பெருக்கினலே கருவிலே திருவைப்பெற்று பரம வைதிக வைஷ்ணவ சமயத்தை அடைவர்கள். பின்பு வேத முதல்வனுன நாராயணனருளால் சதாசாரியனே யடுத்துப் பஞ்ச சம்ஸ்கார பாக்கியத்தைப் பெற்றுத் தமிழ் வேதமோதிப் பிரபத்தி நெறி பிறழாதிருந்து பிறப்பொழித்து அர்ச்சிராதி மார்க்கத்தாலே போய், அப்பிராகிருத திருமேனியைப் பெற்று, நலமந்தமில்லதோர் நாட்டில் நித்திய முக்தர்களுடன் கூடிய பகவதனுபவ கைங்கர்ய சாம்ராஜ்யத்தைப் பெற்று வாழ்வார்கள்.

*ஆக சித்தியல் - 25.*

---

# உ. அசித்தியல்.

1. *அசித்தென்பது யாது?* 26

ஞான சூனியமாய், விகாரங்களுக்கு இருப்பிடமாய் இருக்கும் பிரகிருதியாம்.

2. *அசித்து எத்தனை வகைப்படும்?* 27

சுத்தசத்துவம், மிசிரசத்துவம், சத்துவ சூனியம் என மூன்று வகைப்படும்.

3. *சுத்த சத்துவமாவது எது?* 28

இராஜஸ தாமசங்கள் அற்பமுங் கலவாமலே, கேவலசத்துவமாய், ஞானத்தையும் ஆனந்தத்தையும் உண்டாக்குவதாய், கருமத்தா லல்லாமலே கேவல பகவதிச்சையினாலே விமான கோபுர மண்டபங்கள் முதலியவைகளாகப் * பரிணமிக்கக் கடவதாய் இருக்கும் † நித்திய விபூதியாம்.

4. *மிசிரசத்துவமாவது எது?* 29

சத்துவ ரஜஸ் தமஸ்ஸென்னும் முக்குணங்களோடே கூடி பத்தாத்மாக்களுடைய ஞானானந்தங்களை மறைக்க வல்லதாய்; விபரீத ஞானத்தை விளைவிப்பதாய்; நித்தியமாய்; பிரளயகாலத்தினும் இடத்தினும் சமமாயும்; சிருஷ்டி காலத்தினும் இடத்தினும் வேறுபட்டும் உள்ள

* பரிணமித்தல் - உருத்திரிதல்.

† நித்தியவிபூதி - பரமபதம்.

காரியங்களை உண்டுபண்ணுவதாய் மகான் முதலிய காரியங்களை உண்டாக்குவதனுலே பிரகிருதி யென்றும்; விசித்திரமான சிருஷ்டியைப் பண்ணுகையினுலே மாயை யென்றும்; ஞானத்துக்கு விரோதியாகையினுலே அவித்யை யென்றும் சொல்லப்பட்டு அண்ட பிண்டங்களுக்குக் காரணமான பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் பூதங்களைந்தும்; சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் புலன்களைந்தும்; சுரோத்திரம் தொக்கு, சட்சு, ஜிகுவை, ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்களைந்தும்; வாக்கு, பாதம், பாணி, பாயு உபஸ்தம் என்னும் கருமேந்திரியங்களைந்தும்; மனம் ஒன்றும்; அகங்காரம் ஒன்றும் மகத்து ஒன்றும் பிரகிருதி ஒன்றும்; ஆக இருபத்துநான்கு தததுவங்களாய்ப் பரிணமிக்கும் * லீலா விபூதியாம்.

5. *இவற்றில் முதல் தத்துவம் எது?* 30

அண்டபிண்டங்களுக்குக் காரணமான சத்துவ ரஜஸ் தமஸ்ஸென்னும் முக்குணங்களையுடைய பிரகிருதியாம்.

6. *இந்த பிரகிருதியில் நின்றும், மற்ற இருபத்து மூன்று தத்துவங்களும் எவ்வெப்படிப் பிறக்கும்?* 31

சத்துவ ரஜஸ் தமஸ்ஸென்னும் முக்குணங்களையுடைய பிரகிருதியில் நின்றும், குணவேற்றுமையினுலே சாத்துவிகம், ராஜசம், தாமஸம் என்னும் மூன்று புத்தியையுடைய மகத்தத்துவம் பிறக்கும். மகானில் நின்றும், வைகாரிகம் என்னும் சாத்துவிக அகங்காரமும், தைஜஸ

* லீலாவிபூதி - ஈசுவரன் திருவிளையாடற்குரிய இவ் விபூதி.

மென்னும் ராஜஸ அகங்காரமும், பூதாதி என்னும் தாமச அகங்காரமும் பிறக்கும். மூவகையான அகங்காரத்தில் வைகாரிகத்தில் நின்றும், சுரோத்திரம். தொக்கு சட்சு, ஜிகுவை, ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்களைந்தும்; வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் என்னும் கருமேந்திரியங்க ளைந்தும்; மனம் ஒன்றும் ஆகிய பதினொரு இந்திரியங்களும் பிறக்கும். பூதாதியில் நின்றும் சப்த தன்மாத்திரை பிறக்கும். சப்த தன்மாத்திரையில் நின்றும், ஆகாசமும், பரிச தன்மாத்திரையும் பிறக்கும். பரிச தன்மாத்திரையில் நின்றும், வாயுவும், ரூப தன்மாத்திரையும் பிறக்கும். ரூப தன்மாத்திரையில் நின்றும் தேயுவும், ரசதன்-மாத்திரையும் பிறக்கும். ரச தன்மாத்திரையில் நின்றும் அப்பும். கந்த தன்மாத்திரையும் பிறக்கும். கந்த தன் மாத்திரையில் நின்றும் பிருதிவி பிறக்கும்.

7. *தன்மாத்திரைகளாவன யாவை?* 32

சூக்ஷ்ம பூதங்கள்.

8. *தைஜஸம் என்னும் ராஜஸ அகங்காரம் யாதுசெய்யும்?* 33

வைகாரிகம் என்னும் சாத்வீக அகங்காரத்துக்கும், பூதாதி என்னும் தாமச அகங்காரத்துக்கும் சகாயமாயிருக்கும்.

9. *ஈசுவரன் இந்த இருபத்துநான்கு தத்துவங்களைக் கொண்டு, அண்டபிண்டங்களை எப்படி உண்டாக்கும்?* 34

மண்ணையும் மணலையும் நீரையும் சேர்த்து ஒரு திரவியமாக்கிச் சுவரிடுவாரைப் போல, ஈசுவரன் இவ் விருபத்துநான்கு தத்துவங்களையுங் கொண்டு, அண்டகார ணங்களையும், அண்டத்தையும் உண்டாக்கி, அண்டத்துக் குள்ளே நான்கு முகங்களையுடைய பிரமனை உண்டாக்கி, அண்டத்துக்கு உட்பட்ட பொருள்களை பிரமன் முதலா னார்க்கு அந்தரியாமியாய் நின்று உண்டாக்கும்.

10. *அண்டங்க ளெத்தனை? அவை எப்படியிருக்கும்?* 35

அண்டங்கள் பலவாய் ஒவ்வொன்றும் அதலம், விதலம், நிதலம், தலாதலம், மகாதலம், சுதலம், பாதா ளம் என்னும் கீழுலகமேழும்; பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்னும் மேலுலகமேழும் ஆகிய பதி னான்கு லோகங்களோடே கூடி. அண்டகடாகத்துக்கு அப்பால் ஒன்றுக்கொன்று பதிற்று மடங்கான நீர், நெ ருப்பு. காற்று, ஆகாசம், அகங்காரம், மகான், அவ்வி யக்தமென்னும் பிரகிருதி ஆகிய ஏழு ஆவரணங்களாலே சூழப்பட்டு ஈசுவரனுக்குத் திருவிளையாட்டுக் கருவிகளாய், நீர்க்குமிழிகள்போல ஒரேகாலத்தில் உண்டாவனவா யிருக்கும்.

11. *சத்துவ சூனியமாவது யாது?* 36

* பிரகிருதி † பிராகிருதங்களின் பரிணமங்களுக்கு ஏதுவாய், கலை, காஷ்டை முதலியனவாகப் பரிணமிப் பதாய், நித்தியமாய் ஈசுவரனுக்குத் திருவிளையாட்டுக் கருவியாய் இருக்கும் காலமாம்.

---

* பிரகிருதி - காரணம்.

† பிராகிருதம் - காரியம்.

12. கலை காஷ்டை முதலியன யாவை? 37

துடி நூறு கொண்டது வேதை.
வேதை மூன்று கொண்டது லவம்.
லவம் மூன்று கொண்டது நிமிஷம்.
நிமிஷம் மூன்று கொண்டது க்ஷணம்.
க்ஷணம் ஐந்து கொண்டது காஷ்டை.
காஷ்டை முப்பது கொண்டது கலை.
கலை பதினைந்து கொண்டது நாழிகை.
நாழிகை அறுபது கொண்டது பகலிரவு கூடிய நாள்.
நாள் பதினைந்து கொண்டது பக்ஷம்.
பக்ஷம் இரண்டு கொண்டது மாதம்.
மாதம் இரண்டு கொண்டது ருது.
ருது மூன்று கொண்டது அயனம்.
அயனம் இரண்டு கொண்டது வருஷம்.
வருஷம் முந்நூற்றறுபது கொண்டது தேவ வருஷம்.
தேவ வருஷம் பன்னீராயிரங் கொண்டது சதுர்யுகம்.
சதுர்யுகம் எழுபத்தொன்று கொண்டது மனுவந்தரம்.
மனுவந்தரம் பதினான்கு கொண்டது ஆயிரம் சதுர்யுகம்.

இது பிரமனுக்கு ஒரு பகல்;

இப்படியே, இரவு, நாள், மாதம், வருஷங்களை பெருக்கி, நூறு வருஷங்கள் பிரமனுக்கு ஆயுசாகும்;

பிரம ஆயுசுக்குப் பரம் என்று பெயர்.

ஆக அசித்தியல்- 12.

---

# 3. ஈசுவரவியல்.



1. *ஈசுவரனுவான் யாவன்?* 38

ஞானனந்த சொரூபனுய், ஞான சக்தியாதி கலியாண குணகணங்களை யுடையவனுய், தேச கால வஸ்து பரிச்சேத மில்லாதவனுய், தேஜோமயமான திவ்வியமங்கள விக்கிரக முடையவனுய், எல்லா வுலகங்களையும் படைத்தல் காத்தல் அழித்தல் செய்யும் கர்த்தாவாய், இழந்தபொருளை யிச்சிப்பவன், முன்பில்லாத பொருளைப் பெற முயல்பவன், ஆத்மானுபவத்தை ஆசைப்படுமவன், பேரின்ப வீட்டைப் பேணுமவன் ஆகிய நான்கு வித புருஷர்களால் ஆசிரயிக்கப்படுமவனுய்; அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பலன்களை யளிப்பவனுய், இலட்சுமி பூமி நீளாநாயகனுய் இருக்கும் நாராயணன்.

2. *நாராயணன் உலகங்களைப் படைத்தலாவது எப்படி?* 39

நீரில் கலந்த உப்புப்போலும், சந்திரகாந்தக் கல்லில் தண்ணீர்போலும், தன்னேடு ஒன்ருய்க் கலந்துகிடந்த ஆத்மகோடிக ளடங்கிய பிரகிருதியைத் தன்னிடத்திலிருந்து வேறுபடப் பிரித்துப் பின்பு ஆத்ம வருக்கமடங்கிய அசித்தெனப் பகுத்தறிதற் குரித்தான அட்சராவஸ்தமாக்கி, அதைக் காரியத்துக்கு யோக்கியமாம்படி அவ்வியக்தாவஸ்தமாக்கி, அதை மகத்து அகங்காரம் முதலிய தத்துவங்களாகப் பரிணமிக்கச் செய்து, கரணகளேபரங்க ளின்றி போக மோட்சயோக்யமாகாமல்

கிடந்த ஆத்மாக்களுக்கு, போகமோட்ச சாதனமான தேக இந்திரியங்களைக் கொடுத்து ஞான விகாச முண்டாம்படி செய்தலாம்.

3. *ஒருகாரியத்துக்குக் காரணங்க ளெத்தனை?* 40

முதற் காரணம், துணைகாரணம், நிமித்தகாரணம் என மூன்றும்.

4. *உலகமாகிய காரியத்துக்கு மூன்று காரணங்கள் எவை?* 41

தன்னுள்ளடங்கிய சூட்சுமமான சேதனசேதனங் களோடே கூடிய பிரமமாகிய தானே முதற் காரணம். விசித்திரமான இவ்வுலகத்தைப் படைத்தற்கேற்ற ஞான சக்திகளோடேகூடிய பிரமமாகிய தானே துணைக்காரணம். தன்னில் வேருகப் பிரிந்திராத சேதன சேதனங்களை விசேஷணமாகவுடைய, சங்கற்பத்தோடே கூடிய பிரம மாகிய தானே நிமித்த காரணம். ஆகையால் மூன்று காரணங்களும் நாராயணனேயாம்.

5. *நாராயணன் உலகங்களைக் காத்தலாவது எப்படி?* 42

படைக்கப்பட்ட வஸ்துக்களிலே பயிருக்கு நீர் நிலை போல, அனுகூலமாகப் பிரவேசித்து நின்று ரடசித்தலும், இவ்வுலக மேலுலக இன்பங்களையும், மோட்ச சுகத்தை யும் இச்சியா நின்ற அவ்வவருடைய அதிகாரத்துக்குத் தக்கபடி, விரோதங்களைப் போக்கி அபேட்சிதங்களைக் கொடுத்து ரட்சித்தலுமாம்.

6. *நாராயணன் உலகங்களை அழித்தலாவது எப்படி?* 43

விதி நிஷேதவசப்பட்டுத் தன் சொல்வழி நடவாத புத்திரனைப் பிதா விலங்கிட்டு வைக்குமா போல, தன்னை

வழிபட்டு உய்தற்குக் கொடுத்த உடம்பின் வழியே யுழன்று விஷயாந்தரங்களில் மண்டிச் செல்லுங் கரணங்களைக் குலைத்திட்டு வைத்தலாம்.

7. *இந்த சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் எத்தனை விதமா யிருக்கும்?* 44

இம் மூன்றும் தனித்தனியே நான்கு விதமாயிருக்கும்.

8. *ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் ஆகிய மூன்றும் தனித் தனியே நான்குவிதமா யிருத்தலெப்படி?* 45

சிருஷ்டியில் பிரமனுக்கும், பிராஜாபதிகளுக்கும், காலத்துக்கும் ஒன்றுக்கொன்று உற்பத்தி ஏதுவான எல்லா பூதங்களுக்கும் அந்தரியாமியா யிருந்து ரஜோ குணத்தோடே கூடி சிருஷ்டிக்கும். ரக்ஷகத்தில் விஷ்ணு முதலான திருவுரு வெடுத்து அவதரித்து மனு முதலானர் வாயிலாக மிருதி யிதிகாச புராண சாஸ்திரங்களைத் தந்து ஆத்மாக்கள் அதமகதிகளிற் செல்லாமல் ஈடேறுதற்கு ஏதுவான நல்வழிகாட்டி, காலத்துக்கும், ஒன்றுக்கொன்று ரக்ஷகமாகும் எல்லா பூதங்களுக்கும் அந்தரியாமியாய் நின்று சத்துவகுணத்தோடே கூடி ரக்ஷிக்கும். ஸம்ஹாரத்தில் உருத்திரனுக்கும், யமன் அக்கினி முதலானர்க்கும், காலத்துக்கும் ஒன்றுக்கொன்று நாசகமாகும் எல்லா பூதங்களுக்கும் அந்தரியாமியாய் தமோகுணத்தோடே கூடி சங்கரிக்கும்.

9. *ஈசுவரசொரூபம் எத்தனைவிதமா யிருக்கும்?* 46

பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமித்துவம், அர்ச்சாவதாரம் என ஐந்துவிதமாய் இருக்கும்.

10. *பரத்துவமாவது எது?* 47

பிரகிருதி மண்டலத்துக்கு மேலே விரஜை என்னும் அமுதவாற்றுக்கு அக்கரையில் காலம் நடையாடாததாய், சுத்தசத்துவமாய், பஞ்சசக்திமயமாய், நித்தியமாய், ஆனந்தவடிவமாய் விளங்காநின்ற மீட்சியில்லாத பரமபதத்திலே திருவனந்தாழ்வானுகிய திருவணையிலே அருட்டேவியான பெரிய பிராட்டியார் வலவட்டத்தினும், பொறைத்தேவியான பூமிப் பிராட்டியாரும் ஆனந்தத்தேவியான நீளா பிராட்டியாரும் இடவட்டத்திலும் இருப்ப, நித்திய முக்தருடைய அனுபவ கைங்கரியங்களுக்கு விஷயபூதனுய்க் கொண்டு ஆதியஞ்சோதி யுருவாய் எழுந்தருளியிருக்கு மிருப்பு.

11. *வியூகமாவது எது?* 48

இவ் விபூதியினுடைய சிருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்தற் பொருட்டும்; போக மோட்ச இச்சையுடையவர்களுக்கு, விரோதங்களைப் போக்கி அபேட்சிதங்களைக் கொடுத்து ரட்சித்தற் பொருட்டும்; ஸங்கிருஷ்ண பிரத்தியும்ந, அநிருத்த, வாசுதேவ மூர்த்திகளாய் நிற்கும் நிலை.

12. *விபவ மாவது எது?* 49

அவதாரங்கள்.

13. *அது எத்தனைவகைப்படும்?* 50

முக்கியம், கௌணம் என இருவகைப்படும்.

14. *முக்கியாவதாரமாவது எது?* 51

சாட்சாதவதாரம்; அது முமுட்சுக்களால் உபாசிக்கப்படுமதான மச்ச, கூர்ம, வராக, நரசிங்க, திரிவிக்ரம, ஸ்ரீராம. கிருஷ்ணாதி அவதாரங்களாம்.

15. *கௌணாவதார மாவது எது?* 52

ஆவேச அவதாரம்; அது ஒரு காரியத்தை உத்தேசித்து ஆத்மாக்களிடத்தில், சொரூபத்தாலாதல், சத்தியினாலாதல், ஆவேசித்து இருத்தலாம். பரசுராமன் பலராமன் முதலானாரிடம் சொரூப ஆவேசம்; பிரமன், உருத்திரன், யமன், அக்னி முதலானாரிடம் சக்தி ஆவேசம்.

16, *அந்தரியாமித்துவ மாவது எது?* 53

ஆத்மாக்களுக் குள்ளே பிரவேசித்து எல்லா பிரவிருத்திகளுக்கும் * நியந்தாவாய் இருத்தலாம்.

17. *அந்தரியாமித்துவம் எத்தனைவகைப்படும்?* 54

சொரூபவியாப்தி யென்றும், விக்கிரகவியாப்தி யென்றும் இரண்டுவகைப்படும்.

18. *சொரூப வியாப்தியாவது எது?* 55

சுவர்க்க, நரக, கருப்ப, பிரவேசாதி சருவாவஸ்தைகளிலும், எல்லா ஆத்மாக்களுக்கும் துணையாய் எப்போதும் விடாதே, உள்ளே பதிகிடந்து சத்தையே நோக்கிக் கொண்டு இருக்கும்நிலை.

19. *விக்கிரக வியாப்தியாவது எது?* 56

சேதனருடைய இருதய கமலத்தில், புகையில்லாத ஜோதியைப்போலப் பொலிந்து அங்குஷ்டமாத்திரமான

* நியந்தா - ஏவுதல் கருத்தா.

அழகிய திருவுருவுடன் தியானத்துக்கு விஷயமாவதன் பொருட்டும், புத்தி முதலியவற்றுக்கு * நியாமகனுய்க் காப்பதன் பொருட்டும், இலட்சுமி ஸகிதனுய் எழுந்தருளி யிருக்கும் நிலை.

20. *அர்ச்சாவதாரமாவது எது?* 57

சேதனருக்கு உகப்பான பொன். வெள்ளி. தாமிரம், சிலை, மரம், மண் முதலிய திரவியங்களையே திருமேனி யாகவும்; அவரிட்டதுவே பெயராகவும்; கொண்டு சருவஜ்ஞனுயிருந்தும் அஜ்ஞனைப் போலும்; சருவ சக்தனுயிருந்தும் அசக்தனைப் போலும்; சருவ ரக்ஷகனுயிருந்தும் ரட்சியம் போலும்; கலந்து பரிமாறி சுவாமியான தான் சொத்தாயும், சுதந்திரனுன தான் பரதந்திரனுயும் தன்னை மாருடி, ஆசிரதர் குற்றங்களைக் காணுக்கண்ணிட்டு, அருச்சக பராதீனனுய் தேச, கால அதிகாரி நியமமில்லாத படி கோயில்களிலும் வீடுகளிலும் எழுந்தருளி யிருக்கும் இருப்பு.

21. *திருக்கோயில்களில் எழுந்தருளி யிருக்கும் அர்ச்சாவதாரம் எத்தனை வகைப்படும்?* 58

சுயம்பு, தைவம், சைத்யம், ஆர்ஷம், மானுஷம், என ஐந்து வகைப்படும். சுயம்பு தானேதோன்றியது. தைவம், உருத்திரன் முதலான தேவர்களால் ஸ்தாபிக்கப் பட்டது. சைத்யம், சித்தர்களாலே ஸ்தாபிக்கப்பட்டது. ஆர்ஷம், ருஷிகளாலே ஸ்தாபிக்கப்பட்டது. மானுஷம் மனிதர்களாலே பிரதிஷ்டை செய்யப்பட்டது.

---

* நியாமகன் - ஏவுதல் கர்த்தா.

22. *சரியை யாவது யாது?* 59

திருக்கோயில் நிர்மாணஞ்செய்து திருப்பிரதிஷ்டை செய்தல், திருமாலே சேர்த்தல், திருவிளக்கேற்றல், திருவலகிடுதல், திருமெழுக்குச் சாத்தல், அரிசி சந்தனம் முதலிய ஆராதனத்திற்குரிய திரவியங்களேத் தருதல், இடையூறின்றி திருவாராதனம் முதலியன நடந்தேறி வருதற்குத் தக்க வரும்படியுள்ள கிராமங்கள் நிலங்கள் முதலியவைகளேச் சீர்திருத்தல் முதலியவைகளாம்.

23. *சரியை எப்பலனே அடைதற்கு ஏதுவாகும்?* 60

விஷ்ணுலோகம் முதல் பரமபத பரியந்தமான சாலோகப் பிராப்திக்கு ஏதுவாகும்.

24. *கிரியையாவது யாது?* 61

பெருமாளேப் பிராட்டியோடு சிம்ஹாசனம் முதலிய ஆறு ஆசனங்களில் எழுந்தருளப்பண்ணி தேக சுத்தி திரவிய சுத்தியுடன் ஷோட சோபசாரங்களேச் செய்து ஆராதித்தலாம்.

25. *கிரியை எப்பலனே அடைதற்கு ஏதுவாகும்?* 62

சாமீபப் பிராப்திக்கு ஏதுவாகும்.

சாமீபப் பிராப்தியாவது ஈஸ்வர சமீபத்தை அடைதல்.

26. *யோகமாவது யாது?* 63

ஈஸ்பரனுடைய திவ்ய மங்கள விக்கிரகத்தைப் பஞ்சாயுத பீதாம்பர திவ்யபூஷண அலங்கிருதமாகவும், லக்ஷ்மீ ஸகிதமாகவும் தியானித்து அனுபவித்து அனவரத பாவனே பண்ணுதலாம்.

7, *யோகம் எப்பலனை அடைதற்கு ஏதுவாகும்?* 64

சாரூபப் பிராப்திக்கு ஏதுவாகும்.

சாரூபப் பிராப்தியாவது ஈஸ்வர சமானரூபத்தை அடைதல.

28. *ஞானமாவது யாது?* 65

சதாசார உபதேசம் பெற்ற பகவத் பாரதந்திரிய ஞானமுடைய ஸத் சிஷ்யனுதல், தனது அபிமானத்தி லொதுங்கிய சிஷ்யனுக்காக சதாச்சார்யனுன தானேயாதல் கண்டு பற்றுதற்கு விஷயமான சௌலப்யாதி குண பூர்த்தி யுள்ள அர்ச்சாவதாரத்தில் துவயமந்திர பூர்வகமாக சரணு கதி செய்தலாம்.

29. *ஞானம் எப்பலனை அடைதற்கு ஏதுவாகும்?* 66

நிரதிசய ஆனந்த பகவதனுபவ மோட்சமாகிய ஸாயுஜ்ய பிராப்திக்கு ஏதுவாகும்.

30. *ஸாயுஜ்யமாவது யாது?* 67

ஸயுக்கினுடைய பாவமாம். ஸயுக் ஆவான் ஒரு போக்யத்திலே போக்தாவாய்க்கொண்டு அன்வயிக்கு மவன். இங்கு ப்ரகாரத்தோடே கூடிய ப்ரஹ்மமாகிய போக்யத்திலே ப்ரஹ்மமும் முக்தனும் போக்தாக்களாய் அன்வயித்து அனுபவித்தல்.

31. *அர்ச்சாவதாரம் மோட்சத்துக்கு ஏதுவாதலெப்படி?* 68

அதிதாகங்கொண்ட ஒருவனுக்குத் தான்நிற்குமிடத் திலே யிருந்தும், குந்தாலிகொண்டு தோண்டினுலன்றி விடாய் கெடக்கிடைக்கப் பெருத பூமியிலுள்ள நீர்போலே, அப்போதே காண ஆசைப்பட்ட முமுட்சுவுக்கு இருதயத்

துள்ளே யிருந்தும் அஷ்டாங்க யோகத்தாலன்றி விடாய் கெடக்காணப்பெருத அந்தரியாமித்துவம் — தாகங் கொண்டவனுக்கு, அண்டத்துக்குப் புறப்பே பெருகிக் கிடந்தும் அங்குப் போனுலன்றி கிடைக்கப்பெருத பெரும் புறக்கடல் போலே, முமுட்சுவுக்கு ஆக்கையைவிட்டு அர்ச்சிராதி மார்க்கத்தாலே போனுலன்றி காணப்பெருத இவ்வண்டத்துக்கு அப்பாற் பட்டுள்ள பரத்துவம்—தாகங் கொண்டவனுக்கு அண்டத்துக்கு உள்ளாகவே யிருந்தும் போகப்பெருத பாற்கடல்போலே முமுட்சுவுக்கு "பாலாழி நீ கிடக்கும் பண்பையாம் கேட்டேயும்" என்றபடி கேட்டிருக்கு மத்தனையன்றி போய்க் காணப்பெருத வியூகம்— தாகங்கொண்டவனுக்கு சமீபத்திலிருந்தும் அக்காலத்தவர்க்கன்றி பிற்காலத்தவர்க்குக் கிடைக்கப்பெருத பெருக்காறுபோலே, முமுட்சுவுக்கு இவ்வுலகிலே அவதரித்து சஞ்சரித்தும் அக்காலத்திலிருந்தார்க்கன்றி இக்காலத்தவர்க்கு எட்டாதபடியான இராமகிருஷ்ணுதி அவதாரங்கள்—தாகங்கொண்டவனுக்கு அப்போதே விடாய் கெடப்பருகலாம்படியான அந்த பெருக்காற்றிலே தேங்கிய மடுக்கள்போலே, * முமுட்சுவுக்கு தேச, கால, † கரண, தூரமின்றி எங்குமொக்க யாவருங்கண்டு பற்றும்படி கோயில்களிலும், வீடுகளிலும் எழுந்தருளி யிருக்கிற பின்னுனர் வணங்கும் சோதியான அர்ச்சாவதாரம் ஆகையால் கண்டு பற்றுதற்கு எளிய சௌலப்யம் முதலிய குண பூர்த்தியுள்ள அர்ச்சாவதாரமே முமுட்சுவுக்கு விஷயமாம்.

*ஆக ஈசுவர வியல்—31*

---

* முமுட்சு - மோட்சத்தில் இச்சையுடையவன்

† கரணம் - இந்திரியம்.

## 4. வேத சாஸ்திர வியல்.

1. *வைஷ்ணவ சமயத்தில் சிறந்த பிரமாணம் யாது?* 69

ஒரு புருஷனாலாக்கப்படாததாய், நித்தியமாய், ப்ர மம், விப்ரலம்பம், ப்ரமாதம், அசக்தி, என்னும் நான்கு தோஷங்களும் அற்றதாய், தனக்குத்தானே பிரமாணமாய் விளங்கும் வேதமாம்.

2. *அது எத்தனை வகைப்படும்?* 70

ஸம்ஸ்கிருதவேதம், தமிழ்வேதம் என இரண்டு வகைப்படும்.

3. *ஸம்ஸ்க்ருத வேத மெத்தனை?* 71

ருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என நான்காகும்.

4. *இவை எத்தனை பாகமா யிருக்கும்?* 72

ஒவ்வொன்றும் பூர்வ பாகமெனவும், உத்தர பாக மெனவும், இரண்டு பாகமாகயிருக்கும். கர்ம பாகமென வும் ப்ரஹ்மபாகமெனவும் பெயர்பெறும், உத்தரபாகம், உபநிஷத்தெனவும் படும்.

5. *பூர்வ பாகம் எவற்றைக் கூறும்?* 73

பகவதாராதன ரூபமான கருமங்களையும், அவற்றின் அங்கோபாங்கங்களையும் கூறும்.

6. *உத்தரபாகம் எவற்றைக் கூறும்?* 74

ஆராத்தியவஸ்துவான பிரமத்தையும் அதன் சொரூப, ரூப, குண, விபூதி, சேஷ்டிதங்களையும் கூறும்.

7. உபய பாகத்தையுடைய இவ்வேதத்துக்கு அங்கங்கள் எவை? 75

சிக்ஷை, வியாகரணம், சந்தோவிசிதி, நிருகதம், ஜோதிஷம், கல்பம் என ஆறுகும்.

8. சிக்ஷையாவது எது? 76

வேதத்தை உச்சரிக்கும், சுரம், வர்ணம் மாத்திரை முதலிய முறையை அறிவிப்பது.

9. வியாகரணமாவது எது? 77

வேதத்தில் எழுத்து, சொல், பொருள் முதலிய இலக்ஷணங்களை அறிவிப்பது.

10. சந்தோ விசிதியாவது எது? 78

காயத்திரி, அனுஷ்டிப்பு, திரிஷ்டிப்பு, ப்ரஹதி முதலிய சந்தங்களை அறிவிப்பது.

11. நிருக்தமாவது எது? 79

வேதங்களில் பதங்களினுடைய அர்த்தத்தை அறிவிப்பது.

12. ஜோதிஷமாவது எது? 80

வேதம் ஓதுதற்கும், கருமானுஷ்டானங்களைச் செய்தற்கும் உரிய காலவிசேஷங்களை அறிவிப்பது.

13. கல்பமாவது எது? 81

வேதத்திற் கூறுங் கருமங்களை அனுஷ்டிக்கும் முறையை அறிவிப்பது.

14. *உபாங்கங்கள் எவை?* 82

மீமாம்சை, மிருதி, நியாயம், புராணம் என நான் காகும்.

15. *மீமாம்சையாவது எது?* 83

வேதத்தினுடைய அர்த்தத்தை அறிவதற்கு, அனு கூலமான நியாயங்களை ஆராய்ச்சிசெய்து அறிவிப்பது. அது பூர்வ மீமாம்ஸை, உத்தர மீமாம்ஸை, என இரண்டா கும். பூர்வ மீமாம்ஸை கர்ம மீமாம்ஸை எனவும், உத் தர மீமாம்ஸை ப்ரஹ்ம மீமாம்ஸை, ப்ரஹ்ம சூத்திரம், வேதாந்த சூத்திரம் எனவும் பெயர் பெறும்.

16. *பூர்வமீமாம்ஸையை பிரவசனம் செய்தவர் யாவர்?* 84

வேதவியாச சிஷ்யரான ஜைமினி பகவான்.

17. *அது எத்தனை அத்தியாயங்களை உடையது?* 85

பன்னிரண்டு அத்தியாயங்களை உடையது.

18. *உத்தரமீமாம்ஸையை பிரவசனம் செய்தவர் யாவர்?* 86

வேதவியாச பகவான்.

19. *அது எத்தனை அத்தியாயங்களை உடையது?* 87

ஸமன்வயம், அவிரோதம், சாதனம்: பலம் என நான்கு அத்தியாயங்களை யுடையது.

20. *மிருதியாவது எது?* 88

வருணாச்சிரமங்களுக்கு உரிய ஆசார, வியவகார, பிராயச்சித்தங்களை அறிவிக்கும் மானவம் முதலிய தரும சாஸ்திரங்கள.

21. *நியாய மாவது எது?* 89

வேதத்தினுடைய அர்த்தத்தை நிச்சயித்தற்கு அனு கூலமான பிரமாணம் முதலியவைகளே அறிவிப்பது.

22. *புராணமாவது எது?* 90

சிருஷ்டி, ஸம்ஹாரம், வம்சம், மனுவந்தரம், வம்ச சரித்திரம், ஆகிய ஐந்து லக்ஷணங்களே கூறும் வைஷ் ணவம் முதலிய பதினெண் புராணங்கள். இதிகாசம், புராணத்துள் அடங்கும்.

23. *ஸம்ஸ்க்ருத வேதம் ஸமுதாயத்தில் எப்பெயர்கள் பெறும்?* 91

தைத்திரியம், பௌஷிகம், தல்வாகாரம், சாமம், என நான்கு பெயர்கள் பெறும்.

24. *பாஞ்சராத்திரம் பிரமாணந்தானா?* 92

பகவானே அருளிச் செய்கையாலும், வேதத்துக்கு விரோதமான அம்ஸம் சிறிது மில்லாமையாலும், பாஞ்ச ராத்திரம் முழுவதும் பிரமாணமே யாம்.

25. *தமிழ் வேதம் எத்தனே?* 93

திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என நான்காகும்.

26. *தமிழ் வேதத்துக்கு அங்கங்கள் எவை?* 94

பெரிய திருமொழி, சிறிய திருமடல், பெரிய திரு மடல், திருவெழுகூற்றிருக்கை, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் என்னும் ஆறுமாம்.

27. *உபாங்கங்கள் எவை?* 95

திருப்பல்லாண்டு, முதல் திருவந்தாதி, இரண்டாந் திருவந்தாதி, மூன்றாந் திருவந்தாதி, நான்முகன் திருவந் தாதி, திருச்சந்த விருத்தம், அமலனாதிப்பிரான், திருப் பள்ளியெழுச்சி, திருமாலை, பெருமாள் திருமொழி, பெரி யாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, கண்ணினுண் சிறுத்தாம்பு என்னும் பதினான்குமாம்.

28. *அங்கோபாங்கங்களையுடைய தமிழ் வேதம் சமுதாயத்தில் எப்பெயர்கள் பெறும்?* 96

முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய் மொழி என நான்கு பெயர்கள் பெறும்.

29. *தமிழ் வேதம் வடமொழி வேதத்துக்குச் சமமாமா?* 97

தமிழ் வேதம், வடமொழி வேதத்துக்குச் சமமும், சிறந்ததுமாகும்.

30. *சமமாதல் எப்படி?* 98

தமிழ் வேதம், வடமொழி வேதம்போல் நான்காய், ஆறு அங்கமும், உபாங்கங்களுடன் சமுதாயப் பெயரும் கொண்டிருப்பதாலும், பிராமணர்களாலே பாராயணம் பண்ணப்படுவதாலும், கோயில்களில் திருமஞ்சன காலங் களிலும் புறப்பாட்டுக் காலங்களிலும், சுபாசுபங்களிலும் ஓதப்படுவதாலும், சிஷ்ய ப்ரசிஷ்ய ஓரான்வழி பரம்பரை யுண்டா யிருப்பதாலும், அத்யயன அனத்யயன காலங்கள் ஏற்பட்டிருப்பதாலும் சமமாதல் திண்ணம்.

31. *சிறப்பாதல் எப்படி?* 99

புருஷோத்தமனுடைய புறப்பாட்டுக்காலங்களில் செவிக்கினிய செஞ்சொல்லான தமிழ்வேதம் முன்னே

செல்ல, அதனைத் தொடர்ந்து வேதகீதச்சாமி பின்னே செல்ல, அவ்விரண்டையும் நாடி தேடி வடமொழி வேதம் பின்னே பற்றித்தொடரக் காண்கையாலும்; குருகுலக் கொழுந்தான இராமாநுசர் இந்த தமிழ்வேதத்தைக் கொண்டு சூத்திரவாக்கியங்களை ஒருங்கவிட்டு ஸ்ரீபாஷ்ய அர்த்த நிர்ணயம் பண்ணுகையினுலும்; மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள், "செந்தமிழும் வடகலையுந் திகழ்ந்தநாவர்" என்றும், "செந்திறத்த தமிழோசை வட சொல்லாகி" என்றும், "தென்னன் தமிழை வட மொழியை" என்றும், இரண்டு வேதத்தையும் ஒருங்கே தழுவிக் கூறுமிடத்துச் சிறப்புத்தோன்ற, தமிழ் வேதத்தை விசேஷத்துடன் முற்பட எடுக்கையாலும்; வடமொழி வேதத்தினும் தமிழ்வேதம் சிறந்ததேயாம்.

32. *தமிழ்வேதத்துக்கு அனத்யயன காலம் எது?* 100

கார்த்திகை மாதம் சுக்கிலபட்சத்துக் கார்த்திகை நாள் முதல் மார்கழி மாதம் கிருஷ்ணபட்சம் முழுமையு மாம்; இது உத்ஸர்ஜன காலமென்னப்படும். மார்கழிமாத சுக்கிலபட்சப் பிரதமை தொடங்கி திருக்கோயில்களில் நடக்கும் திருவத்யயன மஹோற்சவத்தில் பத்துநாட்கள் பகலில் முதலாயிரமும், பெரிய திருமொழியும்; மேல் பத்துநாட்கள் இரவில் திருவாய்மொழியும்; அதன்மேல் ஒருநாள் இயற்பாவும்; ஒரு நாள் பிரபன்ன காயத்திரி யுமாக தமிழ் வேதம் ஓதப்படும்; இது உபக்ரம காலம் என்னப்படும். அப்பொழுது ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய திருமாளிகைகளில் தமிழ் வேதத்தை ஓதலாகாது.

33. *அனத்தியயன காலத்தில் எவ்வெவற்றை ஓதலாகாது?* 101

தமிழ் வேதமும், அதன் அங்க உபாங்கங்களும், அவற்றின் வியாக்கியானங்களும் ஓதலாகாது. *

34. *அனத்யயனமான அக்காலத்தில் மற்றெவ்வெவற்றை ஓதல்வேண்டும்?* 102

நாலாயிர திவ்விய பிரபந்த தனியன்கள், திருவாய் மொழி நூற்றந்தாதி, உபதேசரத்தினமாலை, முமுட்சுப் படி, ஸ்ரீவசனபூஷணம், தத்வத்ரயம் முதலிய நூல்களும், அவற்றின் வியாக்கியானங்களும் ஓதல் வேண்டும்.

35. *வைஷ்ணவர்கள், பாதரட்சை தொடுத்துத் தமிழ் வேத மோதிக்கொண்டு தெருவழிச் செல்லலாமோ?* 103

திருநாட்டுக்குச் சென்ற வைஷ்ணவர்கள் பொருட்டு நடத்தும் திருவத்யயனங்களில் இயல் வரும்பொழுதும், தேவதேவனது புறப்பாட்டு உற்சவங்களினும், ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவடிகளில் ஒன்றும் தொடுத்துக்கொள்ளாமலே, தமிழ்வேதம் ஓதிக்கொண்டு, நடுப்பகலிலே தெருவழிச்செல்லல், யாவரும் அறிந்ததேயாம். ஆகையால் செருப்பு, கட்டை முதலிய பாதரட்சைகள் தொடுத்துத் தமிழ்வேதப் பாக்கள் ஓதிக்கொண்டுதெருவிற் செல்லலாகாது. சிஷ்டர் கேட்கிற் சிரிப்புக்கிடமாகும்.

36. *தமிழ்வேதத்தை எப்படி ஓதல்வேண்டும்?* 104

தமிழ்வேத மோதியுணர்ந்த சிஷ்டரான பெரியோரை யடுத்து, அனுவர்த்தித்து, அவர் தாம் முன்சந்தை சொல்ல

---

* திருப்பாவை, நாய்ச்சியார் நீராடல் பிரபந்தமாகையினாலே மார்கழி மாதம் முழுமையும் நாள்தோறும் ஒவ்வொரு பாசுரமாக முப்பது பாசுரங்களும் சேவித்து முடித்தல் முறை.

ஓதுவோர் ஒவ்வொரு சந்தையும் மும்மூன்றுதரம் சொல்லி ஓதல் வேண்டும்; தான்தோன்றியாய் * ஸ்ரீகோசத்தைப் பார்த்தாதல், சிஷ்டரல்லாதார் மாட்டாதல் ஓதலாகாது.

**எப்போதும் கால்கை சுத்திசெய்து கொள்ளாமல் தமிழ் வேதத்தை எடுக்கலாகாது.**

3 . *தமிழ்வேதம் நான்கையும் அருளிச்செய்தவர் யாவர்?* 105

ஜன்மயோகியான சடகோபர்.

38. *அங்கமாறும் அருளிச்செய்தவர் யாவர்?* 106

மாதவனை வழி பறித்து மந்திரம் பெற்ற கொற்ற வேல் பரகாலர்.

39. *உபாங்கங்கள் அருளிச்செய்தவர் யாவர்?* 107

திருப்பல்லாண்டும், பெரியாழ்வார் திருமொழியும் அருளிச்செய்தவர், கிழியறுத்த விஷ்ணுசித்தரென்னும் பெரியாழ்வார்; முதல், இரண்டு, மூன்ருந் திருவந்தாதிகளை அருளிச்செய்தவர்கள், தாமரை, குருக்கத்தி, செங்கழுநீர்ப் புஷ்பங்களில் அவதரித்த பொய்கை, பூதன், பேய் என்னும் முதலாழ்வார்கள்; நான்முகன் திருவந்தாதியும், திருச்சந்த விருத்தமும் அருளிச்செய்தவர், பக்திசாரரென்னும் திருமழிசையாழ்வார்; அமலனுதிப்பிரான் அருளிச்செய்தவர், முநிவாகனரான திருப்பாணுழ்வார்; திருமாலையும் திருப்பள்ளியெழுச்சியும் அருளிசசெய்தவர், துளசிதாசரென்னும் தொண்டரடிப்பொடியாழ்வார், பெருமாள் திருமொழி அருளிச்செய்தவர், பாம்பின் குடத்தில் கையிட்ட குலசேகராழ்வார்; திருப்பாவையும், நாய்ச்சியார

* ஸ்ரீகோசம் - புஸ்தகம்.

திருமொழியும் அருளிச்செய்தவர் திருத்துழாயடியில் அவ தரித்த கோதாதேவியென்னும் ஆண்டாள் ; கண்ணினுண் சிறுத்தாம்பு அருளிச்செய்தவர். ஒளி கண்டு வந்த மது ரகவியாழ்வார்.

40. *தமிழ்வேதப் பிரதானமான திருவாய்மொழிக்கு வியாக் கியானங்க ளெத்தனை ?* 108

ஆருயிரப்படி, ஒன்பதினுயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாருயிரப்படி என ஐந் தாகும்.

41. *அவற்றை ஆக்கியோர் யாவர் ?* 109

ஆருயிரப்படி அருளிச்செய்தவர், திருக்குருகைப்பிரான் பிள்ளான் ; ஒன்பதினுயிரப்படி அருளிச்செய்தவர் வேதாந்தி யென்னும் நஞ்சீயர் ; பன்னீராயிப்படி அருளிச் செய்தவர், முசலகிசலம் என்னும் நூல் செய்த வாதி கேசரி அழகிய மணவாள ஜீயர் ; இருபத்து நாலா யிரப்படி அருளிச்செய்தவர், பெரியவாச்சான்பிள்ளை ; முப்பத்தா ருயிரப்படி அருளிசசெய்தவர், தெள்ளியநம்பிள்ளை செபபும் நெறிமுறையே யெழுதிய, வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை.

*ஆக வேத சாஸ்திர வியல்-41*

---

# 5. வைஷ்ணவ வியல்.



1. *வைஷ்ணவர் எத்தனைவகைப் படுவர் ?* 110

அத்வேஷி, அனுகூலன், திருநாமதாரி, சக்ராங்கி, மந்த்ரபாடி, வைஷ்ணவன், ஸ்ரீ வைஷ்ணவன், ப்ரபன்னன், ஏகாந்தி, பரமேகாந்தி எனப் பத்து வகைப்படுவர்.

2. *அத்வேஷியாவான் யாவன் ?* 111

உலக நியந்தாவான மாதவனிடத்தும், உலக பாவனரான வைஷ்ணவர்க ளிடத்தும், துவேஷ மில்லாதவன்.

3. *அனுகூலனுவான் யாவன் ?* 112

வாசுதேவனுடைய திருவிழாக்களிலும், வைஷ்ணவர்கள் பக்கலிலும் எப்பொழுதும் அனுவர்த்தனஞ் செய்பவன்.

4. *திருநாமதாரியாவான் யாவன் ?* 113

அனுசந்தித்த மாத்திரத்தில் பாவங்களனைத்தையும் போக்கும் அரியினுடைய, ஆயிர நாமங்களில் ஒரு திருநாமத்தைத் தரித்திருப்பவன்.

5. *சக்ராங்கியாவான் யாவன் ?* 114

சுருதி மிருதி முதலிய சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட சங்க சக்கரங்களைத் தோள்களில் தரித்துக்கொண்டிருப்பவன்.

6. *மந்த்ர பாடியாவான் யாவன் ?* 115

சிந்தித்த மாத்திரத்தில் முக்தியைத்தரும் திருமாலினுடைய, திருவஷ்டாட்சர மந்திரத்தை ஜெப, உச்சாரண வகையினுலே படனஞ் செய்பவன்.

7. *வைஷ்ணவனாவான் யாவன்?* 116

விஷயாந்தரங்களையும் தேவதாந்தரங்களையும் விட்டு, மோட்ச பலத்துக்குச் சாதனமாக கருமயோக ஞானயோகங்களை அங்கமாகவுடைய பக்தி யுபாயத்தை அனுஷ்டிப்பவன்.

8. *ஸ்ரீவைஷ்ணவனாவான் யாவன்?* 117

புறம்புண்டான பற்றுக்களை யெல்லாம் வாசனையோடேவிட்டு, மனோசுத்தியையுடையவனாய், புண்டரீகாட்சனிடத்தில் தைலதாரைபோல் இடைவிடாத பக்தி செய்பவன்.

9. *பிரபன்னனாவான் யாவன்?* 118

சப்தாதி விஷயாந்தரங்களையும், சாதனாந்தரங்களையும் விட்டு, பகவதனுபவ பலத்துக்குத் தான் பண்ணும் பிரபத்தியைச் சாதனமாக்குகின்றவன்.

10. *ஏகாந்தியாவான் யாவன்?* 119

தேவதாந்தரங்களும், விஷயாந்தரங்களும், சாதனாந்தரங்களும் சமமென்று புத்தி பண்ணி அவற்றை ஒருங்க விட்டுதான்பண்ணும் பிரபத்தியும் உபாயமன்றென்று நிச்சயித்து, ஈசுவரனையே உபாயமாகப் பற்றினவன்.

11. *பரமைகாந்தியாவான் யாவன்?* 120

தேவதாந்தர, விஷயாந்தர, சாதனாந்தரங்களையும்; சித்தோபாயமான ஈசுவரனையும்; சமமாக புத்திபண்ணி வாசனையோடேவிட்டு, ஆசாரியனே உபாயமும் உபேயமும் எனத் தெளிந்து, அவனபிமானத்தி லொதுங்கி, எல்லாம் அவனிட்ட வழக்காயிருப்பவன்.

12. *இவர்களில் அதிகாரி பேதமுண்டா?* 121

உண்டு; இவர்களில் முற்பட்ட முற்பட்டவரில் பிற்பட்ட பிற்பட்டவர், சிறந்தவராவர். அத்வேஷி, அநுகூலன், திருநாமதாரி, சக்ராங்கி, மந்த்ரபாடி என்னும் ஐவரும், சத்காரயோக்ய வைஷ்ணவர்கள்; வைஷ்ணவன், ஸ்ரீவைஷ்ணவன் என்னுமிருவரும் உபாசகரென்னும் சாதன பக்தி நிஷ்டர்; ப்ரபன்னன், ஏகாந்தி, என்னு மிருவரும் ப்ரபத்தி நிஷ்டர். இவருள் ப்ரபன்னன், தான் பண்ணும் ப்ரபத்தியைச் சாதன மாக்குபவன்; ஏகாந்தி தான் பற்றும் ப்ரபத்தியும் உபாயமன்று, பற்றப்படும் ஈசுவரனே உபாயமென்று துணிந்திருப்பவன்; பரமேகாந்தி, ஆசார்யனே தெய்வமென்றிருக்கும் பஞ்சமோபாய நிஷ்டன்.

13. *ப்ரபன்ன வைஷ்ணவர்கள் எத்தனை வகைப் பட்டிருப்பர்?* 122

சாத்தினவைஷ்ணவ ரெனவும், சாத்தாத வைஷ்ணவ ரெனவும் இரண்டுவகைப்பட்டிருப்பர்; இவரே இராமாநுஜ தரிசனஸ்த ரெனப் படுவார்.

14. *சாத்தின வைஷ்ணவ ராவார் யாவர்?* 123

ஸம்ஸ்க்ருத திராவிடரூபமான உபபவேதங்களையும் அங்கோபாங்கங்களுடன் முறையே ஓதி, சதாசாரியனை அடைந்து, பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெற்று, வருணாச்சிரமத்துக்குத் தக்கதான சந்தியாவந்தனம், ஜபம் தர்ப்பணம் முதலிய நித்திய நைமித்திக கருமங்களை உபாய புத்தியின்றி [பகவதாஜ்ஞா கைங்கரியம் என்னும் புத்தியோடே **பரார்த்தமாக** அனுஷ்டித்துக்கொண்டு, சித்தோபாயத்தைப்பற்றி திறம்பாத சித்தராய். சிகையும்

பூணூலும் சாத்திக்கொண் டிருத்தலாலே, சாத்தின வைஷ்ணவரெனச் சொல்லப்படும் பிராமண வருணத்தி லவதரித்திருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள்.

15. *சாத்தாத வைஷ்ணவராவார் யாவர்?* 124

ஞானமும் அனுஷ்டானமும் நன்றாகவேயுடைய சத்குருவையடைந்து சங்கசக்கரப்பொறி, திருமண்புண்டரம், தாசியநாமம், திருமந்திரம், திருவாராதனம் என்னும் ஐந்து தீக்ஷைகளும் பெற்று, சித்தோபாயத்தில் நின்றும் நழுவுதற்கு ஏதுவான உபாயாந்தரங்களைப் பற்றறவிட்டு, ஈசுவரனே உபாயமும் உபேயமு மெனப்பற்றி, விதிப்படி தமிழ்வேத மோதியுணர்ந்து, **மறந்தும் புறந்தொழாதே,** விஷயாந்தர பிரயோஜனாந்தர விரக்தராய், அகங்கார மமகாரங்கள் அற்பமும் இலராயிருக்கும் சிகையும் பூணூலும் சாத்தாம லிருத்தலாலே சாத்தாத வைஷ்ணவரெனச் சொல்லப்படும் ஏனைய ஸ்ரீ வைஷ்ணவர்கள்.

16. *சக்கரப்பொறி யில்லாவிடில் எவ்வெவையில்லை?* 125

வேத வேதாந்தங்களில் விசேஷித்துச் சொல்லப்படும் சங்கசக்கரப்பொறி யில்லாவிடில், பகவத் பாகவத அங்கீகாரமும், ப்ரஹ்மஜ்ஞான உபதேசயோக்கியதையும், வைதிக கருமானுஷ்டான யோக்கியதையும் இல்லை.

17. *சங்க சக்கரப்பொறி மற்றெவ்வெவற்றுக்கு இருத்தல் வேண்டும்?* 126

வைஷ்ணவனுடைய வீட்டிலுள்ள ஆசனங்களையொழிந்த, பாத்திரங்கள், பசுக்கள் முதலிய எல்லாவற்றுக்கும் சங்க சக்கர சின்னங்கள் இருத்தல் வேண்டும்.

வைஷ்ணவ சின்னங்களில்லாத பாத்திரங்கள் முதலிய வற்றை உபயோகப்படுத்திக் கொள்ளல் கூடாது.

18. *தமிழ்வேத மோதாவிடில் வைஷ்ணவத்துவம் இல்லேயோ ?* 127

வடமொழி வேதத்தை யோதி அதன் அர்த்தமறிந்து, அறிந்தபடி அனுஷ்டியாதபோது பிராஹ்மண்ணியம் இல்லாதாப்போல தமிழ் வேதத்தை விதிப்படி யோதி அதில் அர்த்தஜ்ஞானமுண்டாய் அதன்படி அனுஷ்டியாதபோது வைஷ்ணவத்துவ சித்தியில்லே. "சந்தங்க ளாயிரமும் அறியக்கற்று வல்லார் வைட்ணவர்" என்னும் ஆழ்வார் * ஸ்ரீசூக்தியும் "அத்யயன ஞானுனுஷ்டானங்களாலே ப்ராஹ்மண்ய மாகிருப் போல சந்தங்களாயிரமும் அறியக் கற்று வல்லராளுல் வைஷ்ணவத்துவசித்தி" என்னும் ஆசார்யஹ்ருதய சூத்திரவாக்கியமும் அறியற்பாலது.

19. *வைஷ்ணவர் செய்யத்தகாத காரியங்கள் எவை ?* 128

(1) வைஷ்ணவன்; பிணச்சடங்கு, மணச்சடங்கு, அமாவாசை தர்ப்பணம், சிரார்த்தம் முதலியவற்றை பிற மதஸ்தரைக் கொண்டு செய்வித்துக்கொள்ளல் கூடாது.

(2) ஆண்டி பரதேசிகளுக்குச் சிஷ்யராதல், அன்னு ரிடம் உபதேசம் பெறல், அவர்கள் தரும் விபூதி, குங்குமம் முதலியவற்றை வாங்கி பூசிக்கொள்ளல், அந்நிய தெய்வங்களே வணங்கல், ஆராதனம் இல்லா வீட்டில் வசித்தல், உண்ணல்; கள் சாராயங்குடித்தல், மச்ச மாம்சாதிகளேப் புசித்தல், பீடி சிகாரெட் சுருட்டு கஞ்சா அபின் மாஜினம் முதலிய உபயோகித்தல், தாம்பூலத்

* ஸ்ரீ சூக்தி - அழகிய நல்வார்த்தை.

தோடு புகையிலை போட்டுக்கொள்ளல், மூக்குத்தூள் உறிஞ்சுதல், சூதாடல், பொருளாசை ஒன்றையே உபாய மாகக் கொண்டு சதாசர்வகாலமும் எச்சமயத்தோரிடத் தும் லச்சை கெட்டுப் பிச்சையெடுத்துத் திரிதல் ;

(3) யுகாதி, தீபாவளி, நாட்டுக்கார்த்திகை, மாட்டுப் பொங்கல், ஆடிப்பண்டிகை முதலிய விசேஷ நாட்களிலும் மது மாம்சாதிகளைப் படைத்தலும், தின்னலும் வழக்க மாகக்கொள்ளல்.

(4) வேஷம்பூண்டு ஆட்டம் ஆடல், ஆட்டம் வைத்து நடத்தல், பார்த்தல், காமன் பண்டிகை நடத்தல், துரோபதை மாரி கெங்கை காளிகளின் கரகம் எடுத்தல், இவற்றிற்கு உதவி செய்தல் ;

(5) பொய் சொல்லல், களவு செய்தல், பொய்சாட்சி கூறல், பொய் தஸ்தாவேஜுகள் தயாரித்தல், வீண் வழக்குதொடுத்தல், நீதி நியாயஸ்தலங்களுக்கு அடுத் தடுத்து செல்லல், இதையே ஜீவனோபாயமாகக்கொள்ளல், ஆங்கு சமய நெறிகுன்றி சத்தியம் செய்தல், புறச்சமயி களை துதித்தல், வணங்கல், கோளுரைத்தல் இவற்றிற்கு உடந்தையா யிருத்தல் ;

(6) அன்னிய தெய்வங்களை வணங்கல், ஆண்டி பண்டாரம் பரதேசி யாசகன் நாஸ்திகன் குடியன் வெறியன் இவர்களையும், இவர்களது படங்களையும் பூசித்தல், செத்தபிணங்களின் சமாதிகளுக்கு விழா நடத்தல், அக்கூட்டங்களில் சம்பந்தப்படல் அச்சேடங் களைப் புசித்தல் ;

(7) வாடகைச் சத்தம் தராமல் புகைவண்டியில் பிரயாணம் செய்து, அந்த புகைவண்டி வியாபாரி

(ரெயில்வே கம்பெனி)களை மோசம்பண்ணல். பிரயாணச் சீட்டு (டிக்கட்) பரிசோதகன் கேட்குங்கால் தன் சொரூபத்தையும் சமயத்தையும் மறந்தும் புறந்தொழா நிலையையும் கவனியாமலே விடுத்து, பல்லைக்காட்டி கெஞ்சிக் கூத்தாடல், இவ்விழிகுணத்தால் புறச்சமயத்தவர் பலவாறு சமயதூஷணஞ் செய்யக் காரணமாகப் பரிகசிக்கவும் மானமழியவும் நின்று பரிதாபகோலத்தில் அவமதிப்படைதல்;

(8) பெரியோருடைய நிழலைத்தாண்டல், மிதித்தல், சொல்லைப்புறக்கணித்தல், எதிரே கால்நீட்டல், காரியுமிழ்தல், பெரியோர்முன்னும் சன்னதிமுன்னும் போஜனம் திருவாராதனம் முதலிய செய்யும்பொழுதும் மூக்குசிந்தல், இருமல், கொட்டாவி விடுதல், சோம்பு முறித்தல்;

(9) முழங்காலளவு ஜலத்திலன்றி நின்றுகொண்டு ஆசமனம் பண்ணல், ஒற்றை வஸ்திரத்துடனும், சட்டைகளுடனும் ஸ்னானம் ஆராதனம் போஜனம் முதலிய செய்தல், நின்றுகொண்டே தாகநீர் அருந்தல், பாத்திரத்தை கடித்தும், சப்பியும், உறிஞ்சியும், உதட்டில் படும்படியும் தாகத்திற்கு அருந்துதல்;

(10) அசுத்தமா யிருப்போர், வாந்திசெய்வோர், பல்துலக்குவோர், எண்ணெய்த்தலையோடிருப்போர், ஸ்னானம் செய்வோர், சயனித்திருப்போர், மதுமாம்ஸ முண்போர், புறச்சமயத்தோர், வைணவதூஷணை செய்வோர், செய்நன்றி கொன்றோர், புறச்சமயிகளிடத்து யாசித்தே வயிறு வளர்ப்போர், சமயநெறி வழுவினோர், விபசாரிகளிடம் அருந்துவோர், அவளைப்போஷிப்போர், பத்தினியை கைவிட்டோர், பர ஸ்திரீ கமன முடையோர், லாகிரிப்பழக்க

முள்ளோர், மதுமாமிச லாகிரி விற்பனைசெய்வோர், தாடி சடைவளர்த்துப் பொய்வேடம் பூண்டோர், கோதையரை நீதிஸ்தலத்திழுத்து அலக்கழிப்போர், இத்தகையோரை தண்டன் சமர்ப்பித்தல் ;

(11) ஆடையில்லாத ஸ்திரீகளைப் பார்த்தல், பர தாரங்களை இச்சித்தல், சேர்தல், கொண்ட மனையாளைக் கொடுமையாய் நடத்தல், கைவிடல், இல்லற தருமத்தை இழிவென நினைத்தல், தாரத்தைவிட்டுத் தனித்திருத்தலே மேலெனக் கருதல், தாடி சடை வளர்த்தலைத் தூய்மை யென்றெண்ணல், வைணவத் திரளைக் காணில் பொது வாகவன்றி ஒருவரை மாத்திரம் தண்டனிடல் ;

(12) சன்னதிகட்கும், ஆச்சாரியரிடத்தும் பாகவத கோஷ்டிகளிலும், பஜனைக்கூடத்தும், திவ்ய பிரபந்தமாதி தமிழ்வேத காலக்ஷேபசபைகளிடத்தும் ; கால்சட்டை மேல் சட்டை அணிந்தும், ஒற்றை ஆடையோடும் செல்லல் ;

(13) ஸ்னானம் செய்வதற்குமுன் தோய்த்து உலர்த் திய வஸ்திரத்தையாதல், போர்த்துக்கொண்ட கம்பளம் முதலியவற்றை யாதல், வண்ணான் வெளுத்த வஸ்திரத்தை மறுமுறை துவைக்காமலே வண்ணான் சலவையோடே யாதல், ஸ்னானம் செய்த பின்பு தரித்தல் இவ்வித அசுத்த வஸ்திரந்தரித்து திருமண் காப்பு அணிதல், திருவாராதன காரியங்களைச் செய்தல், ஸ்னானம் செய்யாமல் திருமண் காப்பு அணிதல், அவ்வாறே உண்ணல் ;

(14) ஸ்னானம் செய்து, திருவாராதனை முடியுமுன் தூரஸ்திரீ, மிலேச்சர், பாஷண்டி, புறமதஸ்தர், மதுமாம்ஸ மருந்துவோர், வேஷதாரி, விபசாரி, பரஸ்திரீலோலன், முதலியோரிடத்து சம்பாஷித்தல் ;

(15) சேர்ந்தாரைக் கொல்லியாகிய கோபத்தைக் கொள்ளுதல், உண்மையான பாகவதருடைய ஜென்மத்தை நிரூபணம் பண்ணுதல், அவர்கள் பக்கல் அபசாரப்படுதல், புறங்கூறுதல் ;

(16) தமிழ் வேதமாகிய திவ்யபிரபந்த முதலிய கிரந்தங்களைத் தரையில் வைத்தல், கை கால் கழுவாமல் எடுத்தல், பிற மதஸ்தரிடம் பாடங்கேட்டல், வைணவ ரில்லாதார்க்கு இரவல் கொடுத்தல் ;

(17) காலை விதிகளைமுடித்து, திருவாராதனம் போஜனம் செய்யாமுன் நித்திரை போதல், நித்திரைவிட் டெழுந்து அவ்வனுச்சாரம் நீங்க இரண்டாமுறை ஸ்னன மாதி நித்திய முறைகளை நடத்தாது தூக்க முகத்துடனே திருவாராதனம் போஜனம் முதலிய செய்தல் ;

(18) பானம் பண்ணத்தகாத சோடா முதலிய ஆபாஸ நீரையும், ரொட்டி, பிஸ்கோத், பெப்பர்மீட் முதலிய வேற்ருகாரத்தையும் அருந்தல் ;

(19) மாதர் கெற்ப காலத்தில் சிசு ரட்சணத்தின் பொருட்டு காட்டேரி முனி முதலிய பேய் பிசாசுகளுக்குப் பலியிடல், சந்தானம் வேண்டித் தலைசுற்றி யாடவைத்தல், பேய் ஓட்டல், குறி கேட்டல், ஆவேசம் வரவழைத்து அறைகூறுவித்தல், இரட்சை (குளிசம்) கட்டிக்கொள்ளல், அன்னிய மதஸ்தரிடம் மந்திரித்துக்கொள்ளல், முகம்மதிய கோரிக்கு குழந்தைகளை எடுத்துச்செல்லல், அங்கு குழந்தை களின் முகத்தில் ஊதச்செய்தல், முச்சந்தி நாற்சந்திகளில் முட்டை, ஓணன், கோழிக்குஞ்சு, குருவி, பச்சோந்திகளைப் புதைத்துப் பொங்கலிடல், கோழிமுட்டைத் தைலம், முசுறு

முட்டைத்தைலம், விலாங்குமீன் தைலம், நாக்குப்பூச்சி எண்ணெய், மீன் எண்ணெய் முதலிய ஆபாச அநுச்சார வஸ்துக்களை சிசுக்களுக்குப் புகட்டல் ;

(20) கழிப்பு கழித்தல். சாந்திசெய்தல், மயான பூசைபோடல், பிடாரி பேய் பூதங்களுக்கு கோழி ஆடு பலி யிட்டுப் பிரார்த்தித்தல், வைசூரி வந்தபோது மாரிக்கு மாவிட்டுப் படைத்தல், அதை வாங்கி உண்ணல், உடுக்கை அடித்து ஊளையிடல், ஆடு கோழி வெட்டி அபிஷேகம் செய்தல், மசும்மதிய. கிறிஸ்துவ ஆலயங்கட்கு மதிமயங்கிப் பிரார்த்தனை செய்து கொள்ளல் ;

(21) வீராம்பட்டணம், மலையனூர், படவேடு முதலிய பலிவாங்கும் கொலைக்களங்களுக்கு வேண்டிக் கொள்ளல் செல்லல், பலியிடல் காணிக்கை செலுத்தல், அங்கு காது குத்தல் மொட்டை யடித்தல் அத்தெய்வங் களின் பெயர்களை பிள்ளைகட்கு இடுதல் ;

(22) தாடி சடை வளர்த்தல், ததியாராதனைக் சென்று பொய்கூறி யாசித்து வயிறு வளர்த்தல், அதையே ஜீவனோபாய தொழிலாகக்கொண்டு மோசவழியாற் காலந் தள்ளல், மெய்யன்புடன் ததியாராதனை செய்வோரைப் பழிகூறல், க்ஷேத்திர யாத்திரைக்கென்று பொருள் பறித்தல் :

(23) கேதாரிநோன்பு, திருவாதிரை, கிருத்திகை, சஷ்டி, சிவராத்திரி முதலியவற்றை அனுசரித்தல், விநாயக சதுர்த்தியன்று விக்னபிம்பத்தைப் பூசித்தல், மாரி காளி கூளி, முனி, கருப்பன் கோயில்களுககு கோழி, ஆடு, பன்றி வளர்த்தல் இவற்றிற்கு உண்டி சேர்த்தல், தீமிதித் தல், சாட்டையால் அடிபடல் ;

(24) ஏகாதசியன்று அன்னம் புசித்தல், அன்று அன்னதானம் செய்தல், துவாதசியன்று அகதேசி பரிதேசி யாதிய பாடண்ட கூட்டத்திற்கு சமாராதனை செய்தல், ஆயிரங்கறி ஏகாதசியென்று நீக்கப்பட்ட முருங்கை, முள்ளங்கி முதலிய தாமச பதார்த்தங்களைச் சேர்த்தல். திருப்பாவை அநுஷ்டிப்போர்க்கு ஏகாதசி விரதமில்லை யென்று விலாப்புடைக்கத்தின்னல், இத் திணிப்புக்குச் சாதகமாக குற்றமற்ற பெரியாரைச் சான்று கூறல்;

(25) * வைகறைத்துயில் எழாது சூரியோதய வேளை யிலும், உதயம் ஆனபின்பும் படுக்கைவிட்டெழுதல், பகல் நித்திரை செய்தல், அதிகாலையில் ஸ்னனம் செய்யாது சோம்பித்திரிந்து நினைத்தபோது செய்தல், பிரதிதினமும் சிரஸ்நானம் செய்யாமல் கழுத்துவரையில் கண்ட ஸ்நானம் செய்தல், ஸ்நானத்தின்பின் துவைத் துலர்த்திய சுத்தவஸ்திரம் அல்லாது பலநாளாய் துவைக்காத அழுக் கேறியுள்ள வெண்பட்டு செம்பட்டு நார்மடி முதலியவற்றை (மடி) என்று தரித்தல், குளிக்கும்போது சோப் என்னும் சவுக்காரக்கட்டிகளை தேய்த்துக்கொள்ளல்;

(26) கிறிஸ்துவ பாடசாலைக்கும் பிரசங்கத்திற்கும் சிறுவர் சிறுமிகளை அனுப்பல், அன்னார்தரும் துண்டுப் பிரசுரம், புத்தகம், பத்திரிகைகளை வாங்கல், படித்தல், அப்பிரசங்கங்களைக் கேட்டல் முதலிய பற்பலவாம்.



அன்னிய தெய்வங்கள் கொடுக்கும் பலன்கள் அளவுடைத்தாகையாலும்; "எங்கள் முன்னோர்கள் தேவ

---

* வைகறை - விடியற்காலை.

தாந்தரங்களை வணங்கி யறியார்கள்'' என்று * தரிசனத்துக்குத் † தரிசனம் தந்தருளிய கூரநாதரும், "எங்கள் எம்பெருமானுர் காடிச்சால் மூலைக்கடவுளை ஆராதித்தாராகில், நாங்களும் ஆராதிக்கக் கடவோம்'' என்று திரிபுரா தேவியாரும் அருளிச் செய்கையாலே சிஷ்டாசார மில்லாமை யாலும்; தொழலாகாதெனச் சுருதி மிருதி யிதிகாச புராணங்கள் சொல்லுகையாலும்; சக்கரவர்த்தியினுடைய அபிமானம் பெற்ற ஒருவன் அவனுக்குக் கீழ்ப் பட்ட மற்றெவரையும் தொழாதாப் போல; திருமணுளனுக்கு ஆளராய், ஆபத்துக்களில் அவனுல் ரக்ஷிக்கப்படும் அன்னிய தெய்வங்களை வைஷ்ணவர்கள் வணங்குவதில்லை.

21. *வைஷ்ணவர் வணங்கலாகாத அத்தெய்வங்களெவை?*

காட்டேரி, இரிசி, பிடாரி, காளி, கங்காளி, எட்சணி, சாமுண்டி, பூவாடைக்காரி, புட்டாலம்மை, நாகம்மை, பச்சையம்மை, கங்கையம்மை, மாரியம்மன், துரோபதியம்மன், படவேட்டாள், மலையனூராள், வீராம்பட்டணத்தாள், முனி, கருப்பன, வீரன், முத்துவீரன், மதுரைவீரன், மாடன், சுடலைமாடன், முத்தால்ராவுத்தன், காத்தவராயன், பாவாடைராயன், தொட்டியத்து சின்னுன், அயினரப்பன், பெரியாண்டவன், போத்துராஜன், வைரவன், வீரபத்திரன், வேடியப்பன், கூட்டக்காரன், இடும்பன், கடம்பன், ஜடாமுனி, வாழ்முனி, செம்முனி, சங்கிலிகருப்பன், குட்டிச் சாத்தான், குரளி, பேய், பிசாசு, பூதங்கள், சந்திநிலைச் சவங்கள், சுடுகாடுகாத்தான், இந்திரன், ஐங்கரன், அறு

* தரிசனம் - வைஷ்ணவ சமயம்.

† தரிசனம் - கண்.

முகன், உருத்திரன், பிரமன் முதலிய பல வேறுதெய்வங்களும் இவைகளின் கூட்டங்களைச்சேர்ந்த பிரிவுகளுமாம்.

22. *வைஷ்ணவ ராகாதார் யாவர்?* 131

(1) பார்க்கவும், ஸ்பரிசிக்கவும் தகாத இழிபிறவியான (நாய்)க்கு சாதம் வைத்த பின்பே, தான் உண்ணும் வழக்கமுடையோர்; நாய், பூனை, கோழிகளை வீட்டில் வளர்ப்போர்; இவர்கள் வைஷ்ணவராகமாட்டார்.

(2) சத்குரு வாயிலாகத் தமிழ் வேதத்தை யோதாமல், தான் ஞேன்றியாய்க்கற்று, பூருவாசாரியர்கள் போனவழி போகாமல், திருமண் காப்பு மாத்திரம் தீட்டிக் கொண்டு, ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அவதரித்த தமிழ் நாட்டாசாரத்தை விடுத்து, சச் சம்பிரதாய மறியாத மாராட்டாசாரத்தை யடுத்துப் பேய்க்கூத்தாடி சம்சாரிகளை மயக்கித் தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லிச் செய்து பிரயோஜனுந்தர பரராய்த் திரிவார் ஒருபோதும் வைஷ்ணவராகமாட்டார்.

23. *அட்சய பாத்திரம் எற்போர் நீக்கத் தக்கன எவை?* 132

காலை பத்து நாழிகை (10-மணி)க்கு மேலும் அட்சய பாத்திரம் ஏற்றல், அப்போது காலில் செருப்பு, கட்டை முதலிய தரித்துச் செல்லல், பாதரட்சை தரித்து திவ்ய பிரபந்தம் சேவித்தல், புறமதஸ்தர், வைணவ தூஷகர் முதலியோரிடம் வற்புறுத்தி யாசித்தல், புறச்சமயிகளிடம் உண்ணல்;

சத்தந்தராமல் மோசஞ்செய்து புகை வண்டியிற் பிரயாணஞ் செல்லல், திவ்யதேச யாத்திரைக் கென்றும்

ததியாராதனைக்கென்றும் இதர கைங்கர்யங்களுக்கென்றும் பொய்கூறிப் பொருள் சேகரித்தல்;

நீதி நியாய ஸ்தலங்களுக்குச் சென்றும் அங்கு நியாய வாதிகள் சாட்சிகள் முத்திரைக் கடிதங்கள் முதலாய செலவுகளிட்டும், தன் உதர போஷணார்த்த மட்டில் சிக்கனம் செய்துகொண்டு அடுத்துள்ள பாகவதர் வீடுகளுக்குச் சென்று கைம்மாறின்றிப் புசித்தல் முதலிய பலவும் நீக்கத் தக்கன.

24. *வைஷ்ணவரால் ஏற்கத் தகாதன எவை?* 133

(1) ஒப்புயர்வற்ற வைணவத்தில் ஜெனித்தும் சதாச்சார்யனை யடைந்தும் சங்கதோஷத்தால் தேவதாந்தரங்களிலும் பாடண்ட சேர்க்கையிலும் உழன்று, (மூர்த்தி பேதமில்லை; வைணவ நெறிப்படி ஒழுகல் அசாத்தியம்; அவ்வாறு ஒழுகினும் தாரித்திரியம் அதிகமாம்; இக லோக இன்பங்களை விரும்புவோர் தேவதாந்தரங்களைப் பூசித்தல் அவசியம்; நாராயணனை நம்புவோர் நட்டாற்றில் விடப்படுவர்; நெற்றியில் சாந்து குங்குமம் பூதி எவற்றையும் பேதமின்றித் தரிக்கலாம்; மதுமாம்சாதிகளைப் புசித்தல் குற்றமாகா; அவற்றை நீக்கும்படி வற்புறுத்தல் இயற்கை விரோதம்; பொடி, சுருட்டு, வாய்ப்புகையிலை இவற்றை உபயோகித்தல் தவருகா) என்பவாதி குதர்க்க வாதங்களைப் பேசிக்கொண்டே அறிவு ஒழுக்கங்களால் மேம்பாடுருத பிறரையுங் கெடுத்து வைணவத்தை நிந்தித்துத் தானும் கெடும் நாஸ்திகனும், அவன் கூட்டமும், அக்கூட்டத்தின் நட்பும், உதவிகளும், பிறவும் ஏற்கத் தகாதனவாம்.

(2) அகப்பற்றும் புறப்பற்றும் அருது, பொறி புலன்களை அடக்காது, விருப்பு வெறுப்புகளை நீக்காது, அவாவை அழிக்காது, மாசற்ற மனத்தூய்மையும் சலன மற்ற விரக்தியும் கைவரப்பெருது, பெருமை புகழ் பலன் களைக் கருதிவாழும் இல்லறவாசி, சாஸ்திரவிதிப்படி மணம் செய்துகொண்ட உத்தம பத்தினியை சந்ததிக்கு இலக்காகாவாறு * வந்தியாக மனங்கலங்க விடுத்து வேற்றணங்கை நாடியோ நாடாமலோ "வைணவ நெறிக்கு மனைவி மக்களாதி சம்சார பந்தம் கூடா" தென வாய் வேதாந்தம் பேசி வம்ச விருத்தியைக்கெடுத்து பிதிர் தேவதை கோத்திர மூல புருஷர் இவர்களின் சாபத்திற்கு ஆளாகும் குலநாசகன் செய்யும் திருவாராதனம் ததியாரா தனம் பகவத் பாகவத கைங்கர்யம் கதா காலக்ஷேபம் முதலிய யாவும் பிதுர் சாபத்தால் பயனற்றன வாகலான் ஏற்கத் தகாதனவாம்.

(3) பிறன் மனைவியை அபகரித்த மகாபாதகன் வெளிவேஷங்களால் பாகவதனைப்போல் நடித்து பிறரை மயக்கி வஞ்சித்து வந்தாலும், அந்த அதமனுடைய வார்த்தை உபன்யாசம் போதனை காலக்ஷேபம் உபசரிப்பு உபகரிப்பு திருவாராதனைப் பொருள் பிரசாதம் நட்பு, பிற பிரயோஜனங்கள் முதலிய எவையும் ஏற்காது விலக்கத் தக்கனவாம்.

(4) குடும்ப ஸ்திரீ விபசாரத்தாற் கெட்டு, (துர் நடத்தையோடிருந்தும்) வைணவ சின்னங்களைத் தரித்து வைணவிபோல் நடந்துகொண்டாலும் அத்தகைய மகா துரோகி கோஷ்டியின் விநியோகத்திற்காக தயாரிக்கப்

---

* வந்தி - மலடி.

படும் பதார்த்த பட்சண பலகார பாகங்களுக்குரிய பொருள்களேயோ அவற்றிற்காம் பாத்திரங்களேயோ சேக ரித்தல் திருத்தல் சுத்திகரித்தாதல் பாசஞ்செய்தல் உட னிருந்து கலந்து கொள்ளல் பரிமாறல் முதலியவும்; அக் கோதுற்றமாதால் தரப்படும் உபசாரம் உபகாரம் பூஜா திரவியம் பிரசாதம் முதலியவும் நிஷித்தமாகலான் ஏற்கத் தகாதனவாம்.

(5) காடை, கவுதாரி, புரு, கோழி, ஆடு, மாடு, பன்றி வகைகளேயும் மச்சராசிகளாகிய ஜலசரங்களேயும் கொல்லலும் தின்னலும் குலவிதியாகையால் அக் கொலே யும் புலேயும் குற்றமுமாகா, பாவத்தினுஞ்சேரா, அவ்வாறு செய்யாமலும் தின்னுமலும் இருப்போன் மதக்கடமையை அவமதித்தவனுகிருன்; என்று குதர்க்கவாதம் புரிவோ ரிடம் இடைவிடா நட்பு, அன்யோன்ய சகவாசம் கூட் டுறவு செய்தலும்; விலக்கத்தக்கனவாம்.

(6) விரதம், நோன்பு, பண்டிகை முதலிய முக்கிய தினங்களில் போஜனம் அரிசி முதலிய சமையல் பதார்த்தம், பலகாரம் இதர உணவுபொருள்கள் எவற்றை யேனும் கொலே செய்வோர்க்கும் புலாலுண்போர்க்கும் கொடுத்தலும் கொடுப்பித்தலும் அத்யாவசியம் விலக்கத் தக்கனவாம்.

(7) இவற்றை யுணர்ந்தும் இச்சேர்க்கையினின்றும் விலகாது பிடிவாதமாய் அன்னுரோடு இணங்கியும், கலந்தும், வணங்கியும், உறவாடியும், பேதமின்றி அள வளாவியும், சல்லாபித்து மிருந்துகொண்டு. வெளிக்கு மட்டில் சுத்த, வீர, வைஷ்ணவன்போல் நடித்துக்காட்டும் சுகசாரணப் பதர்களின் பார்வையும் ஸ்பரிசமும் அணு காதபடி விலக்க வேண்டுவதே விசேஷ விதியாம்.

**25.** *ஆசாரிய ராவார் யாவர்?* 134

தென்கலை வடகலை யென்னும் வேதமிரண்டினையும் ஓதி யுணர்ந்தவராய், மிருதி யிதிகாச புராண தருக்க மீமாம்சாதி சாஸ்திர வித்தமராய், ஸ்ரீபாஷ்யம் பகவத் விஷயம், ஸ்ரீவசனபூஷணம், தத்வத்ரயம் முதலிய விசிஷ்டாத்வைத சித்தாந்த சார தம நூல்களை ஐயந் திரிபற அறியக் கற்று வல்லராய், பராங்குச பரகால நாதயாமுன எதிராஜ வரவர குரு சச்சம்பிரதாய சித்தராய், அகக்கரண புறக்கரணங்களை யடக்கி யாள்பவராய், அருள், பொறை, சத்தியம் முதலிய ஆத்தும குண பூர்ணராய், சத்துரு, மித்துரு, சுகதுக்க மானுவமான சமராய், சிரச்சேத பட்டாபிஷேக பரியந்தமான ஆபத்து சம்பத்துக்களில் வெறுப்பும் விருப்புமிலராய், பிறப்புக்கு வித்தாகும் ஆசைப் பெருங்கடலைக் கடந்தவராய், ஞான பக்தி வைராக்கியங் களில் சிறந்தவராய், அஜ்ஞானம், அகந்தை மமதை, அழுக்காறு, உலோபம், கோபம், பொய், காமம், இராகம். துவேஷம், மோகம் முதலிய தீயகுணங்களைச் சிதைத் தொழித்தவராய், ஈசுவரனுக்கும், ஜீவனுக்கும் உள்ள சம்பந்தமும் அடையத்தக்க பேரின்பப் புருஷார்த்தமும் அடைவிக்கும் சித்தோபாயமும், தடையான விரோதியும் எடுத்துக்காட்டி சிஷ்யரைத் திருத்தும் சமர்த்தராயுள்ளவர் ஆசாரியராவார்.

**26.** *ஆசாரிய ராகாதவர் யாவர்?* 135

விசிஷ்டாத்வைத சித்தாந்த விதிப்படி யொழுகாதவன், தமிழ்வேத மோதி யுணராதவன், சச்சம்பிரதாய நூல்களைக் கல்லாதவன், ஞானுனுஷ்டானங்க ளில்லாதவன், பேராசை கொண்ட பேதை, ஆத்தும குணங்களில்

லாதவன், ஆருதகோபம் அழுக்காறு பொய் களவு வஞ்சம் முதலிய தீயொழுக்கமுடையவன், குருடன், ஒற்றைக் கண்ணன், உடற்குறையுள்ளவன், *குண்டகன், †கோளகன், வியபிசாரம்செய்த மனைவியை விலக்கிவிடாதவன், வேசிவிடன், பணப்பேய்பிடித்த குணக்கேடன், ராஜசேவை செய்பவன், ராஜதண்டனை யடைந்தவன் முதலானோர் ஆசாரியராக மாட்டார்.

27. *ஓரான்வழி பரம்பரை பூருவாசாரியர் யாவர்?* 136

பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார், சேனை முதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரியநம்பி, எம்பெருமானார், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசாரியர், திருவாய்மொழிப் பிள்ளை, மணவாளமகாமுனிகள் முதலானோர்.

*ஆக வைஷ்ணவ வியல்–27.*

— —

* குண்டகன் - கணவனிருக்கக் கள்ள புருஷனுக்குப் பிறந்தவன்.

† கோளகன் - கணவனிறந்தபின் கள்ளப்புருஷனுக்குக் கைம்பெண்ணிடத்துப் பிறந்தவன். கைம்பெண் - விதவை.

# 6. நித்தியானுஷ்டான வியல்.

———:o:———

1. *வைஷ்ணவர்கள் நாள்தோறும் எந்நேரத்தில் நித்திரை விட்டெழுதல் வேண்டும்?* **137**

சூரிய உதயத்துக்கு ஐந்து நாழிகைக்கு முன்னே பிரம முகூர்த்தத்தில் நித்திரை விட்டெழுந்திருத்தல் வேண்டும்.

2. *நித்திரை விட்டெழுந்த பின்னே யாது செய்தல் வேண்டும்?* **138**

வாயில் ஜலங்கொண்டு கொப்பளித்து இடப்புறத்திலுமிழ்ந்து, கை கால்களையும் கண்களையும் கழுவிக் கொண்டு பகவச்சந்நிதியில் தண்டன் சமர்ப்பித்து கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனும் உட்கார்ந்து கைகளைக்கூப்பி ஆசார்யருடைய தனியன்களும் வாக்கிய குருபரம்பரையும் துவயமும் அனுசந்தித்து, ஸ்ரீசைலேச தொடக்கமான தனியன்கள் திருப்பள்ளியெழுச்சி திருப்பாவை முற்றுமாதல் முதலுங் கடையுமாதல் சேவித்துப் பின்பு வலது காலை வைத்தெழுந்து திருவரங்க யாத்திரை செய்வதாக பாவித்து இரண்டொரு அடியிட்டுக் கோயில் திசை நோக்கி நடத்தல் வேண்டும்.

### ஜல மல விசர்ஜனம்.

3. *ஜல மலம் கழிக்கத் தக்க இடம் எது?* **139**

ஊருக்கு வெளியில் * நிருதி திசையிலே யாதல், தென் திசையிலேயாதல், மேற்றிசையிலேயாதல், அம்பு பாயுந் தூரத்திலுள்ள தனியிடமாம்.

---

* நிருதி - தென் மேற்கு.

4. *ஜல மலம் கழிக்கத் தகாத இடங்க ளெவை?* 140

மரநிழல், புற்று, உழுதநிலம், பயிர், பசுக்கொட்டில், ஜனசங்கமுள்ள இடம், வழி, குழி, யாகபூமி, மலை, பசுக்கள் நிற்குமிடம், பாழ்பட்ட கோயில், நீர்நிலை, நீர்க் கரை, சுடுகாடு, பூந்தோட்டம், குளத்தின் படிகள், நெருப்பு, காற்று, சூரியன், சந்திரன், குரு, பெரியோர்க்கு எதிரிடம் முதலியவைகளாம்.

5. *ஜல மலம் எப்படி கழித்தல் வேண்டும்?* 141

தலையையும் காதுகளையும் வஸ்திரத்தால் மூடிச்சுற்றி சாத்தின வைஷ்ணவர்களாகில் பூணூலை வலக்காதில் சுற்றிக்கொண்டு மூன்று தரம் கையைத்தட்டி பகலிலும் இரண்டு * சந்தியிலும் வடக்கு முகமாகவும் இரவில் தெற்கு முகமாகவும் சுவாசத்தை உள்ளே விடாமல் மௌனமாய் இரண்டுகால்களையும் பூமியில் வைத்து குந்திக்கொண்டு ஜல மலம் கழித்தல் வேண்டும்.

## சௌசம்.

6. *சௌசம் எப்படி செய்தல் வேண்டும்?* 142

ஜல மல விசர்ஜனமானபின்னே குறியை யிடக் கையினால் பிடித்துக்கொண்டு, புண்ணிய தீர்த்தமல்லாத உபஜலமுள்ள இடத்துக்குப் போய் கரையில் ஒருசாணுக்கு இப்பால் இருந்து இடக்கையில் மண்ணும் வலக்கையில் ஜலமும் கொண்டு குறியை ஒருதரமும் குதத்தை ஆறு

---

* காலைசந்தி உதயத்துக்கு முன்னே மூன்றேமுக்கால் நாழிகை; மாலைசந்தி அஸ்தமனத்துக்குப், பின்னே மூன்றே முக்கால் நாழிகை எனவறிக.

தரத்துக்குக் குறையாமலும் இடக்கையை இடையிடயே ஒவ்வொரு தரமும் சுத்திசெய்து பின்னும் இடக்கையைப் பத்துதரமும், இரண்டுகையையும் சேர்த்து ஏழுதரமும், மண்ணும் ஜலமுங் கொண்டு கழுவி அலம்பி இரண்டு கால்களுக்கும் மூன்றுதரம் மண்ணிட்டுக்கழுவி கௌபீனத்தைத் தரித்துக்கொண்டு சௌசம் செய்த இடத்தை ஜலத்தினுல் அலம்பி;

ஆறு, மடு, குளம் முதலிய வேருெரு துறையில் போய் கை கால்களையும் கண்களையும் கழுவி பன்னிரண்டு தரம் வாயில் ஜலம் கொண்டு இடப்புறத்தில் கொப்பளித்து உமிழ்ந்து தலையில் சுற்றிய வஸ்திரத்தை அவிழ்த்து வலக்கையில் உழுந்து அழுந்து மளவு ஜலங்கொண்டு,

அச்சுதாய நம:
அனந்தாய நம:
கோவிந்தாய நம:

என்ருதல்—

அஸ்மத் குருப்யோ நம:
அஸ்மத் பரமகுருப்யோ நம:
அஸ்மத் ஸர்வகுருப்யோ நம:

என்ருதல் உச்சரித்து மூன்றுதரம் ஆசமனம் செய்தல் வேண்டும்.

7. *எந்த மண்ணைக்கொண்டு சௌசம் பண்ணலாகாது?* 143

புற்று மண்ணும், பெருச்சாளி தோண்டிய மண்ணும், நீர்க்குள்ளிருக்கும் மண்ணும், சௌசம் செய்து எஞ்சிய மண்ணும், சுவர்க்குப்பூசிய மண்ணும், புழுக்களுள்ள

மண்ணும், கலப்பையினாலே பெயர்க்கப்பட்ட மண்ணும் கொண்டு சௌசம் பண்ணலாகாது.

8. *சௌசத்துக்கு மண்ணை எப்பொழுது எடுத்துவைத்துக் கொள்ளல் வேண்டும்?* 144

ஜல மல விசர்ஜனத்துக்கு முன்பே மண்ணை எடுத்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

9. *சௌசத்துக்கு உபஜலம் கிடையாவிடில் யாது செய்தல் வேண்டும்?* 145

பாத்திரத்தில் ஜலங்கொண்டு ஓரிடத்தில் வைத்து விட்டு முற்கூறியபடியே ஜல மலங் கழித்து அந்த ஜலத்தால் சௌசம் செய்துகொண்டு பாத்திரத்தை மண்ணும் ஜலமும் கொண்டு சுத்திசெய்தல் வேண்டும். ஜலபாத்திரத்தைக் கையில் வைத்துக்கொண்டு ஜல மலங் கழித்தல் கூடாது.

10. *கேவல ஜலமாத்திரம் விசர்ஜனம் செய்யில் எப்படி சௌசம் செய்தல்வேண்டும்?* 146

தலையில் வஸ்திரத்தைச்சுற்றி ஜலவிசர்ஜனம்செய்து மண்ணும் ஜலமும் கொண்டு குறியில் ஒருதரம் மண்ணிட்டு மூன்றுதரம் ஜலத்தால் சுத்திசெய்து கைகளிலும் கால்களிலும் ஒவ்வொருதரம் மண்ணிட்டு ஜலத்தால் முழங்கை முழங்கால்வரையில் செவ்வையாய்க்கழுவி வாயில் ஜலங்கொண்டு ஏழுதரம் கொப்பளித்து இடப்புறத்தில் உமிழ்ந்து பின்னும் கைகளைக்கழுவி தலைக்கட்டை அவிழ்த்து முன்போல் ஆசமனம் செய்தல் வேண்டும்.

## தந்த தாவனம்

11. *பல் துலக்குவதற்குக் கருவிகள் எவை?* 147

சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட மரக்கொம்பும், இலையும், தூளுமாம். இவை இயற்கையான துவர் உள்ளவையாய் இருத்தல் வேண்டும். இவற்றைக்கொண்டு பல் துலக்கி வந்தால் வாத பித்த சிலேத்துமங்களால் பல்லினிடத்தும் அதன் வேரினிடத்தும் உண்டாகின்ற இருபத்துமூன்று ரோகங்களும் உண்டாகா. இறுதி வரையில் பற்கள் அசைவில்லாம லிருக்கும்.

12. *அவை யாவை?* 148

புன்னை, வில்வம், மா, வேம்பு, வேல் முதலிய மரங்களின் கொம்பும்; ஆலின்வீழ்தும்; மா, நாவல், கரிசனுங்கண்ணி இவற்றின் இலையும்; நாயுருவி, காட்டாமணக்கு இவற்றின் கிளையும் வேரும்; சுக்கு, கடுக்காய் முதலிய சில திரவியங்களைக் கொண்டும், துவர்ப்பான மரங்களின் பட்டையைக் கொண்டும் செய்த தூளுமாம்.

இவற்றில் வேலுக்குப் பல் இறுகும்; வேம்புக்குப் பற்புழுக்கள் சாகும்; நாயுருவிக்கு வசீகரமும்; ஆலுக்கு லட்சுமிகடாட்சமும் உண்டாம். காட்டாமணக்குக்கு ஆடிய பல்லும் இறுகி கெட்டிப்படும். கரிசனுங்கண்ணி என்னும் கையாந்தகரைக்கு பற்புழு, கெட்டியான கபம், தீராத இருமல், அடிக்கடி தொண்டைகட்டும் கோழை முதலிய நீங்கி பற்களும் வலிவுபெறும். புன்னை, வில்வம், மா இவை தந்தரோகங்களை வராமல் நீக்கும்.

இப்படி ஏதேனும் ஒன்றைக்கொண்டு தொடர்ந்தாப்போல் வழக்கமாய்த் தேய்த்து வந்தால் தந்த ரோகங்களே தோன்ரு.

**கொம்புகளை எப்போதும் கணுவோடு தேய்த்தல் வேண்டும்.**

**பல் வியாதி உடையோர்க்கு :—**காட்டாமணக்கின் வேரும் அதன் கிளையும் ; **கபரோகம் உடையோர்க்கு:—** கரிசனுங்கண்ணியும் சஞ்சீவிக்கு ஒப்பாம். எப்போதும் கொம்பும் கிளையுமே பல் துலக்குவதற்கு ஏற்றவை. " ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி " என்னும் பழமொழியும் அநுபவமே! இவையே யல்லாது கீழ் காணும் பொடிகளை யும் செய்து துலக்கிவரலாம்.

பற்பொடி. (1)

1. அத்திப்பட்டை
2. ஆலம்பட்டை
3. நாகப்பட்டை
4. நெல்லிப்பட்டை
5. வேப்பம்பட்டை
6. மகுடம்பட்டை
7. வேலம்பட்டை
8. மாம்பட்டை
9. சொட்டைப்பாக்கு
10. காசிக்கட்டி

    இவைகளை வெய்யலில் உலர்த்தி தனித் தனி இடித்து வஸ்திரகாயம் செய்த தூள் வகை ஒன்றுக்கு **பலம் ஒன்று.**
11. வீட்டில் உபயோகிக்கும் உப்பு நன்ருக பொடிசெய்த பின் **பலம்** இரண்டு.
12. கற்பூரம் பொடி செய்தபின் **பலம் கால்.**

இவை யெல்லாவற்றையும் ஒன்ருகக் கலந்து நன்ருக உறவாக்கி காற்றுப்படாமல் மூடிவைத்து, ஒருவாரத்திற்கு வேண்டிய அளவு எடுத்து தனியே வைத்துக்கொண்டு பிரதி தினமும் பல் துலக்கிவரலாம்.

## பற்பொடி (2)

1. தோல்சீவிய சுக்கு
2. மிளகு
3. கடுக்காய் தோல்
4. ஏலக்காயை உரித்தெடுத்த புதிய ஏலரிசி
5. மாசிக்காய்
6. கிராம்பு
7. வாய்விளங்கம்
8. கிச்சிலிக்கிழங்கு
9. கோரைக்கிழங்கு
10. சடாமாசி
11. அக்கிராகாரம்
12. கற்பூரம்

    வகை ஒன்றுக்கு **பலம் கால்** ;

13. பளிங்கு சாம்பிராணி
14. சீமை கல்நார்
15. உப்பு தனித்தனி **பலம் ஒன்றரை** ;
16. படிகாரம் **பலம் மூன்று**
17. உயர்ந்த குங்குமப்பூ **விராகனிறை ஒன்று குங்குமப்பூ மட்டமாயிருந்தால் விராகனிறை நான்கு**

செய் முறை :—

படிகாரத்தை பொடி செய்து மண் சட்டியிலிட்டு அடுப்பின்மேல் வைத்து எரிக்க உருகி ஜலம் போலாகிச் சுண்டி பூர்த்து நிற்கும். இப்படி கொஞ்சமும் தளதளப்பில்லாமல் பொரிந்து நின்றபின் எடுத்து நன்ருய் பொடித்துக்கொள்ளவும்.

கல்நாரை பஞ்சுபோல் இடித்து, சட்டியில் இட்டு, சட்டி சிவக்கும் வரையில் வறுத்து, அம்மியில் நன்ருய் பொடித்துக்கொள்ளவும்.

உப்பையும் நன்ருய் பொடிசெய்து கொள்ளவும்.

மற்ற சரக்குகளை யெல்லாம் வெய்யலில் உலர்த்தி உரலில் இட்டு இடித்து கம்பிச் சல்லடையில் சலித்து, மற்று மோர்முறை, முன்னைய படிகாரம் கல்நார் உப்பு தூள்களையும் சேர்த்து ஒன்ருக்கிச் சலித்து, கப்பியை அம்மியிலாவது உரலிலாவது பொடித்து கூட்டி காற்றுப் படாதபடி பத்திரப்படுத்தி ஒருவாரத்திற்கு வேண்டிய அளவு தனியே எடுத்து பிரதிதினமும் பல்துலக்கி வரலாம்.

13. *எவற்றைக்கொண்டு பல் துலக்கலாகாது?* 149

செங்கல், கரி, மணல், மண், சாம்பல், ஓடு முதலியவைகள் கொண்டு பல் துலக்கலாகாது.

14. *எப்படி பல் துலக்கல் வேண்டும்?* 150

ஒரு கொம்பையேனும், இலையையேனும், ஜலத்தினுல் அலம்பி கிழக்குமுகமாகவாதல், வடக்குமுகமாகவாதல் இருந்து பற்களின் உட்புறமும், வெளிப்புறமும், செவ்வையாய்த் துலக்கி, நாக்கை வழித்து ஜலத்தை வாயில்

கொண்டு பதினுன்குதரம் செவ்வையாய்க் கொப்பளித்து இடப்புறத்தில் உமிழ்ந்து, கையையும், காலையும், முகத்தையும் கழுவிக்கொண்டு ஆசமனம் செய்தல்வேண்டும். பற்கொம்பு பன்னிரண்டு அங்குல அளவினதாய் இருத்தல் வேண்டும். நின்றுகொண்டாதல், நடந்துகொண்டாதல், போர்த்துக்கொண்டாதல் பல் துலக்கலாகாது.

## ஸ்நானம்.

15. *ஸ்நானம் செய்யத்தக்க நீர்நிலைகள் எவை?* 151

ஆறு, சுனை, ஓடை, மடு, குளம், கேணி முதலியவைகளாம்.

16. *எப்படி ஸ்நானம் செய்தல் வேண்டும்?* 152

முதலில், கௌபீனத்தைக் கசக்கிப் பிழிந்து தரித்துக்கொண்டு, கைகளை மண்ணிட்டுக் கழுவி, வஸ்திரங்களைத் தோய்த்து உடுத்து இடுப்பளவு ஜலத்தி லிறங்கி ஆற்றிலேயாயின் எதிர்முகமாகவும், குளம் முதலியவைகளிலேயாயின் கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனும் நின்று, கொஞ்சம் தீர்த்தமெடுத்து "ஸ்ரீமத் பகவத் பாகவத ஆசார்ய ஸ்ரீபாத தீர்த்தம்" என்று அனுசந்தித்து, சிரத்தில் புரோட்சித்துக்கொண்டு "ஸ்ரீமத் பகவத் பாகவத ஆசார்ய ஸம்ஸ்லேஷத்துக்கு உறுப்பாக உடம்பை அலம்புகிறேன்" என்று அனுசந்தித்து தேவதேவனைச் சிந்தித்து ஸ்நானம் செய்தல் வேண்டும்.

17. *ஆறு, குளம் முதலிய நீர்நிலைகள் இல்லாத இடங்களில் எப்படி ஸ்நானம் செய்தல் வேண்டும்?* 153

கேணியில் ஜலம் முகந்து முற்கூறியபடியே ஸ்நானம் செய்தல் வேண்டும். ஜல முகக்குங் கயிற்றைப் பிறரும், காகம் முதலியவைகளும் தீண்டலாகாது.

18. *ஸ்ஞனம் செய்த பின்பு யாது செய்தல் வேண்டும்?* 154

ஆசமனம் செய்து தலைமயிரை உதருமல் கரையேறி "எம்பெருமானுர் திருவடிகளே சரணம்" என்று அனுசந்தித்துக்கொண்டு உலர்ந்த சிறு வஸ்திரத்தால் தலையையும் உடம்பையும் துவட்டி உலர்ந்த வஸ்திரத்தைத் தலையில் சுற்றிக்கொண்டு ஈரமான கௌபீனத்தைக் களைந்து உலர்ந்த கௌபீனத்தைத் தரித்து கைகளை மண்ணிட்டுக் கழுவி, ஈர வஸ்திரங்களைக் களைந்து கிழியாத சுத்தமான இரண்டு உலர்ந்த வஸ்திரங்களேனும் நாறுமடியேனும் பட்டு வஸ்திரமேனும் வெள்ளைக் கம்பளியேனும் தரித்து கை கால்களைக் கழுவி உட்கார்ந்து முற்கூறியபடியே மூன்றுதரம் ஆசமனம் செய்தல் வேண்டும். நாறுமடி, பட்டு, கம்பளம் முதலியவும் தோய்த்து உலர்த்தியதாகவே இருத்தல் வேண்டும்.

19. *சிரஸ்நானம் செய்ய சக்தி யில்லாதார் யாது செய்தல் வேண்டும்?* 155

கண்ட ஸ்நானம் செய்தல் வேண்டும்.

20. *கண்ட ஸ்நானமாவது யாது?* 156

கழுத்துவரையும் ஸ்நானம் செய்தலாம்.

21. *அதற்கும் சக்தியில்லாத பிணியாளர் யாது செய்தல் வேண்டும்?* 157

வாச ஸ்நான மாதல், மந்த்ர ஸ்நான மாதல் செய்தல் வேண்டும்!

22. * *வாச ஸ்நானமாவது யாது?* 158

தண்ணீரிலேயாதல், வெந்நீரிலேயாதல் அலம்பிப் பிழிந்த வஸ்திரத்தால் தலை முதல் உடம்பெங்கும் துடைத்துக் கொள்ளுதலாம்.

23. *மந்த்ர ஸ்நானமாவது எது?* 159

கை கால்களைக் கழுவி ஆசமனம் செய்து முதல் தடவை முன்பு கால்களிலும் பின்பு மார்பிலும், அதன் பின்பு தலையிலும்; இரண்டாந்தடவை முன்பு தலையிலும், பின்பு மார்பிலும், அதன் பின்பு கால்களிலும்; மூன்றாந் தடவை முன்பு மார்பிலும், பின்பு கால்களிலும் அதன் பின்பு தலையிலும்; பின்னும் ஒன்பதுதரம் தலையிலும் (துவய) மந்திரத்தை அனுசந்தித்துத் தீர்த்தம் புரோட்சித்துக் கொள்ளுதலாம்.

24. *நியமகாலத்தன்றி இன்னும் எவ்வெப்பொழுது ஸ்நானம் செய்தல் வேண்டும்?* 160

மிலேச்சரும், சண்டாளரும், புறச்சமயத்தவரும், ஆசௌச முடையவரும், நாய் பூனை கழுதை பன்றி காக்கை கழுகு பெருச்சாளி கோழி முதலியவைகளும் தீண்டிலும், எச்சில், சீலை, எலும்பு, ஓடு, மசானம் முதலியவற்றை மிதிக்கிலும், பிணத்தைத் தொடிலும், பார்க்கிலும், பிணப்புகை படிலும், கோப முண்டாயினும், வாந்தி செய்யிலும், மிலேச்ச சண்டாளருடைய நிழல் படிலும், தோணியேறிலும், புகைவண்டி யூர்ந்திடிலும், உடுத்த வஸ்திரத்துடன் ஸ்நானம் செய்தல் வேண்டும்.

---

* வாசம் - வஸ்திரம்.

25. *தீண்டலினுலே எவ்வெப்பொழுது ஸ்நானம் செய்ய வேண்டியதில்லை?* 161

பகவத்தரிசனத்திலும், பகவத் பாகவத உற்சவங்களிலும் ஜன நெருக்கத்தினுல் தீண்டப்படில் ஸ்நானம் செய்யவேண்டியதில்லை.

## திருமண் காப்பு.

26. *திருமண் காப்பு எப்படி தரித்துக்கொள்ளல் வேண்டும்?* 162

ஸ்நானம்செய்து மடிதரித்து ஆசமனம் செய்த பின்பு, சுத்திசெய்த இராமாநுஜ பாத்திரத்தில் தீர்த்தங்கொண்டு, கன்றையுடைய பசுவின் சாணியினுல் மெழுக்கிட்டுச் சுத்திசெய்த இடத்தில் (உத்தரவாக்கியத்தை) அனுசந்தித்து கொஞ்சம் தீர்த்தம் தெளித்து உயர்ந்த ஆசனத்தின்மேல் திருமண்பெட்டியை எழச்செய்து, தாழ்ந்த சுத்தமான ஆசனத்தில் கிழக்கு முகமாகவாதல், வடக்கு முகமாகவாதல் பத்மாசனமிட்டு உட்கார்ந்து மூன்றுதரம் கையைத்தட்டி திருமண்பெட்டியை அவிழ்த்து பொன்னினுலேனும், வெள்ளியினுலேனும், தேங்காயோட்டினுலேனும் பசுவின் காதைப்போல் செய்யப்பட்ட கோகர்ணத்தில் தீர்த்தத்தை நிறைத்து திவ்யதேசங்களில் உள்ள வெண்மண்ணினுலே செய்யப்பட்ட திருமண் கதிரை இடக்கையிலே வைத்து வலக்கையினுலே மூடிக்கொண்டு "ஸ்ரீபூதேவ்யைநம:" என்று அபிமந்திரித்து கோகர்ண தீர்தத்தை வலக்கையினு லெடுத்து இடக்கையிலே விட்டு "ஸ்ரீசைலேச" தனியன் தொடங்கி பூருவாசாரியருடைய தனியன்கள், திருப்பல்லாண்டு, திருப்பாவை முதலிய பாக்களைச் சேவித்துக்கொண்டே

திருமண்ணைக் குழைத்துக் கண்ணுடியில் முகத்தைப் பார்த்துக்கொண்டு, ஆள்காட்டி விரலினுலாதல்; பொன்னினுலேனும், வெள்ளியினுலேனும், துளசிக் கட்டையினுலேனும் செய்யப்பட்ட மெல்லிய கோலினுலேயாதல் திருமண்ணும் ஸ்ரீசூர்ணமும் தரித்துக்கொள்ளல்வேண்டும்.

27. *திருமண்காப்புக்குப் பிரமாணங்கள் எவை?* 163

ருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும்; வாசுதேவ, வராக, காத்தியாயன, நாரதாதி மகோபநிஷத்துக்களும்; பாத்ம, பிரமாண்ட, ஸ்காந்தாதி புராணங்களும்; மனு, பராசராதி ஸ்மிருதிகளும்; ஸச்சரித்ர ரக்ஷை, பாஞ்சராத்திர ஆகமமுமாம்.

28. *எவ்விடத்திலுள்ள திருமண் எடுத்து தரித்தல் உத்தமம்?* 164

கடலுள் அழுந்திய பூமியை யிடந்தருளிய வராகப் பெருமானுடைய திருமேனியிலுண்டானதும், திருவரங்கம், திருநாராயணபுரம் முதலிய திருப்பதிகளில், திருப்பாற் கடல் நாதனுடைய ஏவலினுலே, பெரிய திருவடி நாயனுர் கொண்டுவந்து விதிர்த்ததுமான வெண்ணிறமுடைய திருமண்ணை எடுத்து பச்சைச் கற்பூரம் முதலியவற்றைச் சேர்த்து பரிமளிதமாக்கிப் பெருமாளுக்குச் சமர்ப்பித்து வைத்துக்கொண்டு தரித்தல் உத்தமம்.

29. *திருமண்ணை எவ்வாகாரமாக தரித்தல் வேண்டும்?* 165

தற்பரனுன அரியினுடைய பாதாகாரமாய் ஊர்த்துவமாக தரித்துக்கொள்ளல் வேண்டும்.

30. *ஸ்ரீசூர்ணத்தை எப்படி தரித்துக்கொள்ளல் வேண்டும்?* 166

திருமண்காப்புக்கு இடையில் தீபாகாரமாக தரித்துக் கொள்ளல் வேண்டும்.

31. *ஸ்ரீசூர்ணத்தை எந்த திரவியங்களைக் கொண்டு எப்படி செய்து தரித்தல் வேண்டும்?* 167

பரிசுத்தமான மஞ்சளைக் கொண்டுவந்து அதன் தோலைநீக்கி, வெந்நீரால் அதிலுள்ள தைலத்தைப் போக்கி எலுமிச்சம்பழம்சாற்றில் ஊறவைத்து உலர்த்தி, சந்தனம், துளசிவிதை, கோரோசனம், குங்குமப்பூ, பொன் முதலிய திரவியங்களைச் சேர்த்து பரிமள சூர்ணமாக்கி அவ்வரித்திரா சூர்ணத்தைத் திருவாளனுக்குச் சமர்ப் பித்து வைத்துக்கொண்டு தரித்தல் வேண்டும். திவ்விய தேசப் பெருமாள்களுடைய சூர்ணாபிஷேகப் பிரசாதமான அரித்திரா சூர்ணத்தைத் தரித்தல் மிகவும் உத்தமமாம்.

32. *சித்ரோர்த்துவ புண்டரத்தை அரியினது பாதாகார மாக தரிக்கும்படி வேதப் பிரமாணம் உண்டா?* 168

உண்டு. "ஆத்மாவினுடைய இதத்தின்பொருட்டு அரியினுடைய பாதாகாரமாக சித்ர ஊர்த்துவ புண்ட ரத்தை எவன் தரிக்கிருனோ அவன் பரனுக்குப் பிரியனு கிருன். அவன் புண்ணியவானுகிருன். அவன் முக்தனு கிருன்." என அதர்வண வேதங்கூறும். ஏனைய சுருதி மிருதி முதலிய சாஸ்திரப் பிரமாணங்களை விரிவஞ்சி விளம்பிலம்.

33. *அவ்வேதப் பிரமாணம் எது?* 169

"ஹரே: பாதாக்ருதி மாத்மஞே ஹிதாய மத்யே சித்ர மூர்த்வபுண்ட்ரம் தாரயதி, ஸபரஸ்ய ப்ரியோ பவதி, ஸபுண்யவான் பவதி, ஸமுக்திமான் பவதி" என்பதாம்.

34. *திருமண்காப்பு தரிக்கும் இடங்கள் எவை?* 170

நெற்றி, வயிறு, மார்பு, கழுத்து, வலப்புற வயிறு, வலத்தோள், வலப்புறக் கழுத்து, இடப்புற வயிறு, இடத்தோள், இடப்புறக் கழுத்து, முதுகு, பிடரி, ஆகிய பன்னிரண்டிடங்களாம்.

35. *திருமண்ணே நெற்றியில் எப்படி தரித்தல் வேண்டும்?* 171

மூக்கின், மேல் பாகத்தில், தாமரை மலர்போல் இரணடங்குலம் பாதமும், நெற்றியில் இரண்டங்குல மாதல் ஒன்றரை யங்குலமாதல் இடைவெளிவிட்டு, இரண்டு பக்கங்களிலும் ஒவ்வொரு அங்குலம் அகல முடையதாகவும் செவ்வையாய் தரித்தல் வேண்டும்.

36. *நெற்றி யொழிந்த மற்ற பதிஞேரிடங்களில் எப்படி தரித்தல் வேண்டும்?* 172

ஒவ்வொன்றும் * சதுர சிரசு பாதமுடையதாக தரித்தல் வேண்டும்.

---

* சதுர சிரகபாதம் - நாற்சவுக்கமானபீடம்.

37. *நெற்றி முதலான பன்னிரண்டிடங்களில் எவ்வெவ்வள வினதாக தரித்தல் வேண்டும்?* 173

நெற்றி, கழுத்து, அதன் வலப்புறம், இடப்புறம், முதுகு, பிடரி ஆகிய ஆறிடங்களில் நந்நான்கு அங்குலங் களும்; வலத்தோள், இடத்தோள், மார்பு ஆகிய மூன் றிடங்களில் எவ்வெட்டங்குலமும்; வயிறு, அதன் வலப் புறம், இடப்புறம் ஆகிய மூன்றிடங்களில் பப்பத்தங்குலங் களும் உடைய அளவினவாகதரித்தல் வேண்டும்.

38. *திருமண்ணை எப்படி தரித்தலாகாது?* 174

குறியதாயும், வட்டமாயும், கோணலாயும், முற்கூறிய அளவுக்கு மேற்பட்டுங் குறைந்து முள்ளதாயும், குறுக் காயும், நுனி பருத்ததாயும், நெருக்கமாயும், பாதமில்லாத தாயும், வடிவில்லாததாயும், பரிமள மில்லாததாயும் தரித்த லாகாது.

39. *சிலர் "இராமாநுஜர் காலத்தில்தான் திருமண்புண்ட்ரம் உண்டாயிற்று" எனக் கூறுகின்றனரே! அதற்குச் சமாதானமென்னை?* 175

வேத வேதாந்தாதி சாஸ்திரங்களில் விசேஷித்துக் கூறும் சித்ரோர்த்துவ புண்டரத்தினுடைய சீர்மையறியாத வேதத்துக்குப் புறம்பான மதத்தினர் சிலர், பொருமையி னுல் இவ்வாறு கூறுவர். இராமாநுசருக்கு முற்பட்டவரான கம்பநாட்டாழ்வார் தாம் பாடிய இராமாயண பால காண் டத்தில் 'தன் திருநாமத்தைத் தானுஞ்சாத்தியே" என்றும், சுந்தரகாண்டத்தில் "ஐபனுமமைந்துநின்ரு

ழுழியானளவினுமம், நெய்சடர் விளக்கிற்ரேன்றும் நெற்றியே நெற்றியாக'' என்றும், திருமண் புண்டரத்தைப் பற்றி கூறியிருத்தலாலும்; சுருதி, மிருதி, இதிகாச புராணங்களில் சித்ரோர்த்துவபுண்டரத்தின் சீர்மை காண் கையினுலும்; அவர் கூற்றுப் பயனற்றதாம். இவ்விஷயத் தைப்பற்றி நமது (நாலாயிரப் பிரபந்த விசார ஆபாச தர்ப் பணத்தில்) விரிவாகக் கண்டு தெளிக.

மற்ற விபரம் இரண்டாம் பாகத்தில் வெளிவரும்.

40. *வைஷ்ணவப் பெண்கள் எப்படி திருமண் தரித்தல் வேண்டும்?* 176

மூக்கினுடைய மேல் பாகத்தில் தாமரைப் பூப்போலே யாதல், அஷ்டமி சந்திரனைப் போலேயாதல், திருமண்ணை யும்; அதன் மேல் நெற்றிநடுவே தீபத்தின் சுடர்போல ஸ்ரீ சூர்ணத்தையுந் தரித்தல் வேண்டும்.

41. *திருச்சூர்ணத்தை எதில் அடைத்து வைத்துக்கொள்ளல் வேண்டும்?* 177

இலட்சுமி பல மென்னும் வில்வக்குடுக்கையில் அடைத்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

42. *திருமண் புண்டரத்தின்மேல் எவ்வெவற்றை தரித்தல் கூடாது?* 178

திருமண் புண்டரத்தின்நடுவே ஸ்ரீ சூர்ணத்தின்மேல் அன்னிய தெய்வ சின்னமான சாம்பல், சந்தனம்,

அஞ்சனம், மண் முதலியவற்றை தரித்தல்கூடாது. இலட்சுமி சின்னமான திருச்சூர்ணத்தின்மேல், பிறதெய்வ சின்னமான சாம்பல் முதலியவற்றை தரித்திடில், கற்புடைய பெற்ற தாயின்மேல் பர புருஷனைக் கிடத்திய மகா பாவியான ஒருவன் விழும் நரகத்தில் விழுந்து துடித்தல் திண்ணமாம்.

43. *திருமண் பன்னிரண்டும் தரித்துக்கொள்வதற்கு அவகாசமில்லாவிடில் யாது செய்தல் வேண்டும்?* 179

ஆதியும் அந்தமுமான, நெற்றியிலும் பிடரியிலும் தரித்துக்கொண்டு கையைக்கழுவாமலே, எஞ்சிய திருமண்ணும் திருச்சூர்ணமும், கீழே சிந்தாமல் தலையின்மேல் தடவிக்கொள்ளல் வேண்டும்.

## திரு மந்த்ரம்.

44. *திருமண் தரித்துக்கொண்ட பின்பு யாது செய்தல் வேண்டும்?* 180

நூற்றெட்டு துளசி மணிமாலையும், எழுபத்து நான்கு தாமரைமணி மாலையும், திருப்பவித்திர மாலைகளும் கழுத்திலணிந்து; திவ்வியதேசப் பெருமாள்கள், பிராட்டிமார் ஆழ்வா ராசாரியர்களுடைய அபயஹஸ்தங்கள் திருவடி நிலைகளையும்; தத்தம் ஆசாரியருடைய திருவடி நிலைகளையும்; கண்களிலும் மார்பிலும். தோள்களிலும் ஒற்றி சிரமேற்கொண்டு, கைகளைக் கூப்பி, "கேசவாதி தாமோதராந்தமான, பெருமாள் மந்திரங்களையும், ஸ்ரீதேவியாதி, ஸர்வாங்க சுந்தரியந்தமான பிராட்டி மந்திரங்" களையும் அனுசந்தித்துக்கொண்டே, நெற்றி முதல் பிடரியீறான

பன்னிரண்டிடங்களிலும் அஞ்சலிசெய்து; பின்பு, "வாக்கிய குரு பரம்பரை, சுலோக குரு பரம்பரை, திருமந்த்ரம், துவயம், க்ருஷ்ண ராம வராகசரம சுலோகங்கள், ஆசார்ய தனியன்கள்" யாவும் அனுசந்தித்து, பின்பு சிரத்திற்கொண்ட திருவடிநிலைகளைக் கண்களிலும் மார்பிலும் தோள்களிலும் ஒற்றிக்கொண்டு எழுந்து தண்டன் சமர்ப்பித்து, கோகர்ணத்தில் தீர்த்தம் சேர்த்து அதில், ஆசாரிய ரளித்தருளிய தீர்த்தவடியை யிழைத்து, இடக்கையில் எடுத்து வைத்து வலக்கையினுலே மூடி அபிமந்திரித்து, அந்த ஸ்ரீபாத தீர்த்தத்தை இரண்டுதர மேனும் மூன்றுதரமேனும் வலக்கையில்விட்டு, உட்கொண்டு திருமண் பெட்டியைச் சேர்த்து எழச்செய்தல் வேண்டும்.

45. *மந்த்ர மென்பதன் பொருள் என்னே?* 181

மன்—அனுசந்திப்பவரை, த்ரம்—காப்பது, என்பதாம்.

46. *கேசவாதி மந்திரங்கள் எவை?* 182

1. கேசவாய நம:
2. நாராயணுய நம:
3. மாதவாய நம:
4. கோவிந்தாய நம:
5. விஷ்ணவே நம:
6. மதுசூதனுய நம:
7. த்ரிவிக்ரமாய நம
8. வாமனுய நம:
9. ஸ்ரீதராய நம:

10. ஹ்ருஷீகேசாய நம:
11. பத்மநாபாய நம:
12. தாமோதராய நம:

என்பனவாம்.

47. *ஸ்ரீதேவியாதி மந்திரங்கள் எவை?* 183

1. ஸ்ரீதேவ்யை நம:
2. அம்ருதோத்பவாயை நம:
3. கமலாயை நம:
4. சாதுசேவ்யை நம:
5. விஷ்ணுபத்னியை நம:
6. வைஷ்ணவ்யை நம:
7. வராரோஹிண்யை நம:
8. ஹரிவல்லபை நம:
9. ஸார்ங்கின்யை நம:
10. ஸ்ரீதேவதேவ்யை நம:
11. ஸ்ரீமகாலக்ஷ்மியை நம:
12. ஸர்வாங்க சுந்தர்யை நம:

என்பனவாம்.

48. *வாக்கிய குருபரம்பரை எவை?* 184

1. அஸ்மத் குருப்யோ நம:
2. அஸ்மத் பரமகுருப்யோ நம:
3. அஸ்மத் ஸர்வகுருப்யோ நம:

4. ஸ்ரீமதே ராமானுஜாய நம:
5. ஸ்ரீபராங்குச தாசாய நம:
6. ஸ்ரீமத் யாமுநமுநயே நம:
7. ஸ்ரீராம மிசிராய நம:
8. ஸ்ரீபுண்டரீ காட்சாய நம:
9. ஸ்ரீமந் நாதமுநயே நம:
10. ஸ்ரீமதே சடகோபாய நம:
11. ஸ்ரீமதே விஷ்வக்ஸேனாய நம:
12. ஸ்ரீயை நம:
13. ஸ்ரீதராய நம:



என்பனவாம்.

49. *சுலோக குருபரம்பரை எது?* 185

அஸ்மத்தேசிக மஸ்மத்திய்ய பரமாசார்யானசேஷான் குரூன்—ஸ்ரீமந் லக்ஷ்மணயோகி புங்கவ மகாபூர்ணம் முநிம் யாமுநம்—ராமம் பத்ம விலோசனம் முநிவரம் நாதம் சடத்வேஷிணம்—சேனேசம் ஸ்ரிய மிந்திரா ஸஹசரம் நாராயணம் ஸம்ஸ்ரயே.

என்பதாம்.

50. *திருமந்த்ர மாவது எது?* 186

சகல வேதச் சுருக்கான "ஓம் நமோ நாராயணாய" என்னும் திருவஷ்டாட்சரமந்த்ரமாம்.

51. *த்வய மாவது எது?* 187

கடவல்லி உபநிஷத்ஸித்தமாய், முற்கூற்ருல் உபாயத்தையும், பிற் கூற்ருல் உபேயத்தையும் கூருநின்ற,

ஸ்ரீமந்நாராயணசரணௌ சரணம்ப்ரபத்யே
ஸ்ரீமதேநாராயணுய நம:

என்னும் மந்த்ரமாம்.

52. *கிருஷ்ண சரம சுலோகம் எது?* 188

ஸர்வதர்மான் பரித்யஜ்யமாமேகம் சரணம் வ்ரஜ
அஹம்த்வா ஸர்வ பாபேப்யோ மோட்சயிஷ்யாமி மாசுச;

என்பதாம்.

53. *ராம சரம சுலோகம் எது?* 189

ஸக்ருதேவ ப்ரபன்னுய
தவாஸ்மீதி சயாசதே
அபயம் ஸர்வபூதேப்யோ
ததாம்யே தத்வ்ரதம்மம.

என்பதாம்.

54. *வராக சரம சுலோகங்கள் எவை?* 190

ஸ்திதே மனஸிஸுஸ்வஸ்தே
ஸரீரே ஸதியோ நர:
தாதுஸாம்யே ஸ்திதேஸ்மர்த்தா

விஶ்வரூபஞ்ச மாமஜம்
ததஸ்தம் ம்ரியமாணந்து
காஷ்ட பாஷாண ஸந்நிபம்.
அஹம் ஸ்மராமி மத்பக்தம்
நயாமி பரமாங்கதிம்.

என்பனவாம்.

## திரு வாராதனம்.

55. *திருவாராதனத்துக்கு முன்பு யாது செய்தல் வேண்டும்?* 191

திருவாராதன பாத்திரங்களை சுத்திசெய்துவைத்து, திருத்துழாய் புஷ்பங்கள் முதலியவற்றைச் சேகரித்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

## துளசி.

56. *திருத்துழாயை எப்படி எடுத்தல் வேண்டும்?* 192

திருநந்த வனத்துக்குப்போய், பயபக்தியோடு திருத் துழா யாழ்வானுக்கு அஞ்சலி செய்து, அருளிச்செயலை அனுசந்தித்துக்கொண்டே, நகம் படாமல், துளசி தளங் களையும் புஷ்பங்களையும் எடுத்து திருப்பூங் கூடையில் வைத்துக்கொண்டுவந்து பத்திரப்படுத்தல் வேண்டும்.

57. *எப்படி எடுத்து வந்த திருத்துழாய் கொண்டு திரு வாராதனம் செய்யலாகாது?* 193

பஞ்ச ஸம்ஸ்காரம் பெருதாரும், ஆசௌச முடை யாரும், புறச்சமயத்தாரும்; வஸ்திரத்திலும், கையிலும்,

எருக்கு, ஆமணக்கு முதலிய இலைகளிலும்; மசானம் முதலிய அசுத்தமான இடங்களிலும் எடுத்துவந்த திருத்துழாய் கொண்டு திருவாராதனம் செய்யலாகாது.

58. *திருத்துழாய் எடுக்கத் தகாத நாட்கள் எவை?* 194

ஞாயிற்றுக்கிழமை, செவ்வாய்க்கிழமை, வெள்ளிக்கிழமை; அஷ்டமி, துவாதசி, சதுர்த்தசி, சங்க்ராந்தி யுகாதி, பருவசந்தி முதலிய தினங்களாம். இத் தினங்களில் திருத்துழாயை எடுத்திடில் தெய்வ நாயகனை அரியினுடைய சிரத்தைக் கொய்ததொக்கும்.

59. *அந்நாட்களில் எதைக் கொண்டு ஆராதனம் செய்தல் வேண்டும்?* 195

ஏனைய நாட்களில் எடுத்து வைத்த திருத்துழாய் கொண்டு திருவாராதனம் செய்தல் வேண்டும.

60. *உலர்ந்த திருத்துழாய் கொண்டு ஆராதிக்கலாமா?* 196

திருத்துழாய் தளங்களை, சுத்திசெய்த ஏகாந்தமான இடத்தில், சுத்தமான ஆசனத்திலிட்டு உலர்த்தி எடுத்து, பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு, ஒரு வருஷம் வரையிலும் திருவாராதனத்துக்கு உபயோகப் படுத்திக் கொள்ளலாம். "தண்ணந்துழாய்த் தாராயினுந் தழையாயினுந் தண்கொம்ப தாயினுங் கீழ் வேராயினும் நின்ற மண்ணாயினுங் கொண்டு வீசுமின்" என்ற ஆழ்வார் ஸ்ரீசூக்தியை அறிக.

61. *திருவாராதன மூர்த்திகள் எவை?* 197

சாலிக்கிராமங்களும்; பெருமாள், பிராட்டிமார்; ஆண்டாள். ஆழ்வார், எம்பெருமானுர், மணவாள மகா முனிகள் விக்கிரகங்களும்; படங்களும்; திவ்யதேச அபய ஹஸ்தங்களும்; திருவடி நிலைகளும்; தம்தம் ஆசாரிய ருடைய திருவடி நிலைகளுமாம்.

62. *திருவாராதன மூர்த்திகளை எவ்விடத்தில் எழுந்தருளப் பண்ணல் வேண்டும்?* 198

திருமடைப்பள்ளி, சயன ஸ்தலம் முதலிய இடங்களை யொழிந்த; மற்றொருவரும் புகப்பெருத ஏகாந்தமான தனி யிடத்தில், உயர்ந்த ஆசனத்தின்மேல், கோயிலாழ் வானில் எழுந்தருளப் பண்ணல் வேண்டும்.

63. *திருவாராதனம் எப்படி செய்தல் வேண்டும்?* 199

அது, ஆசாரிய வாயிலாகப் பெறப்படும் பஞ்ச ஸம்ஸ் காரங்களில் ஒன்ருகையினுலே, அதிகாரி பேதத்தால் பல வகைப்படும்; சொல்ல முடியாதேனும் தெரிந்தவளவு சுருக்கிச் சொல்லுதும். முன்பு கை கால்களை கழுவிக் கொண்டு ஆசமனம்செய்து பகவச் சந்நிதியில் துவயத்தை அனுசந்தித்துத் தண்டன் சமர்பபித்து "நாயகனுய் நின்ற" பாசுரஞ் சேவித்து கதவைத்திறந்து உள்ளே புகுந்து கோயிலாழ்வானுக்குத் தண்டனிட்டு, நின்று ' கௌஸல்யா ஸுப்ரஜா " என்னும் சுலோகமும் "திருப்பள்ளி யெழுச்சி" முழுவதும்; அவகாசமில்லாவிடில், முதலும் கடையும் சேவித்து மூன்றுதரம் கையைத் தட்டி திருக்காப்பு நீக்கிப்

பெருமாளுக்கு வலப்புறத்தில் நின்று திருவாலவட்டம் பணிமாறி ஒரு திருத்துழாய் தளத்தைப் பவித்திர விரலில் இடுக்கிக்கொண்டு, திருப்பள்ளி சோதித்து "மாரிமலை முழஞ்சில்" பாசுரஞ் சேவித்து, "அஸ்மதாசார்ய ஸ்வாமி அஸ்தத்தினுல், சமர்ப்பிக்கும், ரத்ன ஸிம்மாசனத்தில், கோயில், திருமலை, பெருமாள் கோயில், திருநாராயண புரம் முதலான திவ்யதேச எம்பெருமான்கள், பெரிய பிராட்டியார், நாய்ச்சிமார், அனந்த கருட விஷ்வக்ஸேனு தியர், ஆண்டாள், ஆழ்வார், எம்பெருமானுர், மணவாள மகாமுநிகள், ஆசாரியர்களனைவரும் எழுந்தருளி அஸ்மத் ஸ்வாமி அஸ்தத்தினுல் சர்வோபசாரங்களுங் கண்டருள" என்று பிரார்த்தித்துத் திருத்துழாய் சமர்ப்பித்து, எழுந் தருளியதாக பாவித்து, கற்பூர நீராஞ்சனம் பணிமாறி "அன்றிவ்வுலக மளந்தாய்" என்னும் பாசுரத்தை அனுசந்தித்து மங்களாசாசனம் செய்தல் வேண்டும்.

64. *திருவாராதன பாத்திரங்களை எப்படி ஸ்தாபித்தல் வேண்டும்?* 200

சந்நிதிக்கு முன் சுத்திசெய்த ஒரு பாத்திரத்தில் அர்க்ய, பாத்ய, ஆசமன, ஸ்நான, வட்டில்கள் நான்கையும் முறையே நாற்புறத்திலும், சுத்தோதக வட்டிலை நடுவிலும் வைத்து, இப்பால் அர்க்ய பாத்ய ஆசமன ஸ்நான வட்டில் ஒன்றும், சுத்தோதக வட்டில் ஒன்றுமாக இரண்டு வட்டில்களை வைத்து, திருமஞ்சன பாத்திரத்தைப் பெரு மாளுக்கு வலப்புறத்திலும் படிகத்தை இடப்புறத்திலும் வைத்து ஸ்தாபித்தல்வேண்டும்.

65. *திருவாராதன பாத்திரங்களில் எப்படி தீர்த்தம் சேர்த்தல் வேண்டும் ?* 201

திருக்காவேரியென்னும் திருமஞ்சன பாத்திரத்தில் தீர்த்தம் நிறைத்து ; அதில், பச்சைகற்பூரம், குங்குமப்பூ, ஏலக்காய், சந்தனம் முதலிய பரிமள திரவியங்களேயும் திருத்துழாயையும் சேர்த்து, வலக்கையினுல் பரிசித்துக் கொண்டு, "ஸ்ரீமதே நாராயணுய நம;" என்னும் உத்தர வாக்கியத்தால் ஐந்து தரம் அபிமந்திரித்து, அந்த தீர்த் தத்தில் ஒரு உத்தரணி தீர்த்தமெடுத்து, சந்நிதிக்கு முன் வைத்த ஐந்துவட்டில்களிலும், இப்பால் வைத்த இரண்டு வட்டில்களிலும் துளி துளி தீர்த்தம் சேர்த்து, உத்தர வாக்கியத்தினுல் சுத்தஞ்செய்து, பின்பு, திருமஞ்சன தீர்த்தத்தை முறையே, அர்க்கிய வட்டில் முதல் ஐந்து வட்டில்களிலும் நிறைத்து ; ஒவ்வொன்றிலும் திருத்துழாய் சேர்த்து முறையே, அர்க்கிய வட்டில் முதல் சுத்தோதக வட்டில் ஈருன ஐந்து வட்டில்களேயும், வலக்கையினுல் மூடி, அவ்வைந்து தரம், உத்தரவாக்கியத்தால் அபிமந் திரித்து ; பாத்ய, ஆசமன, ஸ்நான, சுத்தோதக வட்டில் களில் உத்தரணியினுலே கொஞ்சம் கொஞ்சம் தீர்த்த மெடுத்து அர்க்கியவட்டிலில் சேர்த்து, பின்பு, அர்க்கிய வட்டிலில் ஒரு உத்தரணி தீர்த்தமெடுத்து இடக்கையில் பிடித்து ஒரு துளசி தளத்துடன் வலக்கைத் * தர்ஜனி, அனுமிகை விரல்களால் மூடிக்கொண்டு முகத்துக்கு நேரே புருவங்களினிடையே தூக்கி, "ஸ்ரீ அனந்த ஸரஸீ தோயம் கல்யாண ஸாஸீபய: இதந்து விரஜாதோயம் காவேரீ ஸர்வதோமுகீ, தாம்ரபர்ணிநதீ தீர்த்தம் கலஸே ஆவாஹனம்யது:" என்று அபிமந்திரித்து ; அந்த தீர்த்

---

* தர்ஜ்ஜனி - ஆள்காட்டி விரல். அனுமிகை - நடு விரல்.

த்தைத் திருமஞ்சன பாத்திரத்திலும், அர்க்கிய, பாத்ய, ஆசமன, ஸ்நான, சுத்தோதக, வட்டில்களிலும் துளி துளி சேர்த்து, திருவாராதன மூர்த்திகள் மேலும். தத்தம் சிரத்திலும் புரோட்சித்து, எஞ்சிய தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்த்து விட்டு, இப்பால் வைத்த இரண்டு வட்டில்களிலும் திருமஞ்சன தீர்த்தத்தை நிறைத்து, திருத்துழாய் சேர்த்து வலக்கையால் மூடி (உத்தர வாக்கியத்தால்) அவ்வைந்து தரம் அபிமந்திரித்தல் வேண்டும்.

66. *எவ்வெவருக்கு எவ்வெப்படி திருவாராதனம் சமர்ப்பித்தல் வேண்டும்?* 202

முதலில் தத்தம் ஆசாரியர்களுக்கும், பின்பு அவர் தம் அஸ்தங்களினுலே ஆழ்வார் எம்பெருமானுர் மணவாள மகாமுநி கட்கும்; பின்பு, அனந்த கருட விஷ்வக்ஸே ஞதியர்க்கும்; அதன் பின்பு, பெருமாள் பிராட்டிமார்க்கு மாக திருவாராதனம் சமர்ப்பித்தல் வேண்டும்.

67. *எவ்வெப் பாத்திர தீர்த்தங் கொண்டு எவ்வெவருக்குச் சமர்ப்பித்தல் வேண்டும்?* 203

சந்நிதிக்கு முன்வைத்த ஐந்து பாத்திரங்களினுடைய தீர்த்தங் கொண்டு; பெருமாள்கள் பிராட்டிமார்க்கும், இப்பால் வைத்த இரண்டு பாத்திரங்களினுடைய தீர்த்தங் கொண்டு; தத்தம் ஆசாரியர் மணவாள மகாமுநிகள் எம்பெருமானுர் ஆழ்வார் நித்திய சூரிகட்கும், திருவாரா தனம் சமர்ப்பித்தல் வேண்டும்.

முற்கூறிய முறையே, ஒருவர் திருவாராதனம் முடிந்து, மற்றொருவர் திருவாராதனம் தொடங்கும்

அவ்வப்பொழுது, இரண்டு வட்டில்களையும் சோதித்து, திருமஞ்சன பாத்திர தீர்த்தத்தை நிறைத்து, துளசி தளங்கள் சேர்த்து. உத்தர வாக்கியத்தால் அவ்வைந்து தரம் அபிமந்திரித்துக்கொள்ளல் வேண்டும்.

68. *பெருமாளுக்கு திருவாராதனம் எப்படி செய்தல் வேண்டும்?* 204

"ஸர்வ மங்கள விக்ரகாய ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று அனுசந்தித்து, "அர்க்கியம் கண்டருள" என்று அர்க்ய வட்டிலிலும்; "பாத்யங் கண்டருள" என்று பாத்ய வட்டிலிலும்; "ஆசமனம் கண்டருள" என்று ஆசமன வட்டிலிலும், உத்தரணியால் மும்மூன்றுதரம் தீர்த்தமெடுத்து, முறையே திருக் கைகளையும், திருவடிகளையும், திருப்பவளத்தையும் விளக்கி, அந்த தீர்த்தத்தை ஒவ்வொரு தரமும் படிகத்தில் சேர்த்து விட்டு, இடை யிடையே சுத்தோதக வட்டில் தீர்த்தத்தினால் உத்தரணியைச் சோதித்துக்கொள்ளல் வேண்டும்.

69. *பின்பு யாது செய்தல் வேண்டும்.* 205

பின்பு திருவொற்றாடை கொண்டு, ஒருதலையால் திருக்கைகளையும் திருப்பவளத்தையும் துடைத்து; மற்றொரு தலையால், திருவடிகளைத்துடைத்து; அர்க்ய வட்டிலில் ஒரு உத்தரணி தீர்த்தமெடுத்துத் திருத்துழாயினால் திருமுத்து விளக்கி திரு நாவழித்து அந்த தீர்த்தத்தையும் திருத்துழாயையும் படிகத்தில் சேர்த்து, பின்னும் முற்கூறியபடியே அர்க்ய, பாத்ய, ஆசமனங்கள் மும்

மூன்றுதரம் சமர்ப்பித்து தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்த்து விட்டு முன்போல திருவொற்ருடை சமர்ப்பித்தல் வேண்டும்,

70. *திருமஞ்சனம் எப்படி செய்தல் வேண்டும்?* 206

பின்பு "ஸ்நாஞசனத்தில் எழுந்தருள" என்று பிரார்த்தித்து திருத்துழாய் சமர்ப்பித்து, எழுந்தருளினதாக பாவித்து "திருமஞ்சனங் கண்டருள," என்று "வெண்ணெ யளேந்த" பதிகமேனும். முதலுங் கடையுமேனும் "முன் பொலா" "மாயமான்" "காடுகளூடுபோய்" "திண்ணூர் வெண் சங்குடையாய்" பாசுரங்களும், சேவித்துக் கொண்டே திரு மஞ்சனஞ் செய்து திரு வொற்ருடை சமர்ப்பித்தல் வேண்டும்.

அவகாச மில்லாவிடில் "தைலாப்யங்ஙனம் கண் டருள" என்றும் "பஞ்சாம்ருத ஸ்ஞனம் கண்டருள" என்றும் ஸ்ஞனவட்டிலில் உத்தரணியால் மும் மூன்று தரம் தீர்த்தமெடுத்து சமர்ப்பித்து தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்த்து, "சுத்தோதக ஸ்நானம் கண்டருள" என்று உத்தரணியிஞல், சுத்தோதக வட்டிலில் மூன்றுதரம் தீர்த்த மெடுத்து சமாப்பித்துப் படிகத்தில் சேர்த்து முன்போல திருவொற்ருடை சமர்ப்பித்து, "பரிவதிலீசனே" பாசுரத் தால் தூபமும், "வையந்தகளியா" "அன்பேதகளியா "திருக்கண்டேன்" பாசுரங்களால் தீபமும் சமர்ப்பித்து, முறையே, அர்க்கிய பாத்ய ஆசமன வட்டில்களில், மும் மூன்றுதரம் உத்தரணியால் தீர்த்தமெடுத்து திருக்கைகள் திருவடிகள். திருப்பவளத்தை விளக்கி, திருவொற்ருடை சமாப்பித்தல் வேண்டும்.

71. *திருமஞ்சனம் செய்த பின்பு யாது செய்தல் வேண்டும்?* 207

"திருப்பரிவட்டம் கண்டருள" என்று திருப்பரி வட்டம் சமர்ப்பித்து "அலங்காராசனம் கண்டருள" என்று திருத்துழாய் சமர்ப்பித்து "துவாதசோர்த்துவ புண்டரம் கண்டருள" "யஜ்ஞோபவீதம் கண்டருள" திருப்பவித்ரம் கண்டருள" "திருவாபரணங்கள் கண்டருள" என்று ஒவ்வொருதரமும் திருத்துழாய் சமர்ப்பித்து "நாறிய சாந் தம்" பாசுரத்தால், சந்தனமும், "ஆநிரை மேய்க்க" பதிகத்தாலேனும், முதலும் கடையுமான பாசுரங்களா லேனும் திருத்துழாயும் புஷ்பங்களும் சமர்ர்ப்பித்து, "புகை யால் விளக்கால்" பாசுரத்தால் தூபமும், "பல்லாண்டு அடியோமோடும்" பாசுரங்களால் தீபமும் சமர்ப்பித்து, "தூபானந்தரம் ஆசமனங் கண்டருள, தீபானந்தரம் ஆசமனங் கண்டருள" என்று ஆசமன வட்டிலில் இரண்டுதரம் உத்தரணியால் தீர்த்த மெடுத்து சமர்ப் பித்துப் படிகத்தில் சேர்த்து திருவொற்றுடை சமர்ப்பித்து, மந்த்ர புஷ்பம் சமர்ப்பித்து, "சென்றால் குடையாம்" பாசுரம் சேவித்தல் வேண்டும்;

72. *திருப்போனகம் எப்படி கண்டருளப் பண்ணல் வேண்டும்?* 208

"போஜ்யாசனம் கண்டருள" என்று திருத்துழாய் சமர்ப்பித்துத் திருமுன்பே ஸ்தல சுத்திசெய்து திருப்போன கத்தைச் சமர்ப்பித்து, அர்க்கிய வட்டிலில், உத்தரணி யினாலே தீர்த்தமெடுத்துத் திருப்போனகத்தில் "உத்தர வாக்கியத்தை" அனுசந்தித்து புரோட்சித்து வலக்கை யினால் பரிசித்து, "துவயத்தால்" அபிமந்திரித்து,

பெருமாள்களுக்கு ஒரு கூறும். பிராட்டிமார்க்கு ஒரு கூறுமாக பாவித்து, உத்தரணியால், அர்க்ய வட்டிலில தீர்த்த மெடுத்து இடக்கையில் வைத்துக்கொண்டு, "அஸ்மத் ஸ்வாமி அஸ்தத்தினுல் திருப்போனகம் கண்டருள" என்று "நாறுநறும் பொழில்" "இன்று வந்தித்தனே" "கூடாரைவெல்லும்" பாசுரங்களைச் சேவித்துக்கொண்டே வலக்கையினுலே திருப்போன கத்தை கண்டருளப் பண்ணி தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்த்து, சுத்தோதக வட்டில் தீாத்தத்தினுல் உத்தரணி யைச்சோதித்து, "பானீயம் கண்டருளப்பண்ணி" முறையே அர்க்ய, பாத்ய, ஆசமனங்கள் சமர்ப்பித்து, திரு வொற்றுடை சமர்ப்பித்தல் வேண்டும்.

73. *விஷ்வக்ஸேனுதி நித்திய சூரிகளுக்கும், ஆழ்வாரா சாரியர்கட்கும் பிரசாதம் எப்படி கண்டருளப் பண்ணல் வேண்டும்?* 209

பெருமாள்களுக்கும் .பிராட்டிமார்க்கும் கண்டருளப் பண்ணிய பிரசாதத்தை முன்பு விஷ்வக்ஸேனர் முதலான நித்தியர்களுக்கும், பின்பு, ஆழ்வார் எம்பெருமானுர் மணவாள மகாமுநிகளுக்கும், அதன் பின்பு தத்தம் ஆசாரியர்க்கும் முற் கூறியபடி பானீயத்தோடே கண் டருளப்பண்ணி, அர்க்கிய பாத்ய, ஆசமனங்கள் சமர்ப் பித்துத் திருவொற்றுடை சமர்ப்பித்தல் வேண்டும்.

74. *அடைக்காய் எப்படி கண்டருளப் பண்ணல் வேண்டும்?* 210

"பர்யங்காசனம் கண்டருள" என்று திருத்துழாய் சமர்ப்பித்து "போய்ப்பாடுடைய" பாசுரத்தால், அடைக்

காய் கண்டருளப்பண்ணி, அர்க்ய பாத்ய ஆசமனங்கள் சமர்ப்பித்துத் திருவொற்றுடை சமர்ப்பித்தல் வேண்டும்.

75. *சாற்றுமுறை எப்படி செய்தல் வேண்டும்? 211

திருவாலவட்டம் சமர்ப்பித்து கற்பூர நீராஞ்சனம் பணிமாறி "சிற்றஞ் சிறுகாலே" "வங்கக்கடல்" "பல்லாண்டு, அடியோமோடும்" பாசுரங்கள் சேவித்து திருத்துழாய் சமர்ப்பித்து "ஸர்வதேச" தொடங்கி "மண வாள மாமுநியே இன்னமொரு நூற்றுண்டிரும்"வரை சேவித்துச் சாற்றுமுறை செய்து "எனைப்போல் பிழை செய்வார்" "உபசாராபதேசேன" "அமர்யாத" முதலிய வற்றை அனுசந்தித்து அபராத க்ஷாமணம் பண்ணிக் கொண்டு, தண்டன் சமர்ப்பித்து, திருப்படிக தீர்த்தத்தை உத்தரணி யாலெடுத்து மூன்றுதரம் வலக்கையில் சேர்த்து உட்கொண்டு, ஸ்ரீபாத தீர்த்தத்தை இரண்டுதரம் சுவீகரி த்துத் தண்டன் சமர்ப்பித்து, திருவாலவட்டம் சமர்ப்பித்து திருக்காப்பு சேர்த்தல் வேண்டும்.

## போஜனம்.

76. போஜனத்துக்கு உரிய இலைகள் எவை? 212

வாழையிலை, பலாவிலை, மாவிலை, புரசையிலை, புன்னை யிலை, மந்தாரையிலை முதலிய வைகளாம்.

77. இலையை எப்படி போடல் வேண்டும்? 213

கோமயத்தாலே மெழுக்கிட்டுச் சுத்தி செய்த தலத்தில் ஜலத்தினுலே, சதுரசிரமாக சுத்திசெய்து அதன்

* சாற்றுமறை யென்றும் சொல்வதுண்டு.

மேல் இலைகளை செவ்வையாய்க் கழுவி, வாழையிலையாகில் அதன் அடி வலப்புறம் பொருந்தும்படி போடல் வேண்டும்.

78. *இலையில் பிரசாதம் எப்படி படைத்தல் வேண்டும்?* 214

முன்பு பருப்பும், கறிகளும், உப்பும் படைத்து; பின்பு பிரசாதமும், நெய்யும் படைத்தல் வேண்டும்.

79. *பிரசாதத்தை எப்படி புசித்தல் வேண்டும்?* 215

கை கால்களைக் கழுவி கிழக்குமுகமாகவாதல், மேற்கு முகமாகவாதல், தெற்குமுகமாகவாதல், பலகையின்மேல் உட்கார்ந்து கையில் தீர்த்தங்கொண்டு ஆசார்ய தனியனை அனுசந்தித்து உட்கொண்டு, மௌனமாயிருந்து பருப்பு, நெய், கறிகளோடே புசித்து; பின்பு வலப்புறத்தி லிட்டதாக பாத்திரத்திலுள்ள தண்ணீரேனும் வெந்நீரேனும் பானம் செய்தல் வேண்டும்.

80. *புசிக்கும் பொழுது செய்யத்தகாத குற்றங்களெவை?* 216

உண்பதற் கிடையில், உப்பும் நெய்யும் பாலும் படைத்துக் கொள்ளல், பானம் செய்து எஞ்சிய நீரைப் பானம் பண்ணல், கடித்து மிகுதி வைத்த பதார்த்தத்தைத் தின்னல், வாயிற்கொண்ட கவளத்தின் மிகுதி இலையிற் சிந்தல், ஒற்றை வஸ்திரத்துட னுண்ணல், போர்த்துக் கொள்ளல், தரையில் கையை யூன்றல்,' அபானவாயுவை விடுதல், தலையில் வஸ்திரத்தைச் சுற்றிக் கொள்ளல், வீண்வார்த்தை பேசல், சிரித்தல்; நாய், பன்றி, காக்கை, கோழி முதலியவைகளையும்; சண்டாளர், பதிதர், நாஸ்திகர்; பூப்பினையுடையவள் முதலானவர்களையும் பார்த்தல் முதலிய வைகளாம்.

81. *பிரசாதம் புசித்த பின்பு யாது செய்தல் வேண்டும்?* 217

புறத்தேபோய்க் கை கழுவி வாயில் ஜலங்கொண்டு பதினறுதரம் கொப்பளித்து இடப்புறத்திலுமிழ்ந்து கை கால்களைக் கழுவி ஆசமனம் பண்ணல் வேண்டும்.

82. *உண்ட தலத்தை எப்படி சுத்தி பண்ணல் வேண்டும்?* 218

உச்சிஷ்ட தலத்துக்கு அறிகுறியாக, இலைப்புற முழுதும் ஜலத்தைச் சுற்றி, இலையை யெடுத்துப்போய் வெளியே எறிந்து கை கழுவிக்கொண்டு உண்ட தலத்தைப் பசுவினுடைய சாணி கொண்டு இடையில் கையைத் தூக்காமலும், தீண்டிய இடத்தைத் தீண்டாமலும் முழுமையும் உருட்டி அதை வெளியே யெறிந்து, கையலம்பி, பின்னும் அவ்விடத்தில் சாணி ஜலம் தெளித்து மெழுகிக் கை கழுவிக் கொள்ளல் வேண்டும்.

83. *புசிக்கத் தகாத பதார்த்தங்கள் எவை?* 219

ஜாதி துஷ்டம், ஆசிரய துஷ்டம், நிமித்த துஷ்டம் முதலிய தோஷமுள்ள பதார்த்தங்களாம்.

84. *ஜாதி துஷ்டம் என்பது என்னை? அவையாவை?* 220

பிறப்பே தோஷமான பதார்த்தங்கள். அவை யாவன :— மாமிசம், புலால், கள், சாராயம், பிராந்தி வகைகள், அன்னிய தேச (ஆஸ்பத்திரி) மருந்துகள், கஞ்சா, எள்பிண்ணுக்கு, முள்ளங்கிக் கிழங்கு, முருங்கைக் காய், முருங்கைக் கீரை, வில்வக்காய், சுரைக்காய், பீர்க்கங்

காய், பேய்ப் புடோலங்காய். அத்திக்காய், காளான், வெள்ளைப் பூண்டு, வெண்காயம். மலத்தை எருவிட்டு விளைவித்த பதார்த்தங்கள், வெள்ளைக் கத்தரிக்காய், கோவைக்காய், செவ்வகத்தி, காறுங் கருணைக்கிழங்கு முதலியவைகளாம்.

85. *ஆசிரய துஷ்டமாவது எது?* 221

சண்டாளர், மிலேச்சர், பதிதர் முதலானவர்களுடைய அபிமானத்தால் தோஷமான பதார்த்தங்களாம்.

86. *நிமித்த துஷ்டங்களாவன யாவை?* 222

சாந்தி, சிரார்த்தம், முதலிய நிமித்தமும் ; மயிர், புழு, எச்சில், நகம், நூல், முதலியவை பட்ட நிமித்தமும் உடைய அன்னமும் பதார்த்தங்களுமாம்.

87. *உண்ணத் தக்க பதார்த்தங்கள் எவை?* 223

வாழைக்காய், வாழைப்பூ, வாழைத்தண்டு, மாங்காய், பலாக்காய், பாகற்காய், முள்ளிக்காய், நல்ல புடோலங்காய், வெண்டைக்காய், அவரைக்காய், வெள்ளையல்லாத கத்தரிக்காய், சுண்டைக்காய், புளியங்காய், பூசனிக்காய், பொன்னுங்காணிக் கீரை, தூதுவேளைக்கீரை, கீரைத்தண்டு, காருக்கருணைக்கிழங்கு முதலியவைகளாம்.

88. *இரவில் யாது செய்தல் வேண்டும்?* 224

இராத்திரி முதல் ஜாமத்தில், சுத்தமாய்க் கை கால்களைக் கழுவிக் கொண்டு, ஆசமனம் செய்து, பகவச்

சந்நிதியில் தண்டன் சமர்பித்து, மூன்று தரம் கையைத் தட்டி திருக்காப்பு நீக்கி, திருவாராதன பாத்திரங்களைத் துலக்கி, வட்டில்களில் தீர்த்தம் சேர்த்து, முற்கூறியபடியே அர்க்யபாத்ய ஆசமனங்கள் சமர்ப்பித்து. கற்பூர ஆரத்தி பணிமாறி "ஸ்ரீசைலேச" தனியன் தொடங்கி, "திருப் பல்லாண்டு" "ஆநிரை" "இந்திரனேடு" "சென்னி யோங்கு" "அமலனுதிப் பிரான்" "கண்ணினுண் சிறுத் தாம்பு" "ஏழையேதலன்" "ஆழியெழ'! பதிகங்களை முற்று மாதல், முதலுங் கடையுமாதல். சேவித்து முற் கூறிய படியே திருப்போன கத்தைக் கண்டருளப் பண்ணி தண் டன் சமர்ப்பித்துத் தீர்த்தம் உட்கொண்டு, சையாசனம் சமர்ப்பித்து, "மாணிக்கங் கட்டி" "மன்னுபுகழ் கௌசலை" பாசுரங்களை அனுசந்தித்து. திருவாலவட்டம் பணிமாறி திருக்காப்பு சேர்த்தல் வேண்டும்.

89. *திருக்காப்பு சேர்த்தபின் யாதுசெய்தல் வேண்டும்?* 225

பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணிய பிரசாதத் தைப் புசித்துப் புறம்பேபோய்க் கை யலம்பி வாயில் ஜலங் கொண்டு பதினாறுதரம் கொப்பளித்து இடப் புறத்தி லுமிழ்ந்து, கை கால்களைக் கழுவிக்கொண்டு ஆசமனம் செய்து "அரவத்தமளியினேடு" பாசுரத்தை அனுசந்தித்து, அந்தரியாமிப் பெருமாளைக் கண் வளர்த்தி மேற்கே யாதல் கிழக்கே யாதல், தெற்கே யாதல் தலை வைத்து பகவத் தியானத்துடன், சயனித்து விடியற் காலையி லெழுந் திருத்தல் வேண்டும்.

*ஆக நித்தியானுஷ்டான வியல் - 89.*

# 7. வைணவ மாதர் ஒழுக்க வியல்.

1. வைஷ்ணவப் பெண்கள் நாள் தோறும காலையில் யாது செய்தல் வேண்டும்? 226

சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னே எழுந்து பர்த்தாவுக்கும் பகவச் சந்நிதிக்கும் தண்டன் சமர்ப்பித்து கைகளைக் கூப்பி வாக்கிய குருபரம்பரையும் துவயமும் அனுசந்தித்து வெளியேபோய் முற்கூறிய படியே ஜல மல விசர்ஜனம் செய்து சௌசமும் ஆசமனமும் பண்ணி, பல் துலக்கி, வாயில் ஜலங்கொண்டு கொப்பளித்து இடப் புறத்திலுமிழ்ந்து, கை கால்களையும் முகத்தையும் கழுவிக் கொண்டு, அலகிட்டு வீடெங்கும் குப்பையைக் கூட்டித் தள்ளி, பசுவின் சாணி கொண்டு மெழுக்கிட்டு, முறம், உரல், உலக்கை, பலகை முதலியவைகளை யலம்பி அவ்வவ் விடங்களில் வைத்து ஆறு, மடு, குளம், கேணி, முதலிய நீர்நிலைகளில் ஸ்நானம் செய்தல் வேண்டும்,

2. சுமங்கலிகள் எப்படி ஸ்நானம் செய்தல் வேண்டும்? 227

நாள் தோறும் மஞ்சள் பூசி, மஞ்சள் ஜலத்தை சிரத்தில் புரோட்சித்துக் கொண்டு கண்ட ஸ்நானம் செய்தல் வேண்டும். பஞ்ச சம்ஸ்காரம் பெருத சாமானிய பெண்களும், நாய், பூனை, கோழி, காக்கை, முதலியவை களும் தீண்டிலும்; எச்சில், ஓடு, சீலை, எலும்பு முதலிய வைகளை மிதிக்கிலும்; விசேஷவிரதாதி நைமித்திகங்களி லும்; கணவனது கலவியிலும் சிரஸ்நானம் செய்தல் வேண்டும். சோப் என்னும் சவுக்காரம் தேய்த்துக்

கொள்ளலும், முகத்தில் வெள்ளை மாவு அடித்துக் கொள் ளலும் அறவேகூடா.

3. *அமங்கலிகள் எப்படி ஸ்நானம் செய்தல் வேண்டும்?* 228

நாள் தோறும் சிரஸ்நானமே செய்தல் வேண்டும். சுமங்கலிகளாகிலும் அமங்கலிகளாகிலும் ஆடையின்றி ஸ்நானம் செய்ய லாகாது.

4. *வைஷ்ணவ மாதர் ஸ்நானம் செய்த பின் யாது செய்தல் வேண்டும்?* 229

ஆசமனம் செய்து, உலர்ந்த வஸ்திரத்தைத், தரித்து முற்கூறியபடி திருமண்ணும் திருச்சூர்ணமும் தரித்துக் கொண்டு, பன்னிரண்டு பெருமாள் மந்திரங்களும் பன்னி ரண்டு பிராட்டி மந்திரங்களும் அனுசந்தித்துக் கொண்டே அவ்வவ்விடங்களில் அஞ்சலிசெய்து, கைகளைக் கூப்பிக் கொண்டு, வாக்கிய குருபரம்பரை, சுலோக குருபரம்பரை, திருமந்திரம், துவயம், சரமசுலோகங்கள், ஆசாயர்தனியன் களை அனுசந்தித்து, கோகர்ணத்தில் தீர்த்தவடியை யிழைத்து, அந்த தீர்த்தத்தை உட்கொண்டு, பகவத் பாகவத சந்நிதியில் தண்டன் சமர்ப்பித்து துவயானு சந்தானம் செய்து, திருத்துழாயடிக் கீழ் மண்ணும் புளிப் பழமும் கொண்டு, தளிகை பாத்திரங்களை சுத்தி செய்து; தளிகைக்கும், பானத்துக்கும், சுத்திக்கும், திருவாராதனத் துக்கும், வெவ்வேருக பாத்திரங்களில் தீர்த்தத்தை நிரப்பி; கோமயத்தால் மெழுக்கிட்டுச் சுத்தஞ்செய்த இடத்தில், முடிவைத்து அரிசி, பருப்பு, கறிகள் முதலியவற்றை ஆய்ந்து சுத்திசெய்து, திருப்பாவையை அனுசந்தித்துக் கொண்டே சுத்தமாய் தளிகை செய்தல் வேண்டும்.

தளிகை செய்யும் முறையை இரண்டாம் பாகத்திற் காணலாம்.

5. *தளிகை முடிந்த பின்பு யாது செய்தல் வேண்டும்?* 230

தளிகையைப் பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணி, **பர்த்தாவுக்கும் பாகவதர்** கட்கும், படைத்து சேஷமான பிரசாதத்தை உண்ணல் வேண்டும்.

6. *உண்ட பின்பு யாது செய்தல் வேண்டும்?* 231

சந்தனம் புஷ்பம் முதலியவற்ருல் அலங்கரித்துக் கொண்டு பின்பு தாம்பூலம் நுகர்தல் வேண்டும். அமங்கலி களாகில் இவ்வொன்றும் ஆகாவாம்.

7 *பாகவத ராவார் யாவர்?* 232

திறம்பாத ஞான பக்தி வைராக்கியங்களிற் சிறந்த வராய், ஓதி யுணர்ந்தபடி ஒழுக்க முடையராய், அகக்கரண புறக்கரணங்களை அடக்கினவராய், அருள் பொறை முதலிய ஆத்ம குணங்களை யுடையராய், அகங் காரத்தை யழித்தவராய், அர்த்த காமங்களை அறுவறுத் தொழித்தவராய், விதி நிஷேத விவேக சீலராய், ஆசார்ய விசுவாசகராய், திவ்விய பிரபந்தங்களைக் கற்றுணர்ந்த தெள்ளியராய், இராக துவேஷ மில்லாதவராய், அன்னிய தெய்வங்களை அறியாதவராய், பொய் பொருமை கோபம் வஞ்சம் முதலிய பொல்லாக் குணங்களில்லாதவராய், அர்த்த பஞ்சக, தத்வத்திரய, ரகசியத்திரய, ஸ்ரீவசன பூஷணம் முதலிய விசேஷ சாஸ்திர ஞான முடையராய்,

ஆகாரநியதி சகவாசநியதி அனுவர்த்தனநியதி யுடைய ராய், [1] பருவத் திரயத்தும் பரிவுடையரா யிருப்பார் பாகவதராவார். "சுகசாரணரைப்போலே வேஷதாரி களாய், உள்ளத்தில் ஈரமில்லாத கள்ளராய், சூதும் வாதும் செய்து, சம்சாரிகளை மயக்கித்துட்டு பறித்துத் திரிவார்" பாகவத ராகமாட்டார்.

8. *வைஷ்ணவ மாதர் இரவில் யாது செய்தல் வேண்டும்?* 233

அந்திப்பொழுதே பகவச் சந்நிதியிலும், திருமுற்றத் திலும், திருமடைப்பள்ளியிலும், மற்ற இடங்களிலும் திருவிளக்குக ளேற்றி, விதிப்படி தளிகை செய்து பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணி பர்த்தாவுக்கும் மற்றவர்க்கும் படைத்து சேஷத்தை யுண்டு, தற்பரனை அரியைச் சிந்தித்து சயனித்து [2] வைகறையி லெழுந் திருத்தல் வேண்டும்.

9. *பெண்கள் பூப்பு வந்த காலத்தில் யாது செய்தல் வேண்டும்?* 234

[3] மூன்றுநாட்கள் மறைவிடத்திருந்து இரவி லுண்ணு மல், நாலாம் நாள் பகல் பன்னிரண்டு நாழிகைக்கு மேல் ஆறு மடு குளம் கேணி முதலிய நீர் நிலைகளில், சிரஸ் நானம் செய்தல் வேண்டும். அன்று அவர் செய்யும் தளிகை அவர் மாத்திரம் உண்ணலாமேயன்றி ஏனையோ ருண்ணலாகாது.

---

1 பருவத்திரயம் - பகவத் பாகவத ஆசாரியராகிய மூன்றிடம்.

2 வைகறை - விடியற் காலம்,

3 மூன்று நாட்கள் என்பது மூன்று இரவு கழித்தல்.

10. *சுமங்கலிகள் செய்யத் தகாத குற்றங்கள் எவை?* 235

(1) பொழுது புலரும் வரை உறங்கல், படுக்கை விட்டெழுந்து (ஜல மல விசர்ஜனம் சௌசம் ஆசமனம் பல்துலக்கல் வாய் கை கால் முகம் சுத்திசெய்தல் முதலிய ஒன்றும் செய்து கொள்ளாமலே) சாணந் தெளித்தல் தெருக் கூட்டல் முதலிய வீட்டுவேலைகளில் பிரவேசித்தல்.

(2) சூரியோதயத்தின் பின் சாணந் தெளித்தல், தெருக்கூட்டல், நின்றுக்கொண்டே பல் துலக்கல், ஊர் கதைகளைப்பேசி வம்பு வளர்த்திக் கொண்டு காலைப் பொழுதைப் போக்கல், அதிகாலையில் ஸ்நானம் செய்யாமல் வீண் காலங் கடத்தல்.

(3) ஸ்நானம் செய்யாமலே நெற்றிக்கு அணிதல், சமைத்தல், ஆராதித்தல், இப்படியே பர்த்தா பாகவதர் முதலியோர்க்குப் படைத்தல்; உண்ணல்.

(4) ஸ்நானம் செய்து, ஈர முலர்த்திய உடனே திருமண் காப்பணியாது காலதாமதம் செய்தல்.

(5) ஸ்நானம் செய்து திருமண் காப்பணியாமல் தளிகை செய்தல், ஆராதித்தல், பரிமாறல் உணவருந்தல்.

(6) ஸ்நானம் செய்து, திருமண் அன்றி ஸ்ரீசூர்ணம் மட்டில் தனியே அணிதல்.

(7) ஆடையைக் களைந்து ஸ்நானம் செய்து களைந்த ஆடையை அப்படியே துவைக்காமல் உடுத்திக்கொள்ளல்.

(8) மஞ்சள் பூசிக்கொள்ளாமல் குளித்தல்.

(9) ஸ்னுனத்தின்போது உடுத்தி யிருந்த சேலையை நனைக்காமல் அவிழ்த்து வைத்துவிட்டு, ஸ்னுனம் முதலிய முடிந்தபின், முன்களைந்த விழுப்பு சேலையைத் தொட்டுத் துவைத்தல்.

(10) இப்படிச் செய்ய நேர்ந்திடின் பின் ஸ்னுனம் செய்யாது வீட்டிற் கலந்து கொள்ளல்.

(11) ஸ்னுனம் செய்வதன் முன் துவைத் துலர்த்திய சேலை, போர்த்துக் கொண்ட சேலை, படுக்கையில் போட்ட சேலை, வண்ணுன் சலவையுடனே (மறுபடி துவைக்காமல்) வைத்துள்ள சேலை, குளிக்காதவர்கள் தொட்டு எடுத்துக் கொடுத்த சேலை, பூப்பு காலத்தில் நான்கு நாள் பூர்த்தி யாவதன் முன் ஸ்னுனம் செய்து வீட்டுவேலை பார்க்கும் தூரஸ்திரீ தொட்டுக் கொடுத்த சேலை, எண்ணெய்த் தலையோடிருக்கும் ஸ்திரீ எடுத்துக்கொடுத்த சேலை, தான் ஸ்னுனம் செய்யாமுன் விழுப்போடு, தன் கையால் தொட்டு எடுத்துக்கொள்ளும் சேலை, புறச்சமயஸ்திரீ தொட்ட சேலை, பல தினங்களாய் துவைக்காமல் வைத் துள்ள நார்மடி வெண்பட்டு செம்பட்டு முதலிய சேலை வகைகளை ஸ்னுனம் செய்தபின் உடுத்திக் கொள்ளல்.

(12) பகலில் உறங்கல்; உறங்கிய பின் ஸ்னுனஞ் செய்யாமல் சமைத்தல், அவ்வாறே ஆராதனம் செய்தல், பரிமாறல்.

(13) எக்காரணத்தாலாவது கண்ணீர் விட்டு துக்கிக்க நேர்ந்தால் உடனே ஸ்னுனம் செய்யாதிருத்தல், அப்படியே வீட்டுக் காரியங்களில் பிரவேசித்தல்.

(14) தளிகை, ஆராதனை, பரிமாறல் இச் சமையங்களில் எச்சிற்றுமி அவற்றில் விழும்படி அடிக்கடி சமீபித்து உரத்துப் பேசல்.

(15) தாம்பூலத்துடன் கிளிஞ்சிற் சுண்ணும்பு சேர்த்துக்கொள்ளல்.

(16) அன்னிய நாட்டு வாசனைத் தைலங்களை கூந்தலில் தடவிக்கொள்ளல்.

(17) இதரதேச சுகந்த வஸ்து (சென்ட்)களை உடைகளுக்கு போட்டுக்கொள்ளல்.

(18) அயல் நாடுகளிலிருந்து வரும் அவைதிக ஆடைகளை தரித்துக்கொள்ளல்.

(19) பூசாலிகளும் புறச்சமயிகளும் தரும் விபூதி, சாந்து, மஞ்சட் பொடி, குங்குமம், (மை) முதலியவற்றை நெற்றியில் இட்டுக்கொள்ளல் ; ரட்சை (குளிசம்) கட்டிக் கொள்ளல்.

(20) ஆற்றெணுப் பெருஞ்சினம், அழுக்காறு, புறங்கூறல், தற்புகழ்ச்சி, வன்சொல் முதலியவற்றை முழுநட்பாக்கொளல்.

(21) நாவல் என்னும் கற்பனைக் கதைகளைப் படித்து மனத்தூய்மை கெடல், பாகவ தோத்தமரைப் பழிகூறல்.

(22) பர புருஷருடன் சரச வார்த்தைகளைப்பேசல் சிரித்தல் அவர்க்கு எதிரே சஞ்சரித்தல் அருகில் நிற்றல்

அவரைத் தொடுதல் பார்த்தல் நினைத்தல்; பர்த்தாவுக் கெதிரே உட்கார்ந்திருத்தல் படுத்தல் காலை நீட்டல் சோம்பு முறித்தல் அதிர நடத்தல் உரந்து பேசல் எதிர்த்துப்பேசல் அவன் மனதுக்கு மாருக நடத்தல் பிறர்மனை புகுதல் முதலியவைகளாம்.

11. *அமங்கலிகள் செய்யத் தகாத குற்றங்களெவை?* 236

ஆபரணங்கள் அணிதல், சாயப்புடவை தரித்தல், தாம்பூலம் நுகர்தல், தலைமயிரை அலங்கரித்தல், புருஷருடன் சகவசித்தல், ஆவசியகமல்லாத வார்த்தை யாடல், மிகைபட வுண்டல் முதலியவைகளாம்.

12. *இருவரும் நீக்கவேண்டிய குற்றங்களெவை?* 237

சுமங்கலிகளாகிலும், அமங்கலிகளாகிலும், புகை சுருட்டுப் பிடித்தல், மூக்குத்தூளுறிஞ்சுதல், தாம்பூலத்தொடு புகையிலைபோட்டுக்கொள்ளல், சமயாச்சாரத்திற்கு முற்றுமாருன அயல் நாட்டு (ஆஸ்பத்திரி) மருந்துகளை உபயோகித்தல், சோடா, காப்பி பிராந்தி, ரொட்டி முதலிய அருந்தல், நின்றுகொண்டு ஜல விசர்ஜனம் செய்தல் வைணவ நெறியையும் தெய்வீக கற்பையும் கைவிடல் முதலிய மிகவும் குற்றமாம்.

மற்றவை இரண்டாம் பாகத்தில் காணலாம்.

*ஆக வைணவ மாதர் ஒழுக்க வியல் - 12.*

———

# 8. பகவ தாலய தரிசன வியல்.

———:o:———

1. *திருமா லுகந்தெழுந் தருளி யிராநின்ற திருக் கோயி லுக்கு எப்படி போய்ச் சேவித்தல் வேண்டும்?* 238

ஸ்நானம் செய்து சுத்தமாய் உலர்ந்தமடி வஸ்திரந் தரித்து, திருமண் காப்பு அணிந்து, பய பக்தி விசுவாசத் துடன் அருளிச் செயலை அனுசந்தித்துக்கொண்டேபோய், கோபுர நயினரைக் கண்ட வளவில் கீழே விழுந்து சேவித்து, உள்ளே சென்று, கருட பகவானையும், பலிபீட துவஜ ஸ்தம்பங்களையும் தாழ்ந்து பணிந்து, அப்பால்போய், சந்நிதிக்குமுன் தாளுந் தடக்கையுங் கூப்பித் தண்டன் சமர்ப்பித்து, அறவாழியந்தணனை அப்பனது அருளை நினைந்து ஆடிப் பாடி கைகளைக் கூப்பிக்கொண்டு பிரதட்சிணமாக வந்து, விமானத்தையும் விஷ்வக்ஸேன ரையும் தொழுது சேவித்து, சந்நிதிக்கு முன்னேபோய் சாஷ்டாங்கமாக தண்டன் சமர்ப்பித்து, துவாரபாலகரைத் தொழுது, அனுமதி கொண்டு உள்ளே புகுந்து சேவித்தல் வேண்டும்.

2. *ஆடவர் எப்படி நமஸ்காரம் செய்தல் வேண்டும்?* 239

காலிரண்டும் தலையும் மார்பும் தரையில் படியும்படி கையிரண்டும் தலைக்குமேலே நீட்டிக் கூப்பிக்கொண்டு, அபிமானமற விழுந்து, மனமும் புத்தியும் பொருந்த வணங்கல் வேண்டும்.

3. *பெண்கள் எப்படி நமஸ்காரம் செய்தல் வேண்டும்?* 240

முழங்கா லிரண்டும் தலை யொன்றும் தரையில் படியும் படி, கையிரண்டும் தலைக்கு மேலே நீட்டிக் கூப்பிக் கொண்டு, அபிமானமறக்குனிந்து மனமும் புத்தியும் பொருந்தப் பணிதல் வேண்டும்.

4. *எப்படி பிரதட்சிணம் செய்தல் வேண்டும்?* 241

கைகளைக் கூப்பிக்கொண்டு, நிறைந்த கர்ப்பம் வாய்ந்த பெண்கள் தலையில் நிறைகுடங்கொண்டு நடக்கு மாபோல அடியோசைபடாமல், வீண் வார்த்தை யாடாமல், விமான நிழலும் துவஜஸ்தம்ப நிழலும் மிதியாமல், தோத்திர துவயானுசந்தானம் செய்துகொண்டு, திரு விமானம் திருமதிள் முதலியவற்றி னுடைய அழகு வெள் ளத்தைக் கண்ணாரக்கண்டு, பருகிக் களித்துக்கொண்டு, பிரதட்சிணம் செய்தல் வேண்டும்.

5. *விமான துவஜ ஸ்தம்பங்களின் நிழலை மிதியாமல் விலகிப் போதற்கு வேறு இடமில்லாவிடில் யாது செய்தல் வேண்டும்?* 242

விலகிப்போக வேறு இட மில்லாவிடில் அந்நிழலை மூன்று கூறிட்டு, விமான துவஜஸ் தம்பங்களுக்கு அணித் தான முதல் கூற்றில் அடியிட்டுப் போதல் வேண்டும்.

6. *கோயிலுக்குள் புகுந்த பின்பு எப்படி சேவித்தல் வேண்டும்?* 243

திருவாளன் திருமுன்பேசென்று, உபயநாய்ச்சிமா ரோடு திருக்கைகளிலே பிடித்த திவ்விய ஆயுதங்களும்

வைத்து அஞ்சலென்றகையும் கவித்தமுடியும் முகமும் முறுவலும் ஆசனபத்மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையைக் கண்ணாரக்கண்டு மனமுருக தரிசித்து அர்ச்சகரைக்கொண்டு, தேங்காய் பழம் முதலியவற்றை நிவேதனம் செய்வித்து, கர்ப்பூர நீராஞ்சனம் பணிமாறப் பண்ணி, "பல்லாண்டு, அடியோமோடும்" முதலிய பாசுரங்கள் பாடி மங்களாசாசனம் செய்து தீர்த்தமும் திருத்துழாயும் ஏற்று உட்கொண்டு, சடகோபனைச் சிரமேல் சூட்டப் பெற்று களிகூர்ந்து, பின்பு, சூடிக்கொடுத்த நாய்ச்சியார், ஆழ்வார், எம்பெருமானார், மணவாள மகா முநிகள் முதலானரை முறைப்படி சேவித்து ஆனந்தித்தல் வேண்டும்.

*7. தனிக்கோயில் தாயாரை எப்படி தரிசித்தல் வேண்டும்?* 244

தனிக்கோயில் தாயார் சந்நிதிக்குப்போய், பலி பீடத்துக்கு இப்பால், தோத்திர மந்திரங்கள் சொல்லித் தொழுது பணிந்து கைகளைக் கூப்பிக்கொண்டு, முற்கூறிய படியே பிரதட்சிணமாக வந்து விமானத்தைச் சேவித்து சந்நிதிக்கு முன் சென்று தாளுந் தடக்கையுங் கூப்பித் தாழ்ந்து பணிந்து, துவார பாலகிகளைத் தொழுது அனுமதி கொண்டு உள்ளே புகுந்து சேஷித்துவ சின்னமான திரு, வபிஷேகமும், தேசுபொலிந்த திருமுகமும், சிறு முறுவலும் கருணை பொங்கிவழியும் கருந்தடங் கண்களும், தாமரை மலர்களேந்தும் தடக்கைகளும், அஞ்சலென்ற திருவஸ் தமும், உலகெலாம் பெற்ற திருவுதரமும், யாவரும் பணியுந் திருவடிகளுமாய், ஆசன பத்மத்தி லரசிருக்கும் அழகிய நிலையைக் கண்களாரக் கண்டு, உள்ளங்

கரைந்து, நாக்குழறத் தோத்திரம் செய்து, தரிசித்து, தீர்த்த மேற்று உட்கொண்டு, மஞ்சட் காப்பு பெற்று, சடகோபனைத் தலைமேல் சூட்டக் கொண்டு, மங்களா சாசனம் செய்து மகிழ்தல் வேண்டும்.

8. *திருக்கோயிலில் செய்யத் தகாத குற்றங்களெவை?* 245

வாகனமேறியாதல், பாதரட்சை தொடுத்தாதல் உள்ளே நுழைந்து போதல், கால் சட்டை மேல்சட்டை தலைப்பாகை தரித்துச் செல்லல், திருமுன்பே தண்டனிடா திருத்தல், ஒரு கையை ஊன்றி தண்டனிடல், எச்சிலு மிழ்தல், ஆசௌசகாலத்தில் உள்ளே புகுந்து சேவித்தல். மூக்கு சீந்தல், ஜல மல விசர்ஜனம் செய்தல், கால் நீட்டிக் கொண்டிருத்தல், கையினுல் முழங்காலைக் கட்டிக்கொண் டிருத்தல், முதுகுக்கும் முழங்காலுக்கும் வஸ்திரத்தைச் சுற்றிக்கொண்டிருத்தல், படுத்தல், பொய்சொல்லல், உரந்து பேசல், சிரித்தல், வீண் வார்த்தை யாடல், அழுதல், கலகம் செய்தல், பெண்களுடன் பரிகசித்துப் பேசல், பரநிந்தை செய்தல், பரஸ்தோத்திரம் செய்தல், ஆசனத்தி லிருத்தல், அபானவாயுவை விடுதல், கம்பளம் முதலியவற்றைப் போர்த்துக் கொண்டிருத்தல், சக்தி யிருக்கச் சுருங்கச் செய்தல் முதலியவைகளாம்.

9. *திருக்கோயில்களில் செய்யப்படுவன வாகிய கைங்கர்யங்கள் எவை?* 246

திருவலகிடுதல், திருமெழுக்குச் சாத்தல், திருப் பிண்டி பரிமாறல், திருநந்தவனம் வைத்தல், திருத்துழாய் புஷ்பங்க ளெடுத்தல், திருமாலை கட்டல், திருவிளக் கேற்றல், திருமஞ்சனம் செய்வித்தல், திருச்சந்தன

தருதல், அமுதுபடி திருத்தல், திருவிழாச் செய்தல, வாகனங்கள் செய்துவைத்தல், பாத்திரங்கள் தருதல்; திருப்பரிவட்டங்கள் அளித்தல், திருவாபரணங்கள் சமர்ப்பித்தல், திருமதிள் திருக்கோபுரம் திருக்குளம் திருமண்டபங்கள் திருவிமானம் முதலியவற்றைக் கட்டுவித்தல், திருவாராதனத்துக்கு உரிய திரவியங்களைத் தருதல், திருப்பிரதிஷ்டை செய்தல் முதலியவைகளாம்.

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

*ஆக பகவதாலய தரிசன வியல் 9. ஆக வியல் 8க்கு*

*பிரஸ் நோத்தரம் 246.*

ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை முதற் பாகம்.

*முற்றுப் பெற்றது.*

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

வரவர முனயே நம:

# ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை.

## இரண்டாம் பாகம்.

புவனகிரி

ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ

ஏகாங்கி ஸ்வாமிகள்

அருளிச்செய்தது.

அர்ச்சை



புவனகிரியில் ஸ்ரீ பட்டாபிராமன் சன்னதி முன் மண்டபத்தில்
ப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ள

ஸ்ரீமதித்யாதி அழகிய மணவாள ராமாநுஜ
ஏகாங்கி ஸ்வமிகள் அர்ச்சாமூர்த்தி.

ஸ்ரீ:

காப்பு,

## சடகோபன் துதி.

வெண்பா.

சீரார வைணவமாம் தீபிகையின் பிற்கூறு
பாராரச் செவ்வே பகருதற்கு—நீரார
வாரிதரு மாதவன்ருள் வாய்த்த தமிழ்மறைசொல்
காரிதரு மாதவன்ருள் காப்பு.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்,

முன்னடியா லுலகளந்த முதல்குருவா மணவாள
முநிமே தக்கோன்
பொன்னடியாம் செங்கமலப் போதாகும் முநிமரபிற்
போந்த மேலோன்
தன்னடியா னென்றனையாள் சடபோப முநித்தலைவன்
தண்ணார் வேரி
மன்னடியா மலரிணைகள் மனங்கூட்டிப் பவமோட்டி
மகிழ்ந்து வாழ்வாம்.

## வானமாமலை கலியன் ராமானுஜ ஜீயர் ஸ்வாமிகள் துதி.

தேனமா மலைபொழில்சூழ் செழுஞ்சிரீ வரமங்கை
திருவாழ் மூதூர்
வானமா மலைவருரா மாநுசமா தவன்மலர்க்கால்
வழியா வந்தோன்
ஏனமா மலையுலக மிடந்தபிரா னறிந்தவுர
னெவரும் போற்றும்
கானமா மலைக்கருணைக் கலியனெதி பதிகுருதாள்
கருத்துள் வைப்பாம்.

### அஸ்மதாசார்யர் துதி.

பூங்கடா சலமழைவண் புகழ்த்திருமா லுறவுணர்த்தி
பொருநீர்ப் பாரில்
தீங்கடா தனபுரிந்து திரிந்தநாய்க் கடையேன்மேல்
திருக்கண் ணோக்க
மாங்கடா வியவருள்கூர்ந் தறிவுமழை யகம்பொழியும்
அமர வாதி
வேங்கடா சார்யமுகில் விரைமலர்த்தா ளிணைமுடிமேன்
மிலைச்சி யுய்வாம்.

ஸ்ரீ:

# ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை.

## 1-வது ஈச்வர வியல்.

### வேதங்களால் பிரதிபாதிக்கப்படும் பொருள்.

1. *வேதங்களால் பிரதி பாதிக்கப் படும் பொருள் யார்?* 1

"நாராயண பரோவேதா:" வேதங்கள் நாராயண பரம். சுருதியும், "வேதைச்ச ஸர்வை ரஹமேவவேத்ய:" சகல வேதங்களாலும் பிரதி பாதிக்கப்படுமவன் நானே என்று பகவத் கீதையும் கூறுவதன்படி, பூர்வபாகம் உத்தரபாகம் என இரண்டு பிரிவினை யுடைய சகல வேதங்களாலும், பிரதிபாதிக்கப்படும் பரம்பொருள் நாராயணனேயாம்.

### வேதபூர்வபாகம் நாராயணபரம்.

2. *அக்கினி, இந்திரன் முதலிய பல தேவர்களையும் அவர்கள் ஆராதனங்களையும் கூறும் வேத பூர்வபாகம் நாராயண பரமாதல் எங்கனம்?* 2

வேதபூர்வபாகத்தில் கூறப்படும் அக்கினி இந்திராதி தேவதைகளைக் குறித்துச் செய்யப்படுவனவே யாயினும், சர்வாந்தர்யாமியான நாராயணனிடத்தே சேரக்கடவ தாகும். வைதிகர் யாவரும் தத்தம் கருமங்களின் முடிவில் " ஆகாசாத் பதிதம் தோயம் யதாகச்சதி சாகரம் சர்வ தேவ நமஸ்காரம் கேசவம் ப்ரதிகச்சதி " என்றும், "காயேன வாசா மனசேந்த்ரியைவ புத்யாத்மநாவ ப்ரக்ருதே ச்வபாவாத் கரோமியத்யத் சகலம் பரச்மை நாராயணுயேதி சமர்ப்பயாமி " என்றும், அநுசந்தித்து வரும் வைதிக ஆசாரமே இதனை நிலைநிறுத்தும். இவ்வுண்மை "யேய ஜந்தி பித்ரூன் தேவான் ப்ராம்ஹணுன் சகுதாசனுன் சர்வபூதாந்த ராத்மானம் விஷ்ணுமேவ யஜந் திதே." எவர் பித்ருக்களையும், தேவர்களையும் அக்நிஹோத் ரத்தோடே கூடிய ப்ராம்ஹணர்களையும் பூஜிக்கின்றனரோ அவர் சர்வாத்மாக்களுக்கும் அந்தராத்மாவான விஷ்ணு வையே யஜிக்கின்றனர். என்று, தக்ஷச்மி ருதியிலும், "யேப்யன்ய தேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயான்விதா தேபிமாமேவ கௌந்தேய யஜந்தி அவிதிபூர்வகம்." எவர் அன்னிய தேவர்களை பக்தி ச்ரத்தையோடு ஆராதிக் கின்றனரோ அவர் அந்ததேவர்களுக்கு அந்தராத்மாவான என்னையே ஆராதிக்கின்றனர். அது விதிபூர்வகமன்று, என்று பகவத்கீதையிலும் சொல்லப்பட்டுள்ளது.

3. *யாகங்கள் யார் பரமாகும்?* 3

யாகங்கள் அக்கினியைக் கொண்டு செய்யப்படுவன வாகும். அக்கினி மண்டலம் நாராயணனுக்கு இருப்பிடமா யிருப்பது. இதனை "சங்கசக்ரதரம் தேவம் கிரீடாதி விபூஷிதம் அக்னிமண்டல மத்யஸ்தம் த்யாயேத்

யஜ்ஞபதிம் ஹரிம்.'' என்னும் த்யானச்ருதி சொல்லும். இதில் "அக்னி மண்டல மத்ய்ஸ்தம்'' என்று, நாராயண னுக்கு மத்யஸ்தானத்தைச் சொல்லி யிருப்பதால், அக்னி மண்டலத்தில் நாராயணனுக்கே ப்ரதானத்வம் சொல்லப் படும். அக்னியைக் கொண்டு செய்யப் படுவனவான யாகங்கள் நாராயணபரமா யிருக்குமென்பதனை: "நாராயணபராவேதா நாராயணபராமக:'' என்றும், "சர்வயஜ்ஞமயோ விஷ்ணு,'' என்றும், "யஜ்ஞபிர் யஜ்ஞ புருஷோ வாசுதேவேதி சாத்வதே'' என்றும், சுருதியும், 'அஹம்க்ரது ரஹம் யஜ்ஞா'' என்றும் 'அஹம்ஹி' சர்வயஜ்ஞானும் போக்தாச பரபுரேவச'' என்றும், பகவத் கீதையும் கூறும் ஆகையால் வேதபூர்வபாகம் நாராயண பரமேயாம்.

### வேத உத்தரபாகம் நாராயணபரம்.

4. *பிரமன், உருத்திரன்; இந்திரன் முதலான பல தேவர் களையும் உயர்த்துக் கூறும் உத்தரபாகமாகிய உபனிஷ தங்கள் நாராயணனையே கூறு மென்னல் எப்படி கூடும்?* 4

ஓரரசனது ஆளுகையில் அரசனது மந்திரி, பிரதானி, சேனதிபதிகளைத் தனித்தனியே உயர்த்துக் கூறுமிடத்து அவர்கள் சிறப்பித்துக் கூறப்படுவதுமன்றி, அவரே பட்டபத்திரராகவும் கூறப்படுவதுமுண்டு. அது போல உபனிஷதங்கள் தேவர்கள் பலரைத் தனித்தனியே உயர்த்துக்கூறும். அரசரையும் மந்திரி முதலினரையும் சேர்த்துக் குறிக்கு மிடத்து. மந்திரி பிரதானி முதலா னரினும் அரசனே உயர்த்துக் கூறுதலால் சிறப்பாதல் போல, உபனிஷதங்கள் நாராயணனையும் பிறதேவரையும் சேர்த்துக்கூறுமிடத்து பிறதேவர் நாராயணனிடத்தே

உண்டானுரெனவும், அவனுக்கு விபூதியாயுள்ளா ரெனவும், அம்சமாயுள்ளா ரெனவும் கூறுவதுமன்றி சாத்வீக குணமுடையவனும், ப்ரளய, ச்ருஷ்டி, மோக்ஷ காரணனும் சர்வாந்தர்யாமியும், த்யேயனும் நாராயணனே எனச் சொல்லுவதால், நாராயணனே பரப்ரம்மப் பொருளாவான்.

### பிறதேவர் உயர்த்துக் கூறப்படுவதற்குக் காரணம்.

5 *உபனிஷதங்கள் பிறதேவரை உயர்த்துக் கூறுவது யாதுக்கு?* 5

அரசனது மந்திரி, பிரதானி முதலானுர் பிறருக்கு நன்மை செய்ய வேண்டியவராதலாலும் பிறர் அவரைப் பின் செல்லவேண்டி யிருத்தலாலும், அவர் சிறப்பித்து ஓதப்பாத்திரராதல்போல், முக்குணவசியரான ஆத்மாக் களின் பரிபாகங்களுக்கு ஏற்றவாறு தேவதைகளையும், நாராயணனையும், பலன்களையும் உபனிஷதங்கள் எடுத்துச் சொல்லுமிடத்து பிறதேவர் உயர்த்துக் கூறப்படுவது இயல்பேயாம்.

### பிறதேவர் நாராயணனிடத்தே உண்டானுர்.

6. *பிறதேவர் நாராயணனிடத்தே உண்டானுர் என்றதற்கு சுருதிப் பிரமாணம் யாது?* 6

நாராயணேுபனிஷத்தில்: “நாராயணுத் ப்ரம்ஹோ ஜாயத நாராயணுத் ருத்ரோ ஜாயத நாராயணுத் இந்த்ரோ ஜாயத நாராயணுத் த்வாதசாதித்யாః ருத்ராவசவః சர்வாணி சந்தாம்சி,;’ “நாராயணனிடத்திலிருந்து பிரமன், உருத்திரன் இந்திரன் துவாதச ஆதித்யர்கள், உருதிரர்

கள், வசுக்கன் முதலான யாவரும் உண்டானார்கள்.'' என்றும், "அதநாராயணச் சோன்யம் காமம் மனசாத் யாயீததச்ய லலாடேத் ச்வேதோபதத் ச்வேதாத் புத்புதம் அபவத்புத்புதாத் த்ரியக்ஷச் சூலபாணிரபவத்'' பிறகு, அந்த நாராயணன் மற்றொரு சங்கற்பத்தை மனதினால் த்யானித்தான் அந்த நாராயணனுடைய நெற்றியிலிருந்து வியர்வை விழுந்தது. அந்த வியர்வை ஒரு குமிழியா யிற்று. அந்த குமிழியிலிருந்து சூலத்தைக் கையில் கொண்டு மூன்று கண்களையுடைய உருத்திரன் உண்டா னான், என்றும், யஜுஷி ஆரணத்தில் "விஷ்னுச் சத்வகுணப்ரேணேதா அததச்ய நாபேரஜோத்மா ச்வயம்பூ: அததச்ய ப்ரவோந்தராளாத் தமோருத்ர: ப்ராதுர்பவத்,'' பிறகு, சத்வகுணத்தையுடைய அந்த விஷ்ணுவினுடைய நாபியிலிருந்து ரஜோகுண முடையவனான ச்வயம்பூ என்னும், பிரமன் உண்டானான். பிறகு அந்த பிரம னுடைய புருவமத்தியிலிருந்து தமோகுணத்தையுடைய உருத்திரன் பிறந்தான் என்றும், ஆங்கீரச உபனிஷத்தில்: "ஏகோஹவை நாராயண ஆசீத் நப்ரம்ம நேசான: சமுனிர் பூத்வா சமசிந்தயத் தத்ரதத்யானாத் ஜாயந்தே விச்வோ ஹிரண்ய கர்போக்னி யமம் வருண ருத்ரேந்த்ரா;'' நாராயணன் ஒருவனே இருந்தான் பிரமனுமில்லை ஈசானனு மில்லை. அந்த நாராயணன் மனன சீலனாய் சிந்தித்தான். பிறகு அந்த தியானத்தால் இவ்வுலகமும் ஹிரண்ய கர்ப்பனான பிரமன், அக்நி, யமன், வருணன், உருத்திரன், இந்திரன் முதலானாரு முண்டானார்கள்.'' என்றும், மகோபனிஷத்தில், "ஏகோஹவை நாராயண ஆசீத் நப்ரம்ஹ நேசான: நேமேத்யாப்ருதிவீ நக்ஷத்ராணி நாபோக்னி நசூர்ய:'' நாராயணன் ஒருவனே யிருந்தான்.

பிரமனுமில்லை, சிவனுமில்லை இந்த ஆகாசமுமில்லை, பூமியுமில்லை நக்ஷத்திரங்களுமில்லை. நீருமில்லை, நெருப்புமில்லை சூர்யனுமில்லை, என்று வருமவைகளால் பிறரும் பிறவும் நாராயணனிடத்தே உண்டானமை சொல்லப்பட்டது. இங்கு எடுத்துக்காட்டிய நாராயண உபனிஷத்தில், தனியே ஒரு உருத்திரற்கும், பின்னர் பல உருத்திரர்களுக்கும் உற்பத்திசொல்லியிருப்பதால் முன்னர்ச் சொல்லப்பட்டவர் ப்ரதான உருத்திரரெனவும் பின்னர்ச் சொல்லப்பட்டவர்கள் வேறுபல உருத்திரர்கள் எனவும் உணர்க.

## பிறதேவர் நாராயணனுக்கு விபூதியென்பது.

7. *பிறதேவர் நாராயணனுக்கு விபூதியாயுள்ளார் என்றதற்குப் பிரமாணம் யாது?* 8

நாராயணோபனிஷத்தில்: "ப்ரம்ஹச்ச நாராயண: சிவச்ச நாராயண: சக்ரிச்ச நாராயண:" பிரமனும் நாராயணன், சிவனும் நாராயணன், இந்திரனும் நாராயணன் என்றும், தைத்திரியோபனிஷத்தில்: "சப்ரம்ஹ சசிவச்வேந்த்ர:" பிரமனும் அந்த நாராயணன் சிவனும் அந்த நாராயணன் இந்திரனும் அந்த நாராயணன் என்றும், வருமவைகளால், பிறதேவர் நாராயணனுக்கு விபூதியாயுள்ளார் எனச்சொல்லப்பட்டது.

## பிறதேவர் நாராயணனுக்கு அம்சபூதர்.

8. *பிறதேவர் நாராயணனுக்கு அம்சமாயுள்ளார் என்றதற்குப் பிரமாணம் யாது?* 8

மகாநாராயண உபனிஷத்தில்: "சதுர்முக பஞ்சமுக ஷண்முக சப்தமுக அஷ்டமுகாதி சங்க்யாக்ரமேண

சஹற்ராவதி முகாந்தைர் நாராயணும்சை ரஜோகுண ப்ரதானோர் ஏகைக ச்ருஷ்டிகர்த்ரு, பிரதிஷ்டிதானி விஷ்ணு மகேச்வராக்ஞைர் நாராயணும் சைச் சத்வ தமோகுண ப்ரதானோர் ஏகைகஸ்திதி சம்ஹாரகர்த்ரு பிரதிஷ்டிதானி'' நான்முகன், ஐம்முகன், அறுமுகன், ஏழுமுகன், எண் முகன் முதல் ஆயிரம் முகன் வரையுமுள்ள 'பிரமர்கள்' நாராயணனுடைய அம்சமாயுள்ளவர்கள். ரஜோகுணத் தைப் பிரதானமாக உடையவர்கள் ஒவ்வொருவரும் ச்ருஷ்டி கர்த்தாக்கள். விஷ்ணு என்னும் பெயரையுடை யவர் நாராயணனுடைய அம்சமானவர். சத்வகுணத்தைப் பிரதானமாக உடையவர் ரக்ஷகத்துக்குக் கர்த்தாவானவர் 'மகேச்வரன்' என்னும் பெயரையுடையவர் நாராயண னுக்கு அம்சமாயுள்ளவர். தமோகுணப் பிரதானமாக உடையவர் சம்ஹாரத்துக்கு கர்த்தாவானவர் என்று, கேட் கப்படுதலால், பிறதேவர் நாராயணனுக்கு அம்சமும் நாரா யணன் அம்சியும், மூவர்க்கும் முன்னேனும் ஆதல், பெறப் பட்டது.

### பிறர், சத்வகுணமுடைய நாராயணனை தமோகுணத்தவ னென்பதை மறுத்தல்.

9\. *நாராயணன் சத்வகுணமுடையவன் எனவும் பிரமன் ராஜச குணமுடையவன் எனவும், ருத்திரன் தாமஸ குணமுடையவன் எனவும் சுருதி சொல்லியிருக்க, சிலர் நாராயணன் கருநிறமுடையவனுதலால், தாமசகுண முடையவனென்று சொல்வதற்கு சமாதானம் என்னே?* 9

என்நூல் வசனமும் வேதாந்த வசனங்களுடன் மாறு பட்டவழி பயனற்றதாகும். கருத்ததெல்லாம் தாமசம்

வெளுத்ததெல்லாம் சாத்விகம் ஆகும் என்னில், உலகத்தில் கருத்திருப்போரெல்லாம் தாமசகுணமுடையாரும் வெளுத்திருப்போரெல்லாம் சாத்விககுணமுடையோரும் ஆவரென்று சொல்லவேண்டி வரும். இது பயனில் சொல்லேயாம், வெளுத்திருக்கும் வெள்ளைப்பூண்டு, வெண்காயம், முள்ளங்கி இவைகள் சாத்விகமாகுமா? கருத்திருக்கும் கத்தூரி, நாவல்பழம், இவைகள் தாமசமாகுமா? சாத்வீகமேயன்றோ? சிவபிரான் பவள நிறமுடையவராதலால் ராஜசகுணமுடையவராதல் வேண்டும். பார்வதிதேவியார் கரிய நிறமுடையவராதலால் தாமஸகுணமுடையவராதல் வேண்டும். ஆகவே, நிறத்தைக்கொண்டு குணத்தைக் கூறும் சொற்கள் பயன் பெருவாம். நாராயணன் யுகங்கள் நான்கிற்கும். வெண்மை, செம்மை, பச்சை, நீலம் ஆகிய நிறங்கள் கொண்ட திருமேனி யுடையராயிருப்பாரென நூல்கள் கூறும். பரமபதநாதன் நீலமேகம் போன்றிருப்பது சம்சார தாபத்ரய தப்தனுனவன் தனது தாபமெல்லாம் மாறிச் சாந்தியடையுமாறு சேவை சாதிப்பதற்கேயாம். ராமகிருஷ்ணாதி அவதாரங்கள் கறுத்திருப்பதும் சாந்தியை பிறப்பிக்கவேயாம். கறுத்திருக்கும் மேகத்தின் நீரும் கடலின் ஜலமும் சோதித்துப் பார்க்குமிடத்து வெண்மையாகியே, விளங்குதல்போல நாராயணனது மேகநிறமும் கடல் நிறமும் சாத்விகத்தையே காட்டுவதாகும். "கறுமையின் மிக்கழகு" எனப்படுதலால், புருஷரது கண்களையும் மனதையும் கவர்வதாம் அழகு வெள்ளஞ் சுழிக்கும் திருமேனி யுடையனுன திருமால் கறுத்திருப்பது அமைவுடைத்தேயாகும், அழகிற் சிறந்தவரென்று சொல்லப்படும் மன்மதனும், அர்ச்சுனனும், கறுத்த நிறமுடையார் என்பது, உலகப்ரசித்தம்.

## நாராயணன் பிரளய, சிருஷ்டி மோக்ஷகாரணன்.

10. *நாராயணன் பிரளய, சிருஷ்டி, மோக்ஷகாரணன் என்றற்குச் சுருதிப் பிரமாணம் யாது?* 10

தைத்திரியோபனிஷத்தில்: "யதோவா இமானி பூதானி ஜாயந்தே யேனஜாதானி ஜீவந்தியத் ப்ரயந்த்யபி சம்விசந்தி தத்விஜிஜ்ஞாச ச்வ தத்ப்ரம்ஹ" என்பதனுல். 'எந்த வஸ்துவிலிருந்து பூதங்கள் உண்டாகின்றனவோ, மோக்ஷகாலத்தில் எந்த வஸ்துவை உத்தேசித்து ஆத்மாக்கள் அடைகின்றனவோ, பிரளய காலத்தில் எந்த வஸ்துவில் எல்லா பூதங்களும் லயிக்கின்றனவோ அதுவே, ஜெகத்காரணமான பரப்ரம்ஹ மென்று தெரிந்து கொள்' என்று, ஆரம்பித்துச் சொல்லிவந்து, அந்த பரப்ரம்ஹம்: "ஸஹச்ர சீர்ஷம்தேவம் விச்வாக்ஷம் விச்வ சம்புவம் விச்வம் நாராயணம் ஹரிம் விச்வமே வேதம் புருஷஸ் தத்விச்வ முபஜீவதிபதிம் விச்வ ஸ்யாத்மேச்வரம் சாச்வதம் சிவம் அச்யுதம் நாராயணம் மஹாஜ்ஞேயம் விச்வாத்மானம் பராயணம் நாராயண பரப்ரம்ஹ தத்வம் நாராயண:பரம் நாராயண பரோஜ்யோதிராத்மா நாராயண: பர:யச்சகிஞ்சத் ஜக்த்யச்மின் த்ருச்யதே ச்ரூயதே பிவா அந்தர்பஹிச்ச தத்சர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித:" என்று, கூறுவதால், ப்ரளய, ச்ருஷ்டி மோக்ஷ காரணன் நாராயணனே யாவன்.

## நாராயணன் சர்வாந்தர்யாமி.

11. *நாராயணன் சர்வாந்தர்யாமி என்றற்குப் ப்ரமாணம் யாது?* 11

அந்தர்யாமியை நிர்ணயிக்கவந்த அந்தர்யாமி ப்ராம்ஹணத்தில் "சர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்

யோதேவ ஏகோ நாராயண:'' என்றும், நாராயண உபனிஷத்தில்: ''சர்வச்யாமகோ நாராயண:'' என்றும், சுபாலோபனிஷத்தில்: "அந்தர் பஹிச்ச நாராயண:'' என்றும், பகவத்கீதையில், "அஹமாத்மா குடாகேச சர்வ பூதாசயஸ்தித:'' என்றும், சொல்லப்பட்டிருப்பதால், நாராயணனே சர்வாந்தர்யாமி யாவன்.

## நாராயணன் த்யேயன்.

12. *நாராயணன் த்யேயன் என்றற்குப் பிரமாணம் யாது?* 12

சாந்தோக்ய உபனிஷத்தில், ''த்யேயஸ்ஸதா சவித்ரு மண்டல மத்யவர்த்தி நாராயணஸ் ஸரஸிஜாசன ஸந்நிவிஷ்ட: கேயூரவான் மகரகுண்டலவான் கிரீடஹாரி ஹிரண்யவபு: த்ருதசங்க சக்ர தஸ்யயதா கப்யாசம் புண்டரீக மேவமக்ஷிணீ'' என்று, காயத்ரிப் பொருளாய், சூர்யமண்டல அந்தர் வர்த்தியாய் த்யேயனுயுள்ளவன் நாராயணன் என்றுரைத்து: அவனது லக்ஷணமும் சொல்லப்பட்டிருப்பதால், நாராயணனே த்யேயனுவான்.

## நாராயணன் த்யாதாவிலன்.

13. *நாராயணனே த்யேயனுயின் "நாராயண பரோத்யாதா'' என்று, நாராயணனே த்யாதா (த்யானிப்பவன்) ஆக சொல்லப்படுவது என்?* 13

அதர்வ சிகையில், த்யேய வஸ்துயார்? த்யாதாயார்? என்று, முனிவர் பைப்பலாதரைக் கேட்க. அவர் "காரணந்து த்யேய:'' 'ஜெகத்காரணவஸ்துவே த்யேயம்' என்றும், "த்யாதாருத்ர:" 'உருத்திரன் த்யாதா' என்றும், விடையளித்தனர். வேதாந்த வசனப்படி த்யாதா உருத்திரனேயாம். இது த்யாதாவைச் சொல்லுமிடத்து

உள்ளது. "நாராயண பரோத்யாதா" என்று, நாராயண னுடைய வைபவத்தைச் சொல்லுமிடத்தே யிருத்தலால், அது அவனது சிருஷ்டி சிந்தனையின்பாற் பட்டதேயாம்- இவ்வாறு, "ஏகோஹவை நாராயண ஆஸீத் நப்ரம்ஹ நேசானஃ சமுநிர்பூத்வா ஸமசிந்தயத்தத ஏதத் த்யானுஜ்ஜா யந்தே விச்வோஹிரண்யகர்போக்நி யமம் வருண ருத்ரேந்த்ரா." என, ஆங்கீரஸ உபனிஷத்தில், சொல்லப் பட்டது காண்க.

### நாராயணனுக்குள் இருப்பது குணங்கள்.

**14.** *தைத்திரீ யோபனிஷத்தில்: "தஸ்மின்ய தந்த: தது பாஸிதவ்யம்" என்று, 'உபாசகரது சரீர மத்தியிலுள்ள ஹ்ருதய கமலத்திலிருக்கும் நாராயணனுக்கு உள்ளி ருப்பது உபாஸ்யம்' என்று, சொல்லப்பட்டிருக்கிறதே, அது, இன்னதென்று சொல்லாவிடினும் அதைப் பிற தேவதைஎன்று சொல்லக்கூடுமன்றோ?* **14**

சாந்தோக்ய உபனிஷத்தில், தகர வித்யையில்ஃ "ப்ரம்ஹ புரோதஹரம் புண்டரீகம் வேசமத கரோஸ்மின் அந்தராகாசம் கிம்தத்ர வித்ய தேயதன்வேஷ்டவ்யம்" என்று, நாராயணனுக்கு உள்ளிருப்பது எது என்று, ஆக்ஷே பித்துக்கொண்டு "ப்ரம்ஹ புரமஸ்மின் காமாஸ் ஸமாஹித ஏஷ ஆத்மாப ஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோகோ விஜகத்ஸோபி பாஸஸ் ஸத்யகாமஸ்ஸத்ய சங்கல்பஃ" என்று, தகராசாசத்தில், நாராயணனிடத்தே உபாஸ்ய மாகச் சொல்லப்பட்டது. அபஹத பாப்மத்வாதி குணங் களென்று, சொல்லப்பட்டது. ஆகவே, தைத்திரியோப னிஷத்தில்: 'நாராயணனுக்கு உள்ளிருப்பது' என்று, சொல்லியிருப்பதை, சாந்தோக்ய உபனிஷத்தில் குணங்க

ளென்று சொல்லியிருப்பதால், நாராயணனுக்கு உள்ளிருப்பது ‘ பிற தேவதை ’ என்பது, அவைதிகமேயாம்.

## நாராயணனே பிரணவப்பொருள்.

15. *பிரணவப்பொருள் யார் ?* 15

உபனிஷத்தில் விஷ்ணு காயத்ரியில் சொல்லப்படும் வ்யாபக நாமங்கள் மூன்றையும் குறிக்கும் ஷடக்ஷரி, அஷ்டாக்ஷரி, த்வாதசாக்ஷரி மந்த்ரங்கள் மூன்றனுள் பிரணவம் முதலக்ஷரமாய் இருப்பதாலும், “ ஓங்காரோ பகவான் விஷ்ணு:” என்று, பிரமாண முண்மையாலும், பிரணவத்தில் முதற்பதமான ‘அகாரம்’ நாராயண பரமாதலாலும் பிரணவாகார விமான முடையவன் நாராயணனாதலாலும் வேதமோதுவோர் முதற்கண்ணே ‘ஹரி’ சப்தத்தை உச்சரித்துப் பின்னர், பிரணவத்தை உச்சரிப்பதாலும் “ அஹம்...........ஓங்காரம் ” என்னும் பகவத்கீதை வசனத்தாலும், பிரணவப்பொருள் நாராயணனேயாம்.

## நாராயணனே அகாரப் பொருள்.

16. *அகாரப் பொருள் யார் ?* 16

“ அகாரோ விஷ்ணு வாசக:” ‘ அகாரம் விஷ்ணுவுக்கு வாசகம் ’ என்று, சுருதியும், “ அக்ஷராணாம் அகாரோஸ்மி ” “ எழுத்துக்களில் அகாரமாகிறேன் நான் ” என்று, பகவத்கீதையில் பகவானும், “ அஇதிபகவதோ நாராயணச்ய ப்ரதமாபிதானம் ” ‘ அகாரம் நாராயணனுக்கு முதற் பெயர் ’ என்றும், மகாபாஷ்யத்தில் பதஞ்சலி பகவானும் கூறியிருப்பதால், அகாரப் பொருள் நாராயணனேயாம்.

## விஷ்ணு சிருஷ்டிக்கப்படுகிருனென்பது அவதார விஷயம்.

17. *"ப்ரம்ஹா விஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே சர்வே சம்ப்ரசூயந்தே" 'பிரமன், விஷ்ணு, உருத்திரன், இந்திரன் யாவரும் ச்ருஷ்டிக்கப்படுகின்றனர்.' என்று சுருதியில். 'விஷ்ணுவும் உண்டாக்கப்படுவர்' என்று, கூறுவதால் அவர்க்கு ஏனைத் தேவரினும் சிறப்பு எங்ஙனம் கூடும்?* 17

இந்த வசனம் விஷ்ணுவுக்கும் ஏனைத்தேவர்க்கும் தாரதம்யம் கூறவந்ததன்று. துரீயமூர்த்திக்கும் பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும், மும்மூர்த்திகள், இந்திரன் ஆகிய இவர்களுக்கும் தாரதம்யம் கூறவந்ததேயாம். மும்மூர்த்திகளில் சேர்த்தெண்ணிய விஷ்ணு அவதாரமூர்த்தி யெனவும், துரீயமூர்த்தி நாராயணன் எனவும், உபனிஷதங் கூறிய வரலாற்றை கீழ், 'பிறதேவர் நாராயணனுக்கு அம்சமாயுள்ளார்' என்று, கூறியவிடத்து எடுத்துக்காட்டினும். அவதார மூர்த்திக்கும் துரீய மூர்த்திக்கும் தாரதம்யம் உரைக்கு மிடத்து இடையே ஒரு ஹேதுவை உத்தேசித்துத் தோன்றுவதும், மறைவதுமான அவதாரமும் காரணவஸ்துவாகத் தடையில்லை. அந்த விஷ்ணு அவதாரம் "மத்யேவிரிஞ்சி கிரீசப்ரதமாவதாரம்" என்னும், வசனத்தின்படி உண்டான தேவவர்க்க அவதாரமாம். விஷ்ணு புராணம்:—1-வது அம்சம் 22-வது அத்யாயத்திலும், இவ்வுண்மை விளங்கும்.

## நாராயணனுக்குமேல் ஒன்று உண்டென்பதை மறுத்தல்.

18. *ச்வேதாச்வதர உபனிஷத்தில்: நாராயணனை ப்ரஸ்தாபித்து: "ததோய துத்தரதரம்" என்று, சொல்லி*

*யிருப்பதால், அச்சுருதிக்கு "தத:" அந்த நாராயணனைக் காட்டினும், "யதுத்தரதரம்" மேற்பட்டதொரு பொருள் உண்டென்று, சிலர் பொருள் சொல்லுகின்றனரே அதற்குச் சமாதானம் என்ன?* 18

ச்வேதாச்வதர உபனிஷத்தில் ஆரம்பத்தில்; "வேதாஹமேதம் புருஷம் மஹத்தாம்" என்று, நாராயணனை மகா புருஷனென்று சொல்லி "தமேவவிதித்வ அதம்ருத்யமேதி நான்ய: பந்த்தா வித்யத அயனாய" என்பதனால், 'அவனை அறிவதே மோக்ஷஹேது வேறொரு உபாயமில்லை.' என்று, ப்ரதிஜ்ஞை பண்ணி பிறகு அதை "யஸ்மாத்பரம் நாபரமஸ்தி கிஞ்சித் யஸ்மான ஞணீயோ நஜ்யாயோஸ்தி கச்சித் வ்ருக்ஷ இவஸ்தப்தோதி விதிஷ்டதமேக: தேனேதம் பூர்ணம் புருஷேண சர்வம்" என்பதனால், யாவனொருவனிற் காட்டில், வேறாய் பரமாயிருப்பதொரு வஸ்துவில்லை. மஹத்தரமா யிருப்பதொரு வஸ்துவில்லை. அலையெறியாத கடல்போன்றவனான, பரமபத நிலையனாலே இந்த உலகம் வ்யாப்தமாயிருக்கும்" என்று, சொல்லப் பட்டது. இப்படி சொல்லி யிருப்பதற்கு மாறாக 'தத:' என்பதற்கு, 'அதனிற் காட்டில்' என்று பொருள் படுத்துவது பொருந்தாது. அப்பொருள், முதலில் செய்த ப்ரதிஜ்ஞைக்கு மாறுபட்டதாகும்; ஆகவே 'தத:' என்பதற்கு அதனாலே (சொல்லி வந்த அந்த ஹேதுக்களாலே) என்று, பொருள் கூறுவதே பொருத்தமுடையதாகும். முன் சொன்னதற்கு மாறுபடப் பின் சொல்வது நியாயமறியாதார் கூற்றன்றி, வேதபுருஷ சம்மதமாகாது. ஆகையால், வேத உத்தரபாகமான உபனிஷதங்களால் பிரதிபாதிக்கப்படுமவன் நாராயணனேயாம்.

1-வது *ஈஸ்வர வியல்* 18.

ஈச்வர வியல் முற்றுப்பெற்றது.

# 2. விசிஷ்டாத்வைத வியல்.

## விசிஷ்டாத்வைதம்.

1. *வைஷ்ணவ மதம் வேறு பெயரால் வழங்கப்படுவதுண்டோ?* 19

'விசிஷ்டாத்வைத மதம்' என்றும், வழங்கப்படுவதுண்டு.

2. *விசிஷ்டாத்வைதம் என்பதற்குப் பொருள் என்ன?* 20

விசிஷ்டாத்வைதம் என்பது: விசிஷ்டம்—அத்வைதம் என்று, பிரிக்கப்படும். 'விசிஷ்டம்' என்பதற்குப் பொருள் விசேஷம் என்பதாம். விசேஷமாவது, பரப்ரம்ஹத்தினுடைய மங்களகரமான ரூபமும் கல்யாண குணங்களும், சேதனு சேதன மயமான லீலாவிபூதி நித்திய விபூதிகளும், ஆத்மாக்களின் ரக்ஷணத்தின் பொருட்டுச் செய்யும் காரியங்களுமாகும். 'அத்வைதம்' என்பது. 'ந—த்வைதம்' என்று பிரிக்கப்படும். இதற்குப் பொருள், தனக்கு இரண்டாவது இல்லாதது என்பதாம். எனவே, ரூப, குண, விபூதி சேஷ்டிதங்களையுடைய பரப்ரம்ஹம் ஒன்றேயாம். தன்னைப்போல் வேறு பரப்ரம்ஹம் இல்லை என்பதே 'விசிஷ்டாத்வைதம்' என்பதன பொருளாகும். இவ்வாறன்றி, 'விசிஷ்டம்' என்பதற்குக் கூடியிருப்பது எனப்பொருள் கொண்டு "யஸ்யாத்மா சரீரம் யஸ்யப்ரிதிவீ சரீரம்" என்னும் ச்ருதியின்படி, தனக்குச் சரீரமாகிய சேதனு சேதனங்

களோடு, கூடியிருக்கிற பரப்ரம்ஹம். ‘அத்வைதம்’ தன்னைப்போல வேறு பரப்ரம்ஹம் இல்லாதது என்றும், பொருளாம். இதுவுமன்றி, விசிஷ்டனது அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என்று, ஆறும் வேற்றுமைத்தொகை யாய், சேதன சேதனங்களைச் சரீரமாகவுடைய பரப்ரம்ஹத் தினது இரண்டாவது இல்லாமை என்னவுமாம்.

3. *பரப்ரம்ஹத்துக்கு அவயவமுடைய அசேதனங்கள் சரீர மாதல் கூடும். சேதனமான ஆத்மா, நிரவயவமாதலால் சரீரமாதல் அமைவதெங்ஙனம்?* **21**

ஈண்டு அவயவமுடையது சரீரம் என்பதன்று. ஆத்மாவுக்கு, தார்யமாய் (தரிக்கப்படுவதாய்,) ந்யாம்ய மாய், (ஏவப்படுவதாய்) சேஷமாய், (இஷ்டப்படி உபயோ கப்படுவதாய்) உள்ள, இந்தச் சரீரம்போல பரப்ரம்ஹத் துக்கு ஆத்மா, தார்யமாய், நியாம்யமாய், சேஷமாய் இருப்பது என்பதாம். இந்த விசிஷ்டாத்வைத சப்தம் பரப்ரம்ஹத்தினுடைய லக்ஷணங்களைச் சொல்லுவதாகை யாலே அந்த பரப்ரம்ஹத்தைச் சொல்லும் மதத்துக்கு, ‘விசிஷ்டாத்வைத மதம்’ என்று, பெயர் வழங்கும்.

## விசிஷ்டாத்வைதம் வேதத்திலில்லை யென்பதை மறுத்தல்

4. *விசிஷ்டாத்வைதம், என்று, வேதத்திலில்லையென்று, சிலர் சொல்லுகின்றனரே அதற்குச் சமாதானம் என்னை?* 22

வேதத்திலும், அதைச்சார்ந்த நூல்களிலும், சொல்லப் படுவனயாவும் பரப்ரம்ஹத்தின், விசேஷம் (விசிஷ்டம்) என்று, அறியாக் கல்வியுடையாரே அங்ஙனம் கூறுவர்.

'நிர்விசேஷம்' என்று, வேதத்திலுண்டோ? இன்றுயின் பரப்ரம்ஹம் நிர்விசேஷம் என்று, சொல்வார் சொல் என்னுகும். அவைதிகமே யன்றே? உண்டாயின், விசேஷம் என்னும், பொருளுடையதான 'விசிஷ்ட' சப்தம் வேதத்திலில்லை யென்பது பயன்பெறுமோ? ஆகவே, ப்ரம்ஹ சூத்ரம், பகவத்கீதை வேதத்திலில்லை. அவை வேத சம்மதமாகா என்பார் சொல் யாதுபயன் பெறுமோ அப்பயனே 'விசிஷ்டம்' என்னும் சொல் வேதத்தில் இல்லை யென்பார் சொல்லும் பெறுமென்க.

## அத்வைதம் என்பது தான்மாத்திரம் இருப்ப தென்பது கூடாது.

5. *'அத்வைதம்' என்பதற்குத் தானேயன்றி, ஆத்மாக்களும், ப்ரக்ருதியும் ஆகிய எவரும் எந்தப் பொருளுமில்லாமல் தன்னந்தனியாய்த் தான் மாத்திரமிருப்பது பரப்ரம்ஹம் என்று பொருளாகாதோ?* **23**

சர்வ ஜகத்துக்கும் காரணமாயிருப்பதும், சர்வேச்வரனுயிருப்பதும், 'பரப்ரம்ஹம்' என்பது வேதவைதிக சம்மதம். ஆகையாலன்றே ப்ரம்ஹசூத்ரத்தில் "அதாதோப்ரம்ஹஜிஜ்ஞாசா" என்று முதல் சூத்திரத்தில், ப்ரம்ஹஜ்ஞானத்தைச் சொல்லி "ஜன்மாத்யஸ்ய யதः" என்று இரண்டாஞ் சூத்திரத்தில் ஜகஜ்ஜன்மாதி காரணமாயிருப்பது பரப்ரம்ஹ மென்று, சொல்லப்பட்டது. வேறே எந்தப்பொருளும் அதாவது சேதனு சேதனங்களில்லாவிட்டால் பரப்ரம்ஹத்துக்கு ஜகத் காரணத்வம் எப்படி சித்திக்கும்? ஏவுதற்கு சேதனு சேதனங்களில்லாவிட்டால், பரப்ரம்ஹத்துக்கு ஈச்வரத்வம் எப்படி சித்திக்

கும்? உலகத்தில் படை, குடி, முதலியவை யில்லா விட்டால், எவருக்குந் தலைவன் சக்ரவர்த்தி யென்பது எப்படி சித்திக்கும்? தன் கட்டளைக்குக் கீழ்ப்படிவோர் இல்லாவிட்டால், சக்ரவர்த்தி அதிகாரமுடையவன் என்பது, எப்படி சித்திக்கும்? ஒரு பிராணியும் ஒரு பொருளுமில்லாமல் சக்ரவர்த்தி மாத்திரம் தனித்திருப்பது யாது செய்வதற்காகவோ? ஆகவே, 'அத்வைதம்' என்பது, சர்வவிலக்ஷணமான தன்னைப்போல வேறொருவரு மில்லாமலிருப்பது, பரப்ரம்ஹம் என்பதுவே உண்மைப் பொருளாகும். இந்த மாமரம் அத்விதீயமானது (தனக்கு இரண்டாவது இல்லாதது) என்று, சொல்லுமிடத்து, அந்த மாமரத்தின் ஜாதியதாய் அதைப் போலே சிறந்த தாய்ப் பலம் கொடுப்பதான வேறொருமாமரம் இல்லை யென்று பொருளாகுமே யன்றி வேறு ஜாதி மரமும், செடி, கொடி, புல், பூண்டுகளும் இல்லை யென்று சொல்லப் படாது. இந்தச் சிங்கம் அத்விதீயமானது என்று, கூறு மிடத்து அதன் ஜாதியதாய் அதைப்போன்ற மேன்மை யுடைய வேறொரு சிங்கம் இல்லை யென்று, பொருள்படுமே யன்றி, புலி, கரடி, முதலிய வேறு மிருகங்கள் இல்லை யென்று, பொருளாகமாட்டாது. இவன், அத்விதீயன் எனப்படுங்கால் அவன் ஜாதியனான புருஷச்ரேஷ்டன் வேறொருவன் இல்லையென்று பொருளாகுமேயன்றி, மனிதர் ஒருவருமில்லை யென்று சொல்லிவிடுதல் கூடாது. இவ்வகையே பரப்ரம்ஹம் 'அத்விதீயம்' (தனக்கு இரண் டாவது இல்லாதது) எனச் சொல்வதற்கு, ஈச்வரலக்ஷணங் கள் அமைந்த வேறொரு பரப்ரம்ஹம் இல்லையென்று, பொருள் படுத்துதல் தக்கதேயன்றி, ஆத்மாக்களும் ப்ரக் ருதியும் இல்லையென்று பொருள்படுதல் என்று மில்லை.

## பரப்ரம்ஹத்துக்கு ரூப, குண, விபூதி சேஷ்டிதங்கள் நித்யம்.

6. *பரப்ரம்ஹத்தினுடைய, ரூப, குண விபூதி சேஷ்டிதங்கள் நித்யமாகவே உள்ளனவோ, இடையில் கற்பிக்கப் பட்டனவோ?* 24

பரப்ரம்ஹத்தினுடைய, ரூப,குண விபூதி சேஷ்டிதங்கள் நித்யமாகவே உண்டு என்று, சாஸ்த்ரங்கள் சொல்வதால், அவை நித்யமேயாம்.

## ரூபம்.

7. *ப்ரப்ரம்ஹத்துக்கு ரூபம் உண்டு என்பதற்குப் பிரமாணம் யாது?* 25

"யத்தேரூபம் கல்யாண தமம் தத்தே பச்யாமி" என்னும் சுருதியின்படியே பரப்ரம்ஹத்துக்கு ரூபம் உண்டு "ஸதாபச்யந்தி சூரய:" என்னும் சுருதியினுலே நித்ய விபூதியில் நித்ய சூரிகளால் என்றும் தரிசனம் பண்ணப் படுகிருன் என்றும்; "யேன யேன தாதாகச்சதி தேன தேன ஸஹகச்சதி," என்னும் சுருதியினுலே, பின்பற்றப் படுகிருன் எனவும், சொல்லப்படுகிறது. நித்ய விபூதியில் நித்யர்களாலே என்றும், சேவிக்கப்படுகிறது நித்யமேயா யிருப்பதாகையாலும், ரூபமில்லாமல் தரிசனுதிகள் கூடாமையாலும் பரப்ரம்ஹத்துக்கு நித்யமான ரூபம் உண்டு என்பது வேத சம்மதமேயாம்.

8. *ஆயின் பரப்ரம்ஹமம் அரூபி என்று சொல்லப்படுவது யாதுக்கு?* 26

'ரூபி' என்ருல், அரூபி என்பதற்கு விரோதியாது. அரூபியென்ருல் ரூபியென்பதற்கு விரோதியாது. அரூபி

யென்பதற்கு ஸ்வரூபத்தாலே எங்கும் வியாபித்திருப்பது விஷயமாகும். 'ரூபி' என்பதற்கு ஆத்மாக்களின் ரக்ஷணத்தின் பொருட்டும், அவர்கள் அநுபவ கைங்கர்யங்களுக்காகவும், உருவமுடையவனு யிருப்பது விஷயமாகும், ஆகவே 'ரூபி' 'அரூபி' என்பவை ஒன்றுக்கொன்று விரோதமாவது இல்லை.

## குணம்.

9. *பரப்ரம்ஹத்துக்கு குணம் நித்யமாக உண்டென்பதற்குப் பிரமாணம் யாது?* 27

தைத்திரீய உபனிஷத்தில்: "சத்யம் ஜ்ஞானமனந்தம் ப்ரம்ஹ" "ஆனந்தோ ப்ரம்ஹ" என்றும், ச்வேதாச்வதர உபனிஷத்தில்: "பதிர்குணேச பராச்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ச்வபாவகீ ஜ்ஞான பலக்ரியாச" என்றும், வருமவைகளால், சத்யம், ஜ்ஞானம் முதலிய பலவகையான குணங்களை ச்வாபாவிகமாக உடையது, பரப்ரம்ஹம் என்று, சொல்லப்படுவதால், பரப்ரம்ஹத்துக்குக் குணங்கள் நித்யமேயாம்.

## நிர்க்குண மென்பது ஹேயகுண மில்லாமை.

10. *ஆனல், பரப்ரம்ஹம் நிர்க்குணமாயிருப்பது என்று, சொல்லப்படுவது ஏனோ?* 28

சாந்தோக்ய உபநிஷத்தில்: ஏஷ ஆத்மாபஹத பாப்மா விஜ்ரோ விம்ருத்யுர் விசோகோ விஜக த்ஸோபி பாஸஸ் ஸத்யகாம ஸத்யஸங்கல்ப:" என்று, அஷ்ட குணங்களைச் சொல்லும் கிரமத்தில், அபஹதபாப்மம்,

முதலான ஹேயகுண ரஹிதமும். ஸத்ய, காமம் முதலிய மங்களகுண ஸஹிதமும், சொல்லப்படுவதால், இந்த வேதாந்த வாக்கியத்தைத் தழுவியே "நிர்க்குணம்" என்பதற்கு, ஹேயகுண ரஹிதமும், "குணேச" என்பதற்கு, மங்களகுண ஸஹிதமும், சொல்வதில் ஒரு விரோதமும் இல்லை.

**குணம் உண்டு என்பதை இல்லையென்பது பாதியாது.**

11. *ஆனாலும், குணம் உண்டு யென்பதை இல்லையென்பது பாதியாதோ?* 29

உண்டு யென்பதை யில்லை யென்பதை பாதிப்பதும், இல்லையென்பதை உண்டுயென்பதை பாதிப்பதும், இயல்பேயாதலால், இல்லையென்பதை உண்டுயென்பதே பாதிக்கக் கூடாதோ? அல்லது, உண்டுயென்பதை இல்லை யென்பதே பாதிப்பதாக வைத்துக்கொள்வோமாயின், பரப்ரம்ஹத்துக்கு குணம் இல்லையென்று, சொல்லுமவர்கள்; பரப்ரம்ஹம் உண்டுயென்பதை மாத்திரம் ஒப்புக்கொள்ளுகிறார்களல்லவா? அப்படி, அவர்கள் உண்டுயென்பதை நாஸ்திக மதவாதியர் இல்லையென்று மறுக்கின்றார்களாதலால், அப்போது பரப்ரம்ஹம் இல்லையாக வேண்டி வருமே. அதை, உண்டுயென்பதை இல்லையென்பது பாதிக்குமென்று சொல்லுமவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்களா? ஆகவே, குணம் இல்லையென்பது ஹேயகுணமில்லாமையைக் குறிப்பதென்றும், குணம் உண்டுயென்பதை மங்கள குணம் உண்மையைக் குறிப்பதென்றும், சொல்வதே வேதசம்மதமும், நியாயமுமாகும்.

## சேஷ்டிதம்.

12. *பரப்ரம்ஹத்துக்குச் செய்கை நித்யம் என்பதற்கு ப்ரமாணம் யாது?* 30

"ஸ்வாபாவகீஜ்ஞான பலக்ரியாச" என்னும் சுருதியின்படி பரப்ரம்ஹத்துக்கு ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய. காரியங்கள் இயற்கையேயாம்.

## ஆத்மா நித்யம்.

13. *சேதனமான ஆத்மா நித்யம் என்பதற்குப் பிரமாணம் யாது?* 31

கடவல்லி உபனிஷத்தில்: "ஜாயதேம்ரியதேவா விபச்சித்" 'ஞான ஸ்வரூபனுய், ஞான குணகனுன ஆத்மா, பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை' என்று, சொல்லப்பட்டிருப்பதால், ஆத்மா நித்யமேயாம்.

## ப்ரக்ருதி நித்யம்.

14. *அசேதனமான ப்ரக்ருதி, நித்யம் என்பதற்கு ப்ரமாணம் யாது?* 32

தைத்திரீய உபனிஷத்தில்: "அஜாம். ஏகாம்" என்றும், மந்த்ரோபனிஷத்தில்: "விசால ஜனனீம் அஜ்ஞானம் அஷ்டரூபாம் அஜாம்த்ருவாம்" 'விசாரத்தை உண்டாக்குவதாய், ஞான சூன்யமாய், அஷ்டரூபமாய், உற்பத்தியில்லாததாய் நித்யமாயிருக்கும்' என்றும், சொல்லப்பட்டிருப்பதால், ப்ரக்ருதி நித்யமேயாம்.

## ஆத்மாவுக்குப் பிறப்பு இறப்பு சரீர சம்பந்த வியோகம்.

15. *ஆத்மாவும் ப்ரக்ருதியும் நித்யமாயின் ஆத்மாவுக்குப் பிறப்பு, இறப்பு உண்டாவதும், ப்ரக்ருதி பதார்த்தங்களுக்கு உற்பத்தி, நாசங்கள் உண்டாவதும் கூடுமோ?* 33

ஆத்மாவுக்குப் பிறப்பு என்பது தேக சம்பந்தம். இறப்பு என்பது தேக வியோகம். இவ்வளவேயன்றி, ஆத்மா உண்டாவதும், நாசமாவதும் அன்று. ஆத்ம நித்யத்வத்தை ஸ்வரூப நித்யம் என்று, சொல்லப்படும்.

16. *ப்ரக்ருதி பதார்த்தங்கள் ப்ரவாஹத்தால் நித்யம் ஆவது எவ்வாறு?* 34

ப்ரக்ருதி பதார்த்தங்களில், ஒன்று அழியினும் அதுவே மற்றொரு பொருளாகிறது. ஒரு பொருள் அழிந்தாலும் அடுத்த காலத்தில் மற்றொரு பொருள் அதுபோலவே உண்டாகிறது, இந்த ப்ரக்ருதி நித்யத்வத்தை ப்ரவாக நித்யம் என்று, சொல்லப்படும். அதாவது, ஆற்றில் வெள்ளம் வருமாயின் நாம் பார்த்துக்கொண்டிருக்கும்போதே முதல் க்ஷணத்தில் தோன்றும் நீர் போய், அடுத்த க்ஷணத்தில் அதுபோன்ற வேறே நீர் அங்கு வந்து தோன்றினும், நீர்மயமான வெள்ளம் ஒன்றாகவே தோன்றுவது போலவே ப்ரக்ருதி பதார்த்தங்களில், முன்னே தோன்றிய ஒன்றுபோய் அதுபோலவே மற்றொன்று அடுத்தடுத்து உண்டாய்த் தோன்றுவதாம். ஒரு பொருளழிந்து மற்றொரு பொருளாவது: எப்போதும் பரிணமிக்கும் தன்மையுடைய ப்ரக்ருதியின் இயல்பேயாம். பொருள்கள் மாறுபடுவதேயன்றி, மூலமான ப்ரக்ருதி இல்லாமற் போவதில்லை.

17. *ப்ரக்ருதி, ஜீவ நித்யத்வத்தை சங்கராசாரியரும் ஒப்புக் கொண்டார். என்பதற்குப் பிரமாணம் யாது?* 35

"ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்யனுதீ உபாவபி விகாராம்ச குணம்சைவ வித்திப்ரக்ருதி சம்பவான்." இதற்கு பகவத் சங்கராசார்ய ஸ்வாமிகள் செய்த பாஷ்யத்தில், "இந்த மாயை, ஜீவன் என்னும் இவர்கள் முறையே ப்ரக்ருதி புருஷர்களாகவும், க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களாகவும், கூறியிருப்பதுமன்றி, அநாதிகளாகவும், நித்யங்களாகவும் இந்த அத்தியாயத்தில் சொல்லியிருக்கிறது. ஈச்வரனே அநாதியாகவும் நித்யனுகவும் அங்கீகரிக்க வேண்டிய நாம், அந்த ஈச்வரனது பராபர ப்ரக்ருதிகளாகிற மாயை, ஜீவன் இவர்களே நித்யங்களாகவும் அனுதியாகவும் ஒப்புக்கொள்ள வேண்டியதே. இவ்விரண்டு ப்ரக்ருதிகளாலே ஈச்வரனுக்கு ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலிய காரணத்வம் சொல்லப்படுகிறது. இந்த ப்ரக்ருதி புருஷர்களுக்கு அனுதி நித்யத்வம் சொல்லக்கூடாதென்ருல், ப்ரம்ஹுத்துக்கு ஈச்வரத்வமும், காரணத்வமும் சொல்லக்கூடாது. ப்ரக்ருதி புருஷர்களே யுடையவன் எவனே அவனே ஈச்வரனுவான். ஏவுதற்கு வஸ்து இல்லாவிடில் எஜமானத்வம் என்பதில்லே. ப்ரக்ருதி புருஷர்கள் அனுதியல்லர் உண்டானவர்களே என்னும் பக்ஷத்தில், அவர்கள் உண்டாவதற்குமுன் ஈச்வரத்வம் இல்லாதிருக்க வேண்டும். புருஷனுக்கு அனுதியான கர்மபந்த மென்பதுங்கூடாது. அன்றியும், ஈச்வரன் ஒரு ஜீவனே சுகியாகவும் மற்றெரு ஜீவனே துக்கியாகவும் பூர்வகர்மமாகிய காரணமின்றி படைக்கும் பக்ஷத்தில் அவ்வீச்வரனுக்குப் பக்ஷபாதமும் தயையின்மையும் சம்பவிக்கும்- ஆதலால், பந்தமே இல்லேயென்ருகும்.

பந்தமில்லாவிட்டால் மோக்ஷமேது? மோக்ஷங்களைச் சொல்லும் வேதங்களாலே ப்ரயோஜனம் யாது? ஆதலாலே ப்ரக்ருதி புருஷர்களை 'அனுதி' என்று, சொல்லியது சரியே என்று சொல்லியிருக்கின்றனர்.

## பரப்ரம்ஹத்துக்குப் பெயர் உண்டு.

18. *பரப்ரம்ஹத்துக்கு நாமாதிகளில்லை யென்று சொல்லுமது சரிதானே?* 36

பரப்ரம்ஹத்துக்கு நாமம் இல்லை யென்று சொல்லுமிடத்து 'பரப்ரம்ஹம்' என்னும் இந்த ஒரு நாமத்தைச் சொல்லவேண்டி யிருத்தலால், நாமமில்லை யென்பது உடன்பாடன்று. பரப்ரம்ஹம் பெயர்கள் உள்ளதேயாயினும், உலகத்துள்ள பொருள்களுக்கு ஒரு பெயராகவோ பல பெயராகவோ அளவுபட்டிருப்பதுபோல. பரப்ரஹ்மத்துக்கு ஸ்வரூப, ரூப, குண சேஷ்டிதங்களைப்பற்றி வரும் பெயர்கள் அளவுபடாமல் அநந்தமாய்ச் சென்று முடிவில்லாமல் இருத்தலை நோக்கி 'நாமமில்லாதவன்' என்று, உரைத்தபடியாம். "நதேரூபம் நசாகாரோ நாயுதானி நசாஸ்பதம்" என்று, பரப்ரம்ஹத்துக்கு உருவம் முதலியன இல்லை என்று, சொல்லப்படுவது, தனக்கென்று தன் ரக்ஷணத்தின் பொருட்டல்லாமல், "ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே" என்பதின்படி அவை அடியார்களின் பொருட்டு உள்ளனவாய் அவ்வடியாருக்கே உபயோகமாவன என்றபடியாம்.

19. *பரப்ரம்ஹத்துக்கு உருவம் முதலியன அடியார்கள் பொருட்டு ஏற்பட்டு இருக்குமாயின் அவை இடையே உண்டானதாகத் தோன்றுதோ?* 37

நித்தியமாயுள்ள நித்தியர்கள் அநுபவத்தின் பொருட்டு உள்ள பரப்ரம்ஹத்தினது உருவம் முதலியவைகள் நித்தியமேயாகத் தடையில்லையன்றோ ?

## சேதனு சேதனங்களிலும் பரப்ரம்ஹத்துக்குள்ள விசேஷம்.

20. *பரப்ரம்ஹமும் சேதனு சேதனங்களும் நித்யமேயாயின், சேதனு சேதனங்களைக் காட்டிலும் பரப்ரம்ஹத்துக்கு விசேடம் எதனுலே?* 35

சேதனு சேதனங்களிரண்டும் ஈச்வரனுக்குச் சரீரமாய் நியாம்யமாய், தார்யமாய், ரக்ஷ்யமாய், சேஷமாயிருக்க, பரப்ரம்ஹம் சரீரியாய், ஸ்வதந்த்ரமாய், நியந்தாவாய், தாரகமாய், ஸ்வாமியாய், ரக்ஷகமாய், சேஷியாயிருப்பது போலே விசேஷமாம். யஜமானனேடொத்த வயஸ்ஸையுடையவன் சேவகனுயினும், அதனுல் எஜமானனுக்குக் குறைவு வருவதில்லை. எஜமானன் அதிகாரமுடையவனு யிருப்பதும், சேவகன் அதிகாரத்துக்கு உட்பட்டவனு யிருப்பதுமே இருவருக்கு முள்ள தாரதம்யத்தைக் காட்டுவதாகும்.

## யாவும் பரப்ரம்ஹம் என்பதை ஸமர்த்நித்தல்.

21. *பரப்ரம்ஹத்தோடு சேதனு சேதனங்கள் நித்தியமாக உள்ளனவாயின், "ஸர்வம் கல்விதம் ப்ரம்ஹம ஏததாத்ம்யமிதம் ஸர்வம் புருஷயே வேத ஸர்வம்" வேதாந்தங்களில் யாவும் பரப்ரம்ஹமே என்று, சொல்லியிருப்பதென்ன ?* 39

ஈச்வரன் சேதநு சேதனங்களாகிய இரண்டையும் தன் சக்திக்கு உட்படுத்தித் தானே ப்ரதானமாயிருப்பதனுல், ஸர்வமும் பரப்ரம்ஹமே, யென்றதாம்.

மகாராஜா யிருக்குமிடத்தைப் பார்த்து 'இதில் யார் இருக்கிருர்' என்று, கேட்டால், மகாராஜா இருக்கிருர் என்று, பதில் சொல்வார். அந்த இடத்தில் மகாராஜா வின் மனைவிகளும், ஆண், பெண்களான வேலைக்காரர் பலரும் பல பொருள்களும், கூடியிருந்தாலும், அவர்களை யெல்லாம் தன் சக்திக்கு உப்படுத்தி மகாராஜாவே ப்ரதான மாயிருப்பதாலே, அவ்வாறு சொல்லப்படுதல்போல, சேதநு சேதனங்களைத் தன் சக்திக்கு உட்படுத்தி பரப்ரம் ஹமே ப்ரதானமா யிருப்பதனுலே, யாவும் பரப்ரம்ஹமே யென்று சொல்லப்படும். உலகத்தில் ஸ்வரூப ஸ்வபா வங்களாலே உடலும், உயிரும் வேறு வேரு யிருக்கின்றன. ஒருவன் என் உடம்பு இளைத்தது பருத்தது என்று, சொல்லு கிருன். மற்றவர்களும் அவனைப் பார்த்து உன் சரீரம் இளைத்தது பருத்தது என்று, சொல்லுகிருர்கள். இதனுல், ஆத்மாவும் சரீரமும் வேறு வேருக ப்ரஸ்தாபிக்கப்படு கின்றன. மற்ருெரு சமயத்தில் அந்த மனிதனே நான் இளைத்தேன் பருத்தேன் என்று சொல்லுகிருன். மற்றவர் களும் அவனைப் பார்த்து நீ இளைத்தாய் பருத்தாய் என்று சொல்லுகிருர்கள். இதனுல், ஆத்மாவும் சரீரமும் ஒன்ரு கவே ப்ரஸ்தாபிக்கப்படுகின்றன. இப்படி ஒரு சமயத்தில் ஆத்மாவும், வேறு வேருகப் பிரஸ்தாபிக்கப்படுவதற்கும் மற்ருெரு சமயத்தில் ஆத்மாவும் சரீரமும் ஒன்ருக ப்ரஸ்தா பிக்கப்படுவதற்கும் காரணம் "ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத்தோன்றினும் வேற்றுமை நயத்தின் வேறே உடலுயிர்" என்பதின்படி, ஆத்மாவும், சரீரமும் ஒன்று

சேர்ந்து ஒற்றுமையா யிருப்பது, ஸ்வரூப ஸ்வபாவங்களாலே வேற்றுமையாயிருப்பது மேயாம். இது போலவே சேதனு சேதனங்களை சரீரமாக உடைய பரப்ரம்ஹமே ப்ரதானமாகச் சொல்லப்படும்.

ஒருவன் மற்றொருவனைப் பார்த்து மாதம் ஒன்றுக்கு உன் ஜீவனத்துக்கு எவ்வளவு வேண்டுமென்று கேட்குமிடத்து, அவன் அதற்கு விடையாக, எனக்குப் பதினைந்து கல நெல்லும் ஐம்பது ரூபாயும் வேண்டுமென்று சொல்லுகிருன். கேட்டவன், "உனக்கு" என்று, சொன்னதிலும் விடை பகர்ந்தவன் "எனக்கு" என்று, சொன்னதிலும், விடை பகர்ந்தவனுடைய அபிமானத்தில் ஒதுங்கிய பார்யா புத்திராதிகள் அடங்கி இருப்பதுபோல, பரப்ரம்ஹத்தின் அபிமானத்தில் ஒதுங்கிய ஆத்மாக்களையும், ப்ரக்ருதியையும் வேறுபடுத்திச் சொல்லாமலே பரப்ரம்ஹம் என்று சொல்லுதல் கூடும்.

'ஏஷஸ் ஸர்வபூதாந்த ராத்மா' என்றும் 'யஸ்யாத்மா சரீரம் யஸ்யப்ரிதிவீ சரீரம்' என்றும், 'ஜகத் ஸர்வம் சரீரம் தே' என்றும், 'தானிஸர்வாணி தத்வபு:' என்றும், வேதாந்தாதி சாஸ்த்ரங்களில் சொல்லுகிறபடியே சேதனு சேதனங்களைச் சரீரமாகக்கொண்டு ஈச்வரன் ஆத்மாவாயிருக்கிருன் என்று பெறப்படுவதால் சரீரமான சேதனு சேதனங்களுக்கும், சரீரியான ஈச்வரனுக்குமுள்ள விசிஷ்ட ஐக்யத்தை (கூடி ஒன்ருயிருப்பதை) நோக்கி சேதனு சேதனங்களையும், ஈச்வரனுகவே வ்யவகரிப்பர். சேதனு சேதனங்களின் ஸ்வரூப ஸ்வபாவங்களையும், ஈச்வரனது ஸ்வரூப ஸ்வபாவங்களையும் வேறு வேருகச் சொல்வதனை 'வையதிகரண்யம்' என்றும், ஒன்ருகச் சொல்வதனை

'சாமாஞதி கரண்யம்' என்றும், வேத வித்துக்கள் அருளிச் செய்வர்.

## பரப்ரம்ஹம் எங்கும் வியாபித்திருப்பதனுல் கண்டப்படாது என்பது.

22. *பரப்ரம்ஹம் எங்கும் வியாபித்திருக்கிறது அந்த வியாபகத்துக்கு இடையிலே ஆத்மாக்களும் ப்ரக்ருதியும் உண்டென்று சொல்லுமிடத்து பரப்ரம்ஹத்தின் வியாபகம் கண்டப்படுமன்ருே? ஒரு பொருளிருக்குமிடத்தே மற்ருெரு பொருளிருக்க எப்படி முடியும்?* 40

பரப்ரம்ஹம் எங்கும் வியாபித்திருக்கிறது என்னும் போது 'எங்கும்' என்னும் சொல்லாலே எது குறிக்கப் படுமோ அதைக் கூர்ந்து அறிதல் வேண்டும். வ்யாப்யம் (வியாபிக்கப்படும் பொருள்) இருந்தாலன்ருே வ்யாபகம் (பரப்ரம்ஹம்) வியாபித்திருக்கும் நிலை பெறும். பரப்ரம்ஹம் எங்கும் வியாபித்திருககிறது என்னுமவர்கள் எதில் வியாபித்திருப்பது என்று, அறியவேண்டாவோ? மனிதன், மிருகம், பக்ஷி, மரம், செடி, கொடி, மலை என்பவை ஒன்று மின்றி வெட்ட வெளியாகத் தோன்றுமிடம் எல்லாம் பரப்ரம்ஹம் வியாபித்திருக்கு மிடம் என்றும், அந்த வெட்ட வெளியில் மனிதன் முதலிய முன்சொன்ன பொருள்கள் தோன்றுவது வ்யாபகத்துக்கு இடையிலிருப்பது என்றும், சொல்லுவோமாயின், வெளியிடமெல்லாம் ஆகாசமாதலாலும், அவ்வாகாசம் ப்ரக்ருதி தத்வங்களில் ஒன்ருதலாலும் அவ்வெளிப்ரக்ருதியென்று நிலைபெறுமே யன்றி, சேதஞசேதனங்கள் இல்லாமல், வேருென்று உண்டென்றும், அதில் ஈச்வரன வியாபித்திருக்கு மென்றும், சொல்ல முடியாது. ஆகவே, எங்கும், என்னும் சொல்லாலே

குறிக்கப்படுவது, சேதனு சேதனங்களென்றே கொள்ளக் கடவதாம்.

ஒரு பொருள் இருக்கு மிடத்தே வேறு பொருள் இராது என்னும் நியதி ஸ்தூல வஸ்துக்களுக்கேயன்றி சூக்ஷ்ம வஸ்துக்களுக்கு அல்ல. சூக்ஷ்ம ஸ்வச்ச த்ரவ்ய மாகிய ஆகாசம் எல்லா பூதங்களுக்கும் இடங்கொடுத்துக் கொண்டு அந்த பூதங்களில் தானும் இருப்பதாலும், எங்கும் நிறைந்த ஆகாசத்தில் சூரியன் ஒளி வியாபித் திருக்க அதில் கண் பார்வை ப்ரவேசித்து அங்குள்ள பொருள்களைக் காண்பதினுலும், ஸ்தூல வஸ்துவில் சூக்ஷ்ம வஸ்து வியாபிப்பதும், சூக்ஷ்ம வஸ்துவில் சூக்ஷ்ம வஸ்து வியாபிப்பதும் ஸம்பவிக்கிறபடியால், "ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம்" என்று, சொல்லப்படும். பரப்ரம்ஹம் ஸ்தூல சூக்ஷ்மங்களாகிய ஸர்வத்திலும் வியாபித்துத்தன் பரிபூர்ணத்வத்துக்குத் தடையின்றியே யிருப்பது கூடும். இந்த யுக்திகளுக்குக் கண்ணழிவு உண்டாயினும், "அந்தர் பஹிச்சதத் ஸர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித:" 'அந்த நாராயணன் வியாப்பிய வஸ்துக்கள் எல்லாவற்றின் உள்ளும் புறம்பும் வியாபித்திருக்கிருன்' என்னும், வேதாந்த வசன பலத்தாலே சர்வ சக்தித்வமுடைய பரப்ரம் ஹத்துக்கு சர்வ பரிபூர்ணத்வம் சித்திப்பதில் தடையில்லை.

23. *பரப்ரம்ஹத்துக்கு சேதனு சேதன தோஷங்கள் ஒட்டா தென்பது. சேதனு சேதனங்களில் வ்யாபித்திருந்தால், அவைகளின் தோஷங்கள் ஈச்வரனுக்கும் உண் டாகாதோ?*



தேகத்தின் குணங்களாகிய பால்யம் யௌவனம் முதலிய அவஸ்தைகள் ஜீவாத்மாவுக்கு இல்லாதாப்போல

ஜீவாத்மாவின் தோஷங்கள் பரமாத்மாவுக்கு உண்டாக மாட்டா. முண்டகோபநிஷத்தில்: "த்வாஸுபர்ணு ஸயுஜா ஸகாயா ஸமான வ்ருக்ஷம் பரிஷஸ்வ ஜாதே தயோ ரன்ய: பிப்பலம் ஸ்வாத் யந்த்யனச்னன்னன்யோ அபிசாக சீதி" என்று, சொல்லுவதன்படி, சரீரமாகிய வ்ருக்ஷத்தி லிருக்கும், ஜீவாத்மா பரமாத்மாக்களில், ஜீவாத்மா புண்யபாப பலன்களை அநுபவித்துக்கொண்டிருக்கிறது. பரமாத்மா பலங்களின்றிக்கே ப்ரகாசித்துக்கொண்டிருக் கிறது. என்று, சொல்லப்பட்டிருப்பதனுலும், "ஸர்வ பூதாந்தராத்மா அபஹதபாப்மா" எல்லா ஆத்மாக்களுக் கும் அந்த ராத்மாவான பரமாத்மா பாபமில்லாதவன் என்று, பிரமாண மிருப்பதாலும், சேதனு சேதனங்களில் வியாபித்துககூடி யிருப்பினும் அவைகளின் தோஷங்கள் ஈச்வரனுக்கு உண்டாகவே மாட்டா. சர்வேச்வரன் அருளைப்பெற்ற ஞானிகள் அஜ்ஞான மயமான சரீரத் துடன் கூடியிருப்பினும், உலக சம்பந்தம் பெற்றிருப்பினும் அவைகளின் தோஷங்களை யடையாமே யிருப்பதைக் கண்டும் கேட்டும் இருக்கின்றோம். இனி, ஈச்வரனைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

*2-வது விசிஷ்டாத்வைத வியல் 23.*

விசிஷ்டாத்வைத வியல் முற்றுப்பெற்றது.

---

# 3. நிர்விசேஷ வாத நிரசன வியல்.



பரப்ரஹ்மம் ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேதரகிதம்: அதாவது, ஸஜாதீயமான சேதனங்களும், விஜாதீயமான அசேதனங்களும், ஸ்வகதமான ரூப, குண, விபூதி சேஷ்டிதங்களும் ஆகிய விசேஷம் இல்லாதது. ஆகையால், நிர்விசேஷமேயாம்.

'நிர்விசேஷம்' என்பது விசேஷமில்லாதது அல்லவென்பது. பரப்ரம்ஹம் நிர்விசேஷம் என்பறதகு ரூப, குண, க்ரியைகளும் சேதனு சேதனங்களுமாகிய விசேஷங்கள் இல்லாததென்று சொல்லப்படாது.

நிர்விசேஷமாக ஒரு பொருளும் இருப்பதில்லை. எந்தப்பொருளும் விசேஷத்துடனே அறியப்படுதலாலே, **ப்ரத்யக்ஷ ப்ரமாணமும்**. ஸவிசேஷமேயாம் புகையைக் கொண்டு நெருப்பு உண்டென்று அறியப்படுதலாலே **அநுமானப்ரமாணமும்**, ஸவிசேஷமேயாம். பகுதி விகுதிகளுடன் கூடியதாய் அர்த்தங்கொடுக்கையாலே **சப்தப்ரமாணமும்**, ஸவிசேஷமேயாம்,

**உபமான ப்ரமாணமும் நிர்விசேஷம் அன்றென்பது.**

1. *உபமான ப்ரமாண த்ருஷ்டாந்தத்தாலே நிர்விசேஷ வஸ்துவைச் சாதிக்கலாமே.* 42

உவமை என்பது உபமேயப்பொருளிலுள்ள தர்மத்துக்கும் உபமானப் பொருளிலுள்ள தர்மத்துக்கும் ஒற்று

மையைத் தெரிவிப்பதாகும் அந்தப் பொது தர்மம் ஸவிசேஷமான உவமான உவமேயப்பொருள்களில் நிலை பெறுமேயன்றி, நிர்விசேஷப் பொருளில் நிலைபெறாது. ஸவிசேஷங்களான உவமான உவமேயங்களுக்குப் பொருத்தமுண்டு. நிர்விசேஷ வஸ்துவான உவமேயத்தில் தர்மமொன்று மில்லாமையாலே உவமானமான ஸவிசேஷ வஸ்துவிலுள்ள தர்மத்துடன் அது பொருத்தமடைய மாட்டாது. ஆகவே நிர்விசேஷ வஸ்துவை நிலைப்பிப்ப தற்கு உவமானப்ரமாணமும் சாதகமாகமாட்டாது.

'விசேஷம்' என்பது அவனிலும் இவன் விசேஷித் தவன் என்னுமிடத்து, உயர்வுப்பொருளாய் வருதலால், நிர்விசேஷம் என்பதற்கு தன்னின் மேம்பட்டாரில்லாதது பரப்ரம்ஹம் என்று, பொருள் கூறுதல் பொருந்தும்.

**மாயையே சேதநு சேதனங்களென்பதை மறுத்தல்.**

மாயையே சேதஞ சேதனங்களா யிருக்கிறது ஆகை யால் சேதஞ சேதனங்கள் உண்டென்பது ப்ரமமேயாம்.

பரப்ரம்ஹம் நிர்விசேஷம் என்று சொல்லிவிட்டு மாயையை ப்ரஸ்தாபிக்கு மிடத்து பரப்ரம்ஹம் ஸவிசேஷ மேயாகும்.

மாயை யென்பது ஒன்று உண்டென்னில் பரம்ரம்ஹம் ஒன்றேயுண்டு மற்றொன்றுமில்லை யென்பது கூடாது.

**மாயை இல்லாத பொருளாகும்.**

மாயை இல்லாத பொருளாகில் அதன் வ்யவஹாரமே கூடாது.

**மாயை உள்ளதுமல்ல இல்லதுமல்ல.**

இச்சொல் உள்ளது என்னும் வாதம் துர்ப்பல மடையு மிடத்து, இல்லதைச் சொல்லவும், இல்லது என்னும் வாதம் துர்ப்பல மடையு மிடத்து உள்ளதைச் சொல்லவும், ஏற்படுத்திக்கொண்டதேயாம் ஒருவன் தன்னுடைய வ்யவஹாரத்துக்கு சாக்ஷியாக இட்டுக்கொண்டு வந்து காட்டி இவன் யோக்யனு மல்ல அயோக்யனு மல்ல. இவன் சொல் மெய்யுமல்ல பொய்யுமல்ல என்று, சொல்லி விட்டு, அந்த சாக்ஷியானவன் சொல்வது ஒன்றுக் கொன்று மாறுபடுமிடத்து, இவன் தன்மையை முன்பே சொல்லிவிட்டேனே இவ்விஷயத்துக்குப் பொய்யான பேச்சை ஒப்புக்கொள். இதற்கு மாறுபட்ட அவ்விஷயத் துக்கு மெய்யான பேச்சை ஒப்புக்கொள், என்று, சமயத் துக்குத் தக்கபடி சொல்வானுயின், கேட்பவன் அந்த வ்யவ ஹாரத்தை எப்படி தீர்மானித்து அறியமுடியும் வ்யவ காரம் கொண்டு போனவன் அந்த சாக்ஷியால் யாது பயன் அடையக்கூடும்.

2. *ஈச்வரன் உளனல்லன் இலனல்லன் என்று சொல்லப்பட வில்லையோ ?* 43

ஈச்வரன் என்னும் ஒருவன் உண்டாய் அவன் அன் புள்ளார்க்கு உள்ளவனுகவும், அன்பில்லார்க்கு இல்லாத வனுகவும், இருப்பனென்று, உள்ளதொரு பொருளில் இரண்டு தர்மங்கள் சொல்லப்படுகின்றன. மாயை அவ் வாறு தர்மத்தை யிட்டுச் சொல்லப்படாமல் வஸ்துவே இல்லதும், உள்ளதுமாகு மென்பது எப்படி கூடும். பரப்ரம் ஹத்தைக் குறித்த உண்மையின்மைகள், தர்மத்தைக் குறித்ததாகும். மாயையைக்குறித்த உண்மையின்மைகள்

வஸ்துவைக் குறித்ததாகும். எடுத்த த்ருஷ்டாந்தம் ஒன்றுக்கொன்று பொருந்துமாறில்லை.

8. *மலடிமகன், ஆகாயத் தாமரை, ஆமைமயிர் முதலிய சொற்களிலிருந்தும், வஸ்து இல்லாமலிருக்கவில்லையோ? அதைப்போல, மாயை இல்லாததாயினும், அதைப்பற்றிய ப்ரஸ்தாபங்கள் உண்டாகக் கூடுமே.* 44

**1. மலடி மகன் முதலிய சொற்களிருந்தும் வஸ்து இல்லாததுபோல் இல்லாத மாயையின் பிரஸ்தாபம் கூடு மென்பதை மறுத்தல்.**

மலடிமகன், ஆகாயத்தாமரை முதலியவைகள் சொல் மாத்திரமே யன்றிப் பொருளில்லை. இன்னதன்மையான இன்னகாரியந்தானென்று, அவைகளைப்பற்றி குணகார்ய விஷயமான வ்யவகாரங்களும எங்கேனும் உண்டாயிருப்ப தாகக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. இல்லாததான மாயைக்கு மாத்திரம் வ்யவகாரம் எப்படி உண்டாகக் கூடும். ஒருத்தன் பொருத்தமில்லாத சொல்லைச் சொல் லும்பொழுது அச்சொல் வ்யவகார யோக்யமன்று, என்ப தற்காக மலடிமகன் முதலிய த்ருஷ்டாந்தங்களும், இந் தளத்தில் தாமரை, உலக்கைக்கொழுந்து, குந்தாணிவேர், குதிரைக்கொம்பு முதலியவைகளும், சொல்லப்படுகின் றன. ஆகவே இந்த த்ருஷ்டாந்தங்கள் சொல்மாத்திரமே யன்றிப் பொருளும் வ்யவகாரங்களும் இல்லாதனவே யாதலால், வ்யவகாரமுள்ளதான மாயையை சாதித்துக் கொடுக்கமாட்டா.

த்ருஷ்டாந்தமான 'மலடிமகன்' என்பது, 'மலடி' என்றும், 'மகன்' என்றும், பொருள்கள் இரண்டுண்டாய்

அவ்விரண்டு பொருளுக்கும் சம்மந்த மில்லாமையைச் சொல்லுவதாகும், இது, சம்பந்தத்தால் இன்மை தார்ஷ டாந்தமான மாயை என்பது, பொருளே இல்லாதது. இது பொருளால் இன்மை இவ்விரண்டில், த்ருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களுக்குப் பொருத்தமில்லை. இல்லாததொரு பொருளைப்பற்றிய வ்யவகாரம் காட்டக் கேட்டவிடத்து இருக்கும் இரண்டு பொருள்களுக்கும் சம்மந்தமில்லா மையைக் குறிப்பதை யெடுத்துக்கூறுவது பொருந்தாது.

## 2. கானல் நீர்.

கானலில் நீர் தோன்றுவதுபோல தோற்றமாத்திரமே யன்றி சேதன சேதனங்களோடு கூடிய இவ்வுலகம் பொய்யேயாம்.

கானலில் நீரிருப்பது பொய்யல்ல. பஞ்சீகரணவகை யாலே ஒவ்வொரு பூதத்திலும் மற்ற பூதங்கள் கலந்திருப்ப தால் வெளியாயுள்ள ஆகாசத்தி லிருக்கும் நீர் உஷ்ண சம்பந்தத்தாலே காணப்படுவது மெய்யேயாகும். ஆனல் அந்த நீர் ஏன் உபயோகப்படவில்லை? என்னில், மண்ணி லாவது மரத்திலாவது சிறிதே நீர்கலந்திருந்து அந்த ஈரம் ஸ்பர்சத்துககு உதவாமலிருந்தாலும் கண்ணுலே பார்த்து, அந்த மண்ணிலும், மரத்திலும் நீர் உண்டென்று, துணி தல்போல, கானலில் உள்ள நீர் உபயோகப்படாவிட்டாலும் பஞ்சீகரண வகையைச் சொல்லும், சாஸ்திரங்களைக் கொண்டும், தோற்றத்தைக்கொண்டும், கானலில் நீர் உண்டென்று துணியப்படும். ஆகவே, உலகம் தோற்ற மாத்திரமே என்பதற்குக் கானல் நீர் சாதகமாகமாட்டாது.

### 3. சிப்பியில் வெள்ளி.

சிப்பியிலுள்ள வெள்ளியைப்போல இல்லாத உலகம் தோற்றமாகும்.

சிப்பியில் காணப்படும் வெள்ளி மெய்யேயாகும். எங்கனமென்னில்? சிப்பியில் முத்து உண்டாவது. அந்த முத்து வெள்ளியம்சமுடையதா யிருப்பது. வெள்ளி யம்ச மான முத்தின் சம்பந்தத்தாலே சிப்பியில் வெள்ளித்தோற்ற முண்டாகிறது. சிப்பியில் வெள்ளி யம்சமுண்டாயின், அந்த வெள்ளி ஏன் உபயோகமாகக்கூடாது என்னில்? சிப்பியிலிருக்கும் அற்பமான வெள்ளியை எடுக்கவும், அதனுல் ஆபரணங்கள் செய்துகொள்ளவும், முடிவதில்லே. அந்த வெள்ளியை எடுக்கமுடிந்தாலும் பணச்செலவுக்கும் சரீரப்ரயாசைக்கும், தக்கபலன் கிடைப்பதில்லே. ஆக சிப்பியில் வெள்ளியம்சம் இருப்பது மெய்யே யாதலால், இது உலகம் தோற்ற மாத்திரமே என்பதற்குச் சாதகமாக மாட்டாது.

### 4. கயிற்றில் பாம்பு.

கயிற்றில் பாம்புபோல உலகம் தோற்றமாத்திரமாம்.

கயிற்றில் பாம்பு தோன்றுவது உண்மையான ஞானத் தாலே, முன் அனுபவித்ததின் நினேவேயாகும். ஒரு கயிறு, நீண்டும் வளேந்து மிருந்த பாம்பைக் கண்டறிந்த ஒருவன் முன் தான் கண்டறிந்த பாம்பினிடத்துள்ள நீட்சியும், வளேவுமான உருவம் இப்போது கண்ட கயிற்றினிடத்தி லிருப்பதால், அந்தக் கயிற்றைப் பாம்போ என, எண்ணு கின்ருன். அவன் முன்பு பாம்பினிடத்தில் கண்டறிந்த உருவம் மெய்யே. அது போலவே, கயிற்றினிடத்தி

லிருக்கக்கண்ட உருவமும் மெய்யே. நீண்டும் வளைந்தும் இருக்கும் கயிற்றை பாம்போ என்றெண்ணியது, முன்பு அவ்வுருவத்தை யுடைய பாம்பைக் கண்டறிந்த உண்மை யான் அநுபவத்தாலேயாம். ஆகவே கயிற்றில், உலகத்தி லிருப்பதாய்த் தான் கண்டறிந்ததான பாம்பின் எண்ணம் உண்டாயிற்றே யன்றி எங்கும் இல்லாததொன்று தோன் றவே இல்லை. ஆதலால், உலகம் தோற்ற மாத்திரமே என்பதற்கு இது சாதகமாக மாட்டாது.

### 5. மாயா கந்தர்வலோகம்.

இந்திர ஜாலம் செய்வோர் காட்டும் மாயா கந்தர்வ லோகம் போலே உலகம் தோற்றமாத்திரமே யாகும்.

இந்திர ஜாலம் செய்வோர் காட்டும் கந்தர்வலோகம் மந்த்ரத்தாலுண்டாவதாகும். பாம்பைத் தடை செய்வதும், பாம்பு, தேள் விஷங்களை நிவர்த்தி செய்வதும், மந்த்ரமா யிருக்கக்காண்கின்றோம். சில வியாதிகளுக்கு மந்த்ர சிகிச்சையுமுண்டு. இவ்வாறு மந்த்ரம் உண்மையேயாக மந்த்ரத்தாலுண்டாகும் கந்தர்வலோகமும் உண்மையே யாகும். ஆயின், பாம்பைத் தடைசெய்யும் மந்த்ரம் சிறிது பொழுதே சித்தித்திருந்து அதற்குரிய கால அளவு கடந்தபிறகு, பலிக்காமற்போயினும், முன்பு தடை செய்த மந்த்ரம் உண்மையாவது போல மந்த்ர சக்தியுள்ளவரை யில் தோன்றியிருந்து, அதன் கால அளவு கடந்தவுடன் மறைவுபடும் மாயா கந்தர்வலோகமும் மெய்யேயாகும். இது உலகத்தோற்ற மாத்திரமே என்பதற்குச் சாதகமாக மாட்டாது.

## 6. கனவில் பொருள்.

கனவில் காணும் பொருள்களைப்போல உலகம் தோற்றமாத்திரமேயாம்.

கனவு ஒருவனுக்கு உண்டாகும் நன்மை தீமைகளை சூசிப்பிக்கிறது, என்று சொல்லக் கனவுநூல் பலவகையா ஏற்பட்டுள்ளன. பொய்யானதற்கு ஏன் சாத்திரங்கள் ஏற்பட்டிருக்கவேண்டும். அரிச்சந்திரன், த்ரிஜடை முதலானோர்க்குத் தோன்றிய கனவுகள், நன்மை தீமைகளைக் குறிக்க வந்தவை யென்று, நூல்கள் சொல்லுகின்றனவே. அன்றியும், " அந்தந்த புருஷர்களுடைய கனவு காலம் வரையில், அநுபவிக்கத்தக்கபடி ரதங்களையும் குதிரை முதலிய பதார்த்தங்களையும் நிகில ஜகந்நாடக சூத்ரதாரியான பரமாத்மா உண்டாக்குகிறான் என்றும் பரமாத்மா ஸ்வப்ன மத்யத்திலே, அந்த அந்த ஆத்மாக்களின் புண்ய பாபங்களுக்கு அநுகுணமாக சுர, நர, திர்யக்காதி ரூபங்களையடைந்து, ஸ்திரீகளோடு ரமித்து பக்ஷித்து, சந்தோக்ஷிக்கும்படியாகவும், புலி, முதலியவைகளைக் கண்டு பயந்து துக்கிக்கும்படியாகவும் உண்டாக்குகிறான். என்றும், ஐதரேய உபனிஷத்தில் சொல்லியிருப்பதின்படி, கனவு மெய்யேயாதலால், இதுவும், உலகம் பொய்த்தோற்றம் என்பதற்கு சாதகமாகமாட்டாது.

## 7. தூங்கும்போது உலகம் தோன்றாமை.

தூங்கும்போது உலகம் தோன்றுவதில்லையாதலால் உலகம் உண்டென்று சொல்லக்கூடாது.

ஒருவன் தூங்கும்போது உலகம் உண்டென்பதைத் தூங்குமவன் அறிந்துகொள்ளவில்லையே அல்லது உலகம்

இல்லாமற்போகவில்லை. ஒருவன் தூங்கும்போது அவன் வீட்டில் ஒரு குழந்தை பிறந்திருந்தால் தூங்கி விழித்த அவன் தான் தூங்கும்போது உலகம் இல்லையாதலால், பிறந்த அக்குழந்தையை இல்லை என்று, சொல்லிவிடுவானோ ? அப்படி சொல்லுமிடத்து, அதைப் பிறர் ஒப்புக்கொள்ளமுடியுமோ ? ஒருவன் தூங்கிய அந்தக் காலத்திலாவது, அவனுக்கு உலகம் தோன்றாமலிருக்கிறதல்லவோ என்னில் ; தூக்கம் ஒருவித மயக்கம் ஆதலால், தூங்கினவனுக்கு உலகம் தோன்றாமற்போயினும், விழித்துக்கொண்டிருந்தவனுக்கு உலகம் தோற்றமாயே இருத்தலால், மயங்கினவன் அநுபவம் மயங்காதவன் அநுபவத்தைத் தடைசெய்யமாட்டாது. ஆதலால், தூங்கும்போது உலகம் தோன்றவில்லை என்பதற்கு தூங்கினவனுடைய மறதியே காரணமல்லது, உலகம் இல்லாமலிருக்கவில்லை. ஆகவே இதுவும் உலகம் இல்லை என்பதை சாதித்துக்கொடுக்க மாட்டாது.

## 8. பாண்டத்தின் உருவம்.

குயவன் ஒரு பாண்டத்தைச் செய்யும்போது வாயும் வயிறுமான அதன் உருவத்தைக் குயவன் எங்கிருந்தாவது கொண்டுவந்து வைத்தானோ ? அந்த பாண்டம் உடைந்த போது, அவ்வுருவம் எங்கேயாவது போய்விடுகிறதா ? இரண்டும் இல்லையே. அவ்வுருவம்போலே உலகம் தோற்ற மாத்திரமேயாம்.

பாண்டத்தினது வாயும் வயிறுமான உருவம் குயவனது மனத்தினின்று உண்டாயிற்று. குயவன் மனத்தில் சிருஷ்டிப்பொருள்களினின்று தோன்றிற்று. எனவே, மூங்கில், சுரைக்குடுக்கை தேங்காய் குடுக்கை முதலிய உள்

தொளையுடைய பொருள்களைக் கண்டு, அவற்றினுருவங்களை மனதில் வைத்துக்கொண்டு ஒன்றேடொன்று இணைத்துப் பெரிதும் சிறிதுமான உருவங்களாக மண்ணைக் கூட்டிச் செய்கிருனே அல்லது எங்கு மில்லாத உருவம் பாண்டத்துக்கு வந்துவிடவில்லை. பாண்டமாகிய பண்பிநாசமானல், வாயும் வயிறுமான் உருவப் பண்புதானும் கெடுகின்றது. அவ்வுருவம் வேறு பொருள்களில் இருக்கின்றதேயல்லது, எங்கும் இல்லாததல்ல. ஆகவே, இதுவும் உலகம் தோற்றமாத்திரமே என்பதற்குச் சாதகமாக மாட்டாது. கானலில் நீர் முதலியவை போல தோற்றமாத்திரமே யாதலால் உலகம் பொய்யென்று சொல்லுமவர்கள் பொய்யான உலகத்தில் ப்ரவர்த்தித்திருப்பது கூடுமா? உலகம் பொய் யென்று எவ்வாற்ருனும் சாதிக்க முடியாதாகையால் உலகம் மெய்யேயாம்.

## 9. பாதிதானுவர்த்தி.

உலகம் பொய்யென்று அறிந்தும் அதில் ப்ரவர்த்தித்திருப்பது பாதிதானுவர்த்தியாம். அதாவது, ஒன்றைப் பொய்யென்று அறிந்துகொண்டாலும், அதில் ப்ரவர்த்தி யிருப்பதாம். ஆகையால் அவ்வகையில் ப்ரவ்ருத்தி யிருப்பது கூடும்.

ஒருவன் இன்றைத்தினம் கானலைப்பார்த்து நீர் என்று மயங்கி அந்த நீரை மொண்டுவரலா மென்று, பாத்திரத்தை எடுத்துக்கொண்டுபோனன். நீர் கிடைக்கவில்லை திரும்பி வந்து விட்டான். நாளைக்கு அதே இடத்தில் கானல் நீர் தோன்றுமாயின், அந்த நீரை மொண்டுவரப் போவானே? போவதில்லையே. அதுபோல உலகம் பொய் யென்று அறிந்தவனுக்கு, உலகத்தில் ப்ரவர்த்தி யிருப்பது

கூடாதன்றே? ஆகவே, இன்று நீராகத்தோன்றிய கானல் நாளைக்கும் நீராகவே தோன்றுவது பாதிதானுவர்த்தி (பாதிக்கப்பட்டது மீண்டும் தோன்றுவது) ஆகுமே யல்லது, அதில் ப்ரவர்த்தி யிருப்பது யுக்தமாகமாட்டாது. பயனற்றதாதல், தகுதியல்லதாதலான விஷயங்களில் அறிவுடையான் பிரவர்த்தியான். ஒரு கால் பிரவர்த்திக்க நேருமாயினும் மீண்டும் அதில் பிரவர்த்தியாமல் தன் அறிவுடைமையை நிலை நிறுத்திக்கொள்வான். அறிவில்லாதானே அவற்றில் பிரவர்த்தித்திருப்பான்.

## ஞானிகட்கு உலகம் பொய் என்பதை சமர்த்தித்தல்.

4. *ஞானிகட்கு உலகம் பொய்யென்று சொல்லப்படுகின்றதே?* 45

ஞானிகட்கு உலகம் இல்லை யென்பது; அஞ்ஞானமயமான உலக வ்யவஹாரம் ஞானிகளைத் தொடராது என்பதும், அவர்கள் அதனை மதியார்கள் என்பதுமே அதன் கருத்தாம். இவ்வாறன்றி உலகம் அடியோடே இல்லாமற் போவதில்லை. ஒரு பொருளிருந்து, அது தக்கபடி பயன்படாமற் போமாயின், அதனை இல்லை யென்பது மரபேயாம். மனிதனுகப் பிறந்து தக்க ஞானப் பேறில்லாதவனை அசத் (இல்லாதவன்) என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். உலகில் உள்ளவர்களில் இருந்தும் இல்லாதவர்கள் என்று சிலர் சொல்லப்படுவர்.

ஆத்மாவும் ப்ரக்ருதியும் அவற்றைச் சார்ந்த எல்லா வ்யவகாரங்களும் பொய்யாய்ச் சொல்லளவே யாகுமாயின் மெய்யான ஆத்மாவுக்கு அஞ்ஞானம் வந்திருக்கிற தென்

பதும், அந்த அஞ்ஞானம் நீங்க அது பரப்ரம்ஹமாம் என்பதும், வெறும் சொல்லேயாகும். பந்த மோக்ஷங் களுக்கு உரியனுன ஆத்மா சொல்லளவே யாமிடத்து, பந்த மோக்ஷங்களும் சொல்லளவே யாமன்ரு? இங்ஙனம் கூறுமிடத்து, ஆத்மா பொய், ப்ரக்ருதிபொய், பந்தம் பொய், சாதனங்கள் பொய், ஆதமா பரப்ரம்ஹம் ஆனதும் பொய், இவைகளைச் சொல்லும் சாஸ்த்ரங்களும் பொய், இப்படி யெல்லாம் சொல்பவரும் பொய், அவர் சொல்லும் சொல்லும் பொய் என்றே கொள்ள வேண்டி வருமே. எவரும் பயமில்லாதே எவ்விதத் தீங்கையும் செய்து திரியலாமே.

## ப்ரம்ஹமே சேதன சேதனங்களா யிருக்கிற தென்பதை மறுத்தல்.

5. *பரப்ரம்ஹமே ஆத்மாவும் ப்ரக்ருதியும் மற்ற வ்யவ காரங்களுமாக இருக்கின்றது?* 46

அஞ்ஞான மயமான ஆத்மா மெய்ஞ்ஞான மயமான பரப்ரம்ஹ மாகும்படி விரும்புதல் கூடும். மெய்ஞ்ஞான ஆத்மாவாக யாதுக்காக வந்து கஷ்டங்களை அனுபவித்து அல்லாடுகிறதோ தெரியவில்லை. பரப்ரம்ஹம் ஆத்மா வாக வந்து துக்க பரம்பரைகளை அனுபவித்து மறுபடியும் தன் நிலைமையைத்தானே நினைத்துக் கொண்டு ஏன் முன் நிலைமையைப் பெறவேண்டுமோ தெரியவில்லை.

மெய்ஞ்ஞான நிலைமையோடிருக்கும் பரப்ரம்ஹம், அஞ்ஞான மடைந்து விட்டால், அதனிடத்தில் மறுபடியும்

மெய்ஞ்ஞானம் எப்படி உதிக்கக் கூடும்? இயல்பா யிருந்த மெய்ஞ்ஞான மழிந்தன்றோ அஞ்ஞானம் வந்து விட்டது.

பரப்ரம்ஹம் தனக்கு இயல்பா யிருந்த ஞானங் கெட்டு அஞ்ஞானத்துக்கு உட்பட்டிருக்கும்போது, அந்த அஞ்ஞானம் தொலைவதற்கு வேண்டிய ஞானம் எது? அது எவ்விடத்திலிருந்து வரக்கூடும்? வந்த அஞ் ஞானத்தை அதன் பிறகு வரும் மெய்ஞ்ஞானம் போக்கு மென்னில் அஞ்ஞானம் வராமுன்னே இயல்பா யிருந்த ஞானத்திற்கு வந்த அஞ்ஞானத்தைப் போக்கு வதற்கு ஏன் சக்தியில்லை? வந்த ஞானம் முன்பு இயல்பா யிருந்த ஞானத்தினும் வேறுபட்டதா? அல்லது அவ் விரண்டும் ஒன்றேயா? வேறு பட்ட தென்னில், எந்தக் காரணத்தாலே வேறு பட்டது? ஒன்றே யென்னில் முன்பு இயல்பா யிருந்த ஞானத்தாலே போக்கமுடியாத அஞ்ஞானம், வந்த ஞானத்தாலே எப்படி போக்கக் கூடும்.

## 1. பரப்ரம்ஹத்துக்கு அஞ்ஞானத்தால் துக்கமில்லை என்பதை மறுத்தல்.

பரப்ரம்ஹத்துக்கு அஞ்ஞானத்தாலே யாதொரு கஷ்டமும் வந்ததில்லை யென்னில், அப்போது யாவரும் இருந்தபடியே இருந்து விடலாமே. ஆத்மாவுக்கு அஞ் ஞானம் வந்திருக்கிற தென்றும், அது போகும்படி சாதனங்கள் அநுஷ்டிக்க வேண்டு மென்றும், அதனாலே, பரப்ரம்ஹம் ஆகவேண்டு மென்றும், சொல்லுவது வியர்த்த வசனமேயன்றோ? இந்த வியர்த்தமான விஷயத் துக்காகவா அங்கங்கே ஆசார்யர்கள் ஏற்பட்டு உபதேசம் செய்யவேண்டும்? அங்கங்கே உபந்யாசங்கள் செய்ய

வேண்டும். பத்திரிகைகளும் புஸ்தகங்களும் ஒன்றின்மே லொன்ருக வெளிவர வேண்டும்? அளவில்லாத ஆத்மாக் களாயிருப்பது பரப்ரம்ஹமாயின் எல்லா ஆத்மாக்களுக்கும் துக்கமயமான அஞ்ஞானம் தொலைந்த பிற்பாடல்லவோ பரப்ரம்ஹம் சுத்த மடைந்ததாகும். ஒரு ஆத்மாவுக்கு மெய்ஞ்ஞானம் வந்து விட்டால் அதனுலே பரப்ரம்ஹம் சுத்த மடைந்ததாகுமோ? ஒரு மனிதன் தன் சரீர முழுமை யும் கரிபூசிக் கொண்டிருக்கையில். ஒரு துளியிடத்தில் கரியைப் போக்கி விட்டால் அந்த சரீரம் சுத்த மடைந்த தாகுமா ?

சேதனமான ஆத்மாவாகவும் அசேதனமான ப்ரக்ருதி யாகவும், இருப்பது பரப்ரம்ஹமேயன்ருே ? ஆத்மாக் களுக்கு இருக்கும் அஞ்ஞானம் தொலைந்தால் பரப்ரம்ம மாகுமிடத்து, அசேதனங்கள் பரப்ரம்ம மாகவேண்டிய தற்கு ஸாதனம் யாது? இந்த அசேதனங்களுக்கு எந்த விதமான ஞானம் உதிக்க வேண்டும் ?

## வாமதேவாதியர் ஸோஹம் பாவனையால் நாமேன் பரப்ரம்ம மாகக்கூடாது என்பதை மறுத்தல்.

6. *உருத்திரன் ஸோஹம் பாவனை செய்தான் என்று அதர்வ சிகையிலும், வாமதேவர் ப்ரம்ம பாவனை பண்ணினுர் என்று, வேதத்திலும், இந்திரன் ஸோஹம் பாவனை பண்ணினுன் என்று, கௌஷீதகி உபனிஷத்திலும், ப்ரஹ்லாதாழ்வான் ப்ரஹ்ம பாவனை செய்தாரென்று விஷ்ணு புராணத்திலும், சொல்லப்பட்டிருக்கிறபடி யாலும். திருவாய்மொழி "கடல் ஞாலம் உண்டேனும் யானே என்னும்" என்னும் பதிகத்தில் நம்மாழ்வார்*

*ப்ரம்ஹ பாவனே செய்தருளுகையாலும் நாம் ப்ரம்ஹ மென்று, ஏன் சொல்லக்கூடாது?* 47

சாஸ்திரங்களில் வாமதேவாதியர் ஸோஹம்பாவனே செய்தனர் என்று, கூறப்பட்டுள்ளது உண்மையே. 'ஸ' என்பதனுலே பரப்ரம்மமும் 'அஹம்' என்பதனுலே, ஆத்மாக்களாகிய தாங்களும், 'பாவனே' என்பதனுலே, பாவித்தலும் தோன்றுவது காண்க. இதனுல் இவர்கள் தாங்களே பரப்ரம்ம என்றதன்று. தாங்கள் அவன் என்று சொல்லும்படி அவனருளேப் பெற்றனர் என்பதே அதன் கருத்தாம். கருட மந்த்ர சித்தியுடையராய், கருட கடாக்ஷம் பெற்றவர்கள் கருடனேப்போலவே பாம்புகளே நடுங்கச்செய்வர். விஷமும் தீர்ப்பர். கருடன் கார்யம் இவர்களிடத்தே காணப்படுகிறது. ஒரு தேவதையாலே ஆவேசிக்கப்பட்டவர்கள் தங்களே அத்தெய்வமாகவே வைத்துப் பேசுவர். பிறகும் அவர்களே அத்தெய்வமாகவே குறித்துப் பேசுவர். ஆகவே பரப்ரம்மத்தின் அருளேப் பெற்ற ஞானியான ஆத்மா தன்னேப் பரப்ரம்மம் என்று வியவகரிப்பது மரபேயாம்.

வாமதேவாதியர் ஈச்வரனருளேப் பெற்ற ஞானியரென்பது சாஸ்த்ர சம்மதமும் லோக சம்மதமும் ஆகும். தாங்கள் ஈச்வரனே என்பது அவர்கள் கருத்தாயின் தாங்கள் விருப்புற்றவை கட்கும், வெறுப்புற்றவைகட்கும், வேண்டியவைகளேத் தாங்களே செய்து கொள்ளாமல் ஈச்வரனருளேக்கொண்டு செய்து கொண்டது கூடாதன்றே ?. பரப்ரம்மம் ஸர்வஜ்ஞனுய் ஸர்வ சக்தனுய், ஸர்வ ரக்ஷகனுய் இருப்பதையும், தாங்கள் அஜ்ஞராய், அசக்தராய் ரக்ஷிக்கப்படுபவரா யிருப்பதையும், அறிந்து

தமக்குரிய ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளான எல்லாக்கடமைகளையும், ஈச்வரனிடத்தே வைத்துவிட்டு ஈச்வரனபிமானத்திலே யொதுங்கி ஈச்வரனருளையே பற்றியிருக்குமவர்கள், தாங்கள் ஈச்வரனருளையே பற்றியிருக்கும் கனத்தாலே நெருப்பு வியாபித்த இருப்புப் பிண்டம் முதலியவைகளை நெருப்பு என்று சொல்லுவதுபோல தாங்களே பரப்ரம்மம் என்று சொல்லுதல் கூடும். பிறரும் அவர்களை அவ்வாறு சொல்லுதல் அமையும்: இவ்வாறு ஞானிகளிடத்து அமைந்ததாய் சாஸ்த்ர சம்மதமான ஸோஹம் பாவனை கூடுவதேயன்றி விஷயாந்தரபரர் ஈச்வரனே தாங்கள் என்று சொல்வது அகங்கார கார்யமென்று, பகவான் தானே பகவத்கீதையில் "ஈச்வரோஹ மஹம்போகீ" என்னும் வசனத்தாலே அருளிச்செய்தான். தாங்களே பரப்ரம்மம் என்று, இறுமாந்த இவ்வகங்காரிகளுக்கு இரணியன், பௌண்ட்ரவாசுதேவன் முதலானுர்க்கு உண்டான கீர்த்தியும் பலனும் உண்டாகாமற் போகாதன்றே?

## 1. மாயையால் ப்ரம்மம் மறைக்கப்பட்டது என்பதை மறுத்தல்.

மாயை பரப்ரம்மத்தை ஆவரித்து சேதனு சேதனங்களும் மற்ற வ்யகாரங்களுமாகச் செய்கின்றது.

இல்லாததான மாயை நித்யமான பரப்ரம்மத்தைப் பற்றிக்கொண்ட தென்றும், அஞ்ஞான மயமான மாயை ஞானமயமான பரப்ரம்மத்தை ஆதரித்ததென்றும், துக்கமில்லாத பரப்ரம்மம் துக்கத்தைத் தரும்மாயையிலகப்பட்டு துக்கப்படுகிற தென்றும், சொல்வது பொருந்தாது. அப்போது பரப்ரம்மத்தைக் காட்டிலும், மாயையே

சிறந்ததாகவேண்டும். மாயைக்கு உட்பட்டது பரப்ரம்ம மாகாது: அதைப் பரப்ரம்மம் என்று சொல்லவேதகாது. அது மாயையைக் காட்டிலும் அற்பமான தென்றே துணிய வேண்டும்.

## 2. பாரமார்த்திக வியவஹாரிக தசை.

பரப்ரம்மத்துக்கு பாரமார்த்திக தசை வியவஹாரிக தசை என்று இரண்டு அவஸ்தைகள் உண்டு. பாரமார்த் திக தசையில் பரப்ரம்மம் ஒன்றே வ்யவகரிக்கப்படும், மற்றொன்று வ்யவகரிக்கப்படாது. வியவகாரிக தசையில் மாயையும் அதன் வ்யவகாரங்கள் யாவும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

நிர்விசேஷமாய் பாரமார்த்திக தசையோடிருந்த பரப் ரம்மத்துக்கு வ்யவகாரதசை எங்கிருந்து வந்தது. பரப்ரம் மமே ஏற்படுத்திக்கொண்டதா? வேறேயாரேனும் ஏற் படுத்திவிட்டார்களா? பரப்ரம்மம் ஏற்படுத்திக்கொண்ட தென்னில், ஜ்ஞானமாத்ரமாய் ஸ்வகதபேத ரகிதமாய் குணக்ரியைகளில்லாததான பரப்ரம்மம் அவஸ்தையை எப்படி உண்டாக்கக்கூடும்? பிறராலுண்டாயிற்றென்னில் ஸஜாதீய விஜாதீய ரகிதமாய் தானேயன்றி வேறொன்று மில்லாததான பரப்ரம்மத்துக்கு பிறராலே அவஸ்தைகள் எப்படி உண்டாக்கக்கூடும்? நிர்விசேஷமான பரப்ரம்மத் துக்கு பாரமார்த்திக வ்யாவகாரிக தசைகளான விசேஷங் கள் எப்படி உண்டாகலாம்.

முடிவில் எல்லாப பொருள்களும் அழிந்து விடுவனவே யாதலால், ஏதும் இல்லாததேயாம் முடிவில் யாவுமே அழியினும் சிருஷ்டி காலத்தில் அவை அடங்கிய இடத்தி

னின்று மீண்டும் உண்டாகிறபடியால் அவை உள்ளன வேயாம்

## 3. அஜ்ஞானமுடையார் துக்கமடைவர் பாரமார்த்திக ஞானமுடையார் ப்ரம்மமேவாய்ப் ப்ரம்மானந்த மடைவர் என்பதை மறுத்தல்.

வியவகாரிகமாகிய அஜ்ஞானமுடையார் துக்க மடைவர். பாரமார்த்திக ஞானமுடையார் பரப்ரம்மமேயாய் ப்ரம்மானந்த மடைவர்.

பிரம்மம் நிர்விசேஷமாகையாலே அதனிடத்து ஆனந் தம் எவ்வாறிருக்கக்கூடும். ப்ரம்மமாகுமவர் இல்லாத ஆனந்தத்தை எப்படி அநுபவிக்கக்கூடும். அல்லது எப்படி ஆனந்த மடையக்கூடும். மாயா சம்மந்தத்தை விட்டு மோக்ஷமடைந்த புருஷன் ப்ரம்மானந்த மடைவான் என்பது வைதிக மதத்தினர் யாவருக்கும் சம்மதமேயாகும். ஆனந்தம் என்பது ஒரு குணம். இதனை வேதபுருஷன் அளவிட்டறியப் பார்த்தது தைத்திரீய உபனிஷதத்தில் ஆனந்த வல்லியில் காணலாம்.

முக்த புருஷன் அவ்வானந்த மடைவதற்குப் பரப்ரம்ம மாகவேண்டும் என்னில் சந்திரனது சீதகிரணங்களை அனு பவிக்க விரும்பினவன் சந்திரனாகவேண்டுமோ? சூரியனது உஷ்ண கிரணங்களை அனுபவிக்க விரும்பினவன் சூரியனாக வேண்டுமோ? வேண்டாமைபோல, ப்ரம்மானந்தம் விரும்பிய முக்த புருஷன் பரப்ரம்மம் ஆகவேண்டுவதின்றாம். ராஜ யோகம் அனுபவிக்க விரும்பினவன் ராஜனாகவேண்டாவோ என்னில், ராஜயோகம் ராஜனது குமாரன் முதலானார்க்கும்

ராஜனது அருள்பெற்றூர்க்கும் ஒக்கு மாகையாலே ராஜ யோகம் அனுபவிக்க விரும்பினவன் ராஜனுகவேண்டுவ தின்றும். ப்ரம்ம சூத்ரத்திலும், "போகமாத்ரம் ஸாம்யம் லிங்காச்ச" என்பதனுல் பரப்ரம்மத்துக்கும் முக்த புருஷ னுக்கும் போக மாத்ரத்தாலே ஸாம்யம் என்று சொல்லப் பட்டிருத்தலால், வேறு வகையான போகம் கற்பிப்பது அவைதிகமேயாம். அங்ஙனம் கொள்ளினும் இருக்கும் ராஜனே ஒழித்துவிட்டு வேறெருவன் ராஜனுவானுயின் அவனுக்கே முன்னிருந்த ராஜனது போகம் கூடும். அது போல, ப்ரம்மானந்தம் விரும்பினவன் இருக்கும் ப்ரம்மத்தை யொழித்துவிட்டே தான் ப்ரம்மமாய் முன்னிருந்த ப்ரம்மா னந்த மடைதல் வேண்டும். ஆகவே, ப்ரம்மமாயே ப்ரம் மானந்தம் அடைதல்வேண்டும் என்னுமிது அநுப பன்ன மேயாம்.

*3-வது நிர்விசேஷவாத நிரசனவியல்* 6.

நிர்விசேஷவாத நிரசனவியல் முற்றுப்பெற்றது.

— —

# 4. பேதவாத பின்ன இயல்.

**ஆத்மாக்கள் சாத்விகர் ராஜஸர் தாமசர் என பேதப்பட்டிருப்பர் என்பதை மறுத்தல்.**

ஆத்மாக்கள் சாத்வீகர், ராஜசர், தாமசர் எனப் பேதப்பட்டிருப்பார்கள். சாத்வீகர் மோக்ஷ மடைவார்கள். ராஜஸர் சம்சாரத்திலுழல்வார்கள். தாமசர் நரகத்தி லழுந்துவார்கள்.

1\. *சாத்வீகர் நல்ல ஞானனுஷ்டான முடையவராய் பகவத் பக்தியைப் பெற்று மோக்ஷமடைவார்கள். இந்த சாத்வீக ருள்ளும் பல பேதங்களுண்டு. அந்த பேதங்களுக்கேற்ப பேதமான சாதனங்களை அவலம்பித்து மோக்ஷமடைவார். பேதமான சாதனங்களுக் கேற்ப மோக்ஷத்தில் ஆனந்த தாரதம்யம் உண்டாயிருக்கும். ராஜஸ தாமசர் சாத்வீகர் போல ஞானனுஷ்டானமும் பகவத் பக்தியும் உடையவ ராய் மோக்ஷமடைய மாட்டார்கள். இவர்களுக்கிருக்கும் பேதங்களுக்கேற்ப சாதனங்களை அவலம்பித்து இகலோக பரலோகங்களும், நரகமும் அடைவார்கள், ஏதோ சில காரணங்களாலே ராஜஸ தாமஸர்கள் ஜ்ஞானனுஷ்டான மும் பகவத் பக்தியும் அடைந்தாலும், போகபாக்கி யங்களை யடைவதேயன்றி மோக்ஷமடைவதில்லை யென்று பேதவாதிகள் சொல்லுகிறார்களே அது யாவரும் ஒப்ப முடிந்ததாமோ?*



ஆத்மாக்கள் சாத்வீகர் ராஜஸர் எனப் பேதப்பட்டிருப் பார்கள். சாத்வீகரே மோக்ஷமடைவார் ராஜசதாமசர்

இகலோக பரலோகங்களும், நரகமும் அடைவார்கள். ராஜச தாமசர் ஜ்ஞானுனுஷ்டானமும் பகவத் பக்தியு மடைந்தாலும், மோக்ஷ மடைவதில்லை. போக பாக்யங் களையே அடைவார்கள் என்று கூறுமிடத்து சாத்வீககுண ஆத்மாவாகாமல் ராஜதாமஸகுண ஆத்மாவாயிருப்பவர் சாத்வீககுண மடைந்தாலும், நல்லனவான ஞானனுஷ்டா னங்களை பெற்ருலும் பகவத் பக்தியுடையராஞலும் முடி வில் இகலோக பரலோக போகங்களை யடையலாமே யன்றி சாசவதமான மோக்ஷ மடைதலில்லை. யாதலால், அவர்கள் சாத்வீககுண மெய்த முயல்வதும் ஜ்ஞானுனுஷ்டானங்களை அடையப்பார்ப்பதும் மோக்ஷத்தைப் பெறவேண்டுமென்று சாஸ்திரங்களின்படி நடப்பதும் பகவத் பக்தி செய்தலும் பயனில்லவேயாகும். ஆகவே ஆத்மாக்களுக்கு இயல் பாகவே பேதங்களுண்டென்றும் சாத்விகரே மோக்ஷ மடைவர் என்றும் ராஜஸ தாமஸர் மோக்ஷமடையார் என்றும் மோக்ஷத்தில் ஆனந்த தாரம்யம் உண்டென்றும் சொல்லும் சித்தாந்தம் யாவரும் ஒப்பமுடிந்ததன்ரும்.

## ஆனந்த தாரதம்யம் உண்டென்பதை மறுத்தல்.

2. *மோக்ஷத்தில் ஆனந்த தாரதம்யம் அவரவர்கள் செய்த சாதனங்களின் பெருமையையும் சிறுமையையும் பற்றி யிருக்கும். அதாவது சிலர் நெடுங்காலம் பிரயாசைப் பட்டு சாதனங்களை அநுஷ்டித்து மோக்ஷமடைவார்கள். சிலர் சிறிதே காலத்தில் அதிகப் பிரயாசை யின்றியே மோக்ஷம் பெறுவார்கள் என்று பேதவாதியர் உரைப்பர். அதற்குப் பரிகாரம் என்ன?* 49

அங்ஙனமாயின் ஓரரசன் உயர்தரப் பரீக்ஷையொன்று ஏற்படுத்தி அதில் தேறினவர்களே தனது சபாமண்ட

பத்தில் தன்னுடன் சமானமாயிருத்தல் கூடுமென்று ஏற பாடு செய்தான். சிலர் அந்தப் பரீக்ஷையில் தேறினார்கள். தேறினவர்களில் சிலர் நெடுங்காலம் படித்துத் தேறியிருப் பார்கள். சிலர் பெரும் பிரயாசைப்பட்டு படித்துத் தேறி யிருப்பார்கள். சிலர் பெரும் பிரயாசையின்றியே படித்துத் தேறியிருப்பார்கள். இவர்களுக்குத் தனது சபாமண்டபத் தில் மர்யாதை தாரதம்யம் ஏற்படுத்துவது நியாயமாகுமா ?

மெட்ரிகுலேஷன், யப்.ஏ., பி.ஏ., யம்.ஏ., என்னும் பல்வகைப்பட பரீக்ஷைகளில் தேறினவர்களுக்குத் தார தம்யம் காண்கின்றோமே என்னில், இவைகளில் படிப்பின் தாரதம்யமும் பரீக்ஷையின் தாரதம்யமும் உண்டாகலால் பேதமிருப்பதுகூடும். அதுபோல வேறு வேறு சாதன பரர்க்கு இகலோகபோக பரலோகபோக மோக்ஷ பேதங்கள் உண்டாதல்கூடும். உயர்தரமான ஒரே வகுப்பில் படித்த வர்களுக்குக் கால அளவும் பிரயாசை அளவும் பாராட்டி மர்யாதை தாரதம்யம் செய்தல் கூடாமைபோல பரமமான மோக்ஷமடையுமவர்களுக்குக் கால அளவையும் பிரயாசை யின் அளவையும் பாராட்டி ஆனந்த தாரதம்யம் இருத்தல் ஒப்பக்கூடாததேயாம்.

ஆனந்த வல்லியில் மனுஷ்ய ஆனந்தம் முதலாக ப்ரம்மதேவ ஆனந்தம் வரையில் வேத புருஷன் அளவிட்டுக் கொண்டு சென்றபோது ஒவ்வொரு ஆனந்த மும் முக்தர்களுக்கு உண்டென்று சொல்லபடுகிறபடியால் முக்தர்க்கு ஆனந்த தாரதம்யம் சொல்லுதல் கூடுமே யென்னில் அவ்வாறு சொல்லியிருப்பது லக்ஷத்தில் ஒன்று பத்து நூறு ஆயிரம் என்னும் கணக்குகள் (எண்கள்) அடங்கி இருப்பதுபோல முக்தர் ஆனந்தத்தில் மற்ற

மனுஷ்யாதி ஆனந்தங்கள் அடங்கி யுள்ளன வென்று சொல்லவந்ததே யன்றி, அவ்வளவே முக்தர் ஆனந்தம் என்று அளவு படுத்தி சொல்லவந்ததன்று.

மனுஷ்யர் ஆனந்தமே முக்தர்க்குண்டு, மனுஷ்ய கந்தர்வ ஆனந்தமே முக்தர்க்குண்டு, இன்னும் தேவர் முதலானேருடைய ஆனந்தத்தளவே முக்தர்க்கு உண்டு என்று, சொல்லுமிடத்து மனுஷ்யர் தேவர் முதலானேர்க்கும் தாரதம்யம் இல்லை யென்று ஏற்பட்டுவிடும். லீலா விபூதி ஆனந்தத்துக்கும் நித்ய விபூதி ஆனந்தத்துக்கும் யாதொரு தாரதம்யம் இல்லை யென்றே முடிவுகட்டிவிடுதல் கூடும்.

உலகத்தில் ஆத்மாக்கள் உயர்ந்த நிலைமையும் தாழ்ந்த நிலைமையும் உடையராயிருப்பதனுல் தாழ்ந்த நிலைமையி லிருப்போர்க்குத் துக்கமே சித்திப்பது ப்ரத்யக்ஷமாயிருக்கிறது. மோக்ஷத்தில் ஆனந்த தாரதம்யம் உண்டாயிருப்பின் அங்கு குறைந்த ஆனந்த முடையார்க்கு துக்கமே சித்திக்கும். இதனுல் மோக்ஷத்தில் துக்கம் உண்டென்று ஏற்படுவதனுல் ஆனந்த தாரதம்யம் கூறுதல் யுக்தமன்று.

உலகில் பல விஷயங்களில் தாரதம்யமிருந்தாலும் தாழ்ந்த நிலைமையுடைய சிலர் நமக்கு அமைந்தது இவ்வளவே என்று திருப்தியடைந்து இருக்க வில்லையோ? அவ்வாறே முக்தருள் குறைந்த ஆனந்த முடையார் அமைந்திருத்தல் கூடுமே யென்னில், நாம் குறைந்த நிலையுடையோம் என்று தோன்றுவது தன்னின் உயர்ந்தாரைக் கண்டபோதல்லவா? அல்லது தன்னின் உயர்ந்தாரை கண்டு இவ்வாறு நாமில்லையே என்று நினைத்து

இல்லாக் குறைக்கு இருப்பதே போதுமென்று அப்போது அமைவதே யன்றி தாழ்ந்த நிலையார்க்கு உயர்ந்த நிலை வருமிடத்து அவ்வுயர்ந்த நிலையைத் தடுப்பாருண்டோ? இவ்வளவே யன்றி சாதாரணமாக ஒருவர் உயர்ந்த நிலைமை யொன்றிலேயாவது அல்லது தாழ்ந்த நிலைமையொன் றிலேயாவது நிலையாயிருத்தல் இல்லை, என்றல்லவோ தாழ்ந்தவர் உயர்வர் உயர்ந்தவர் தாழ்வர் என்று வேத வைதிகர் துணிபுகள் ஏற்பட்டுள்ளன. இந்தத் துணிபைக் கொண்டு அப்போது இருப்பதான தாழ்ந்த நிலைமையை ஒருவாறு அமைதி பெற்றிருக்க அமையும், உலகிலேயே பொருந்தாத உயர்வும் தாழ்வும் மோக்ஷஸ்தானத்தில் உண் டென்பது எவ்வளவும் பொருந்தாது. மோக்ஷமடைவோர் நிரதிசய ஆனந்த முடையராவர் என்பது வேத வைதிகர் துணிபேயாகும். ஆகையால், மோக்ஷத்தில் ஆனந்த தாரதம்யம் உண்டென்று சொல்வது அசப்யமேயாம்.

2. *விஞக்கள்.*

பேதவாத பின்னவியல் முற்றுப் பெற்றது.

---

# 5. வைஷ்ணவ இயல்.

—:o:—

1. *வைஷ்ணவ மதம் என்பதற்குப் பொருள் யாது?* 50

வைஷ்ணவ மதம் என்பது வைஷ்ணவமான மதம் என்று பண்புத் தொகையாய் வ்யாபகமான (பரவியுள்ள) மதம் என்று பொருளாகும். பரவியுள்ள இடம் காலம் இன்னது எனக் குறிப்பிடாமையினுலே எல்லாத் தேசத்திலுல் எல்லாக் காலத்திலும் பரவியுள்ளது வைஷ்ணவ மதம் என்பதாம்.

இதுவன்றி வைஷ்ணவ மதம் என்பது சர்வ வியாபகஞன விஷ்ணுவினது சம்பந்தமுடைய மதம் என்றும் சொல்லப்படும். அப்பொழுது விஷ்ணுவினுடைய சம்பந்தம் இல்லாத தொன்றில்லாமையாலே சர்வதேச சர்வகால சர்வ வஸ்துக்களிலும் பரவியுள்ள மதமென்றே பொருளாமாறறிக.

## வைஷ்ணவ லக்ஷணம்.

2. *வைஷ்ணவம் எத்தனை லக்ஷணங்களை உடைத்தாயிருக்கும்?* 51

"வேஷ பாஷா ஸ்வரூபஞ்ச நிரபேக்ஷா நிகர்வணி ப்ரபந்தம் பக்தி தாஸ்யஞ்ச வைஷ்ணவம் அஷ்ட லக்ஷணம்" என்னும் வசனத்தின்படி, வேஷம், பாஷை, ஸ்வரூபம், நிரபேக்ஷை, நிகர்வம், ப்ரபந்தம், பக்தி, தாஸ்யம் என எட்டு லக்ஷணங்களை உடைத்தாயிருக்கும்.

## வேஷம்.

3. *வேஷம் என்பது யாது?* 52

நெற்றி முதல் பிடறியீருன பன்னிரண்டிடங்களில் 'திருமண் காப்பு' என்னும், சித்ரோத்வ புண்ட்ரங்களும் கழுத்தில் துளசி மணி மாலை தாமரை மணிமாலை பவித்திர மாலைகளும் தோள்களில் ஆசார்யனுல் பொறிக்கப்படும் பகவத் பாகவத அங்கீகார ஹேதுவான சங்கு சக்ர குறிகளும் தோன்றும்படி கொண்டிருத்தல் வைஷ்ணவ வேக்ஷமாம்.

4. *சங்கு சக்கரப் பொறி பகவத் பாகவத அங்கீகாரம் என்பதற்குப் பிரமாணம் யாது?* 53

ஜகத் காரணத்தின் பொருட்டு அவதரித்தருளிய கீதாசார்யனுன கண்ணபிரான் சால்வனைக் கொல்ல எழுந்தருளும்போது வாசல் காப்பாளரை நோக்கி "நாம் திரும்பி வருந்தனையும் சக்கரப் பொறியுடையாரை உள்ளே புகவிடுங்கோன் அல்லாதாரை விடவேண்டா" என்று, அருளிச் செய்தது மகாபாரதமும், பாகவதமும் கூறும். ஆகையால் சக்ராங்கித தாரணம் பகவத் அங்கீகாரஹேது என்பது திண்ணம்.

சக்ரதாரணம் பாகவத அங்கீகாரத்துக்கு ஹேதுவாம் என்பதனை திருப்பல்லாண்டு "ஏடு நிலத்தில்" "தீயிற் பொலிகின்ற" பாட்டுக்களின் வியாக்யானங்களிற் காண்க.

சக்ராங்கித மில்லாதார் பக்கல் சகவாசம் செய்தல், சம்பாஷித்தில் பந்திபோஜனம் செய்தல் அவர்கள் செய்யும் பிரஸங்கம் கேட்டல் முதலியன கூடாவாம்.

கழுத்தில் துளசிமணி தாமரைமணி பவித்திர மாலை களை எப்போதும் தரித்திருக்க வேண்டுமாயினும், ஜல மல விசர்ஜன காலத்திலும் இரவில் சயன காலத்திலும் தரித்தல் கூடாவாம்.

## பாஷை.

5. *பகவத் விஷயத்திலும் பாகவத விஷயத்திலும் ஆசார்ய விஷயத்திலும் பரிமாறும் விசேஷ சொற்களுக்கு முதலில் திரு என்றும் ஈற்றில் அமுது என்றும் கூட்டி, திருக்கோயில், திருவிமானம், திருக்கோபுரம், திரு வாசல், திருச்சக்கரம், திருச்சங்கு, திருவடிகள், திருத் தோள்கள், திருக்கண்கள், திருக்கைகள், திருமாளிகை, திருப்போனகம், திருவிளக்கு என்பன தொடக்க மாகவும்.* 54

பகவந்நிவேதனமான அன்னத்துக்குப் பிரஸாதம், குழம்புக்கு நெகிழ்கரியமுது ரசத்துக்கு சாற்றமுது பாயசத் துக்குத் திருக்கன்னலமுது பருப்பமுது கரியமுது இலை யமுது என்பன முதலாக சிஷ்டாசாரமாக வழிங்கிவரும் வைஷ்ணவ பாஷையாம்.

6. *வைஷ்ணவ பாஷை வழங்காவிடில் வரும் குற்ற மென்ன?* 55

ராஜாவினுடைய மந்திரி பிரதானி முதலானோர் அவ் வவர் அதிகாரத்துக்குரிய கல்வி பாஷைகளைப் பயிலாத போது அவ்வவ்வதிகாரம் சித்தியாதாப்போலே வைஷ்ணவ பாஷை பயிலாதபோது வைஷ்ணவ அதிகாரம்சித்தியாது.

## ஸ்வரூபம்.

7. *ஸ்வரூபமாவது யாது?* 56

ஆத்மஸ்வரூபம் பகவச்சேஷத்வம் என்னும் ஞானமாம்.

## சேஷத்வமாவது யாது ?

8. ஆத்மா ஈச்வரனுக்கு சந்தன புஷ்ப தாம்பூலாதி பதார்த்தங்களைப் போல இஷ்டப்படி உபயோகப்படுத்திக் கொள்ளக்கூடியதா யிருத்தலாம். உலகத்தில் ஒருவனுக்கு மற்றொருவன் சேஷமாயிருப்பது துக்கரூபமாக வன்றோ காண்கிறது. அதுபோல ஈச்வரனுக்கு ஆத்மா சேஷமானால் ஆத்மாவுக்குத் துக்கம் சம்பவிக்கவேண்டி வருமே அது ஸ்வரூபமாமோ ? 57

இங்கு பரப்ரம்மத்தின் தன்மையும் இவ்வுலகில் யஜமானரா யிருப்பார் தன்மையும் கூர்ந்து அறிதல் வேண்டும்.

| | |
|---|---|
| 1, ஈச்வரன் நித்யமான நிரதிசய ஆனந்தமயன், | உலகில் காணப்படும் யஜமானர்களோ நிலையில்லாததாய் அற்பமான ஆனந்தமுடையவர்கள். |
| 2, அவனே சுத்த சத்வகுணமுடையான், | இவர்களே முக்குணங்களுக்கு வசப்பட்டவர்கள். |
| 3, அவனே தன்னையடைந்தோர்க்குச் செய்யவேண்டும் சுக்ருதபரம்பரைகளை அறியக்கூடிய சர்வஜ்ஞன் | இவர்களோ பிறர் தன்மையும் அவர்களுக்கு வேண்டியவைகளும் அறிந்து கொள்ளக்கூடாத அஜ்ஞர்கள், |
| 4, அவனே தன்னடியார்களுக்கு வேண்டுமவைகளைச் செய்துகொடுக்கக்கூடிய சர்வசக்தன், | இவர்களோ அப்படி செய்தற்கு இயலாத அசக்தர்கள், |
| 5, அவனே ஸ்வதந்த்ரன், | இவர்களோ பரதந்த்ரர்கள், |
| 6, அவனே எதிலும் குறைவற்றவன். | இவர்களோ எதிலும் குறையுள்ளவர்கள், |

இப்படி ஈச்வரனுக்கும் இவ்வுலகத்து யஜமானர் களுக்கும் உள்ள தாரதம்யங்களை அறியாமல் குணமில்லா தார் கொள்கையோடு குணவான் செய்கையை ஒப்பிட்டுச் சொல்வது பொருந்தாது. இவ்வுலகத்தும் ஒருவர்க் கொருவர் இணங்கிப் பரிமாறுவதனாலே சுகமுண்டாவது இயல்பே. உத்தமனான புருஷனும் பதிவிரதையான பெண்ணும் கூடிப் பரிமாறுவதிலும் புத்திரனுக்கு நன்மை கள் செய்ய முயலும் தகப்பனும் சத்புத்திரனும் கூடிப் பரிமாறுவதிலும் உத்தமனான அரசனும் உத்தம சேவகனான பிரதானியும் ஒற்றுமைப்பட்டு கலந்து அன்போடு பரிமாறு மிடத்திலும் சுகம் உண்டாகுமே யல்லாது துக்கம் உண் டாகமாட்டாது. மனமொத்துக் கூடியிருக்கும் இருவரில் ஒருவரிடத்திலோ அல்லது இருவர் இடத்திலோ குணங் கெடுமாயின் அந்த மன ஒற்றுமைக்குப் பங்கம் உண்டாகு மன்றி குணங் கெடாதபோது அந்த மன ஒற்றுமை ஆனந்தமாகவே செல்லுமன்றோ? ஆக புருஷோத்தமனான ஈச்வரனும் அன்பனான ஆத்மாவும் இணங்கிப் பரிமாறு மிடத்தே சுகம் உண்டாகுமே யல்லாது துக்கம் என்பது உண்டாகமாட்டாது. ஆகையால் ஆத்மஸ்வரூபம் சேஷத்வம் என்பது திண்ணமாம்.

## நிரபேக்ஷை.

9. *நிரபேக்ஷையாவது யாது?* 58

பிறவிக்கு வித்தான அவாவற்றிருத்தலாம்.

10. *அவாவற்றிருப்ப தெவ்வாறு?* 59

புழுமலக்கூடாய் புண்ணான அழுக்குடம்பிலும் உடம் பின் சம்பந்தமான மனைவி மக்கள் முதலிய பதார்த்தங்

களிலும் ஆசையற்று கிடைத்தமட்டில் த்ருப்தியுடையனுய் கர்மாதீனமான தேகயாத்திரைக்கு கரையாமல் சேற்றில் பிள்ளைப்பூச்சி போலும் தாமரையில் தண்ணீர் போலும் தோலுக்குள் புளியம் பழம்போலும் சம்சாரத்தில் ஒட்டற்று வர்த்தித்தலாம்.

## நிகர்வம்.

11. *நிகர்வமாவது யாது?* 60

அகங்கார மற்றிருத்தலாம். பாகவதர்களைக்கண்டால் எதிர் சென்று அடியற்ற மரம்போல் கீழே விழுந்து சேவித்து அவரை உபசரித்து அநுவர்த்தித்து அவரபி மானம் பெற்று உஜ்ஜீவித்தல் ஸ்வரூபமாயிருக்க, குலத்தா லேயாதல் ஞானத்தாலேயாதல் ஆசாரத்தாலேயாதல் அசூயையாலேயாதல் தன்னை அவர்களுக்குச் சமமாக வேனும் மேலாகவேனும் புத்திபண்ணி இறுமாந்திருக்கச் செய்யும் அகங்காரமானது, தன்னை அடுத்ததொன்றைச் சுட்டெரித்து உருவழித்துக் கெடுத்துவிடும் நெருப்பைப் போல தன்னையடுத்த ஆத்மாவைக் கெடுத்து உருவழித்து அனர்த்தப்படுத்திவிடும். ஆகையால் வைஷ்ணவனுக்கு அகங்காரம் எவ்வாற்ருனும் ஆகாவாம்.

## ப்ரபந்தம்.

12. *பிரபந்தமாவது யாது?* 61

ஸம்ஸ்க்ருத வேதத்தினும் சிறந்த திவ்யப்பிரபந்த மென்னும் தமிழ்வேத பாராயணமாம். தமிழ்வேதம் ஓதி யுணர்ந்தவரே வைஷ்ணவராவார். ஓதாதார் வைஷ்ணவ

ராகார். இதனை 'வைஷ்ணவதீபிகை' முதற்பாகத்தில் ப்ரமாணத்துடன் விசதமாகக்கண்டுகொள்க.

தமிழ் வேதம் ஸம்ஸ்க்ருத வேதத்தினும் சிறந்ததாவது எவ்வாறு? தமிழ்வேதம் ஸம்ஸ்க்ருத வேதத்தினும் சிறந்த தென்பதனை நமது "திராவிட வேதவைபவப் பிரகாகிகை" யிலும், "வைஷ்ணவ தீபிகை முதல் பாகத்திலும்" காண்க.

### பக்தி.

13. *பக்தியாவது யாது?* 62

பக்தியாவது "மத்பக்த ஜன வாத்ஸல்யம் பூஜாயாஞ்சனுமோதனம் ஸ்வயம் அப்யர்ச்சனஞ்சைவ யதர்த்தே டம்பவர்ஜனம், மத்கதாச்ரவணே பக்தி ஸ்வரநேத்ர அங்க விக்கிரியா மமாநுஸ்மரணம் நித்யம் யச்சமாம் நோபஜீவதி" என்னும் பகவத் வசனப்படி பகவதடியார்களாய பாகவதர்களிடத்து வாத்ஸல்யமும், பகவதாராதனத்தில் உகப்பும் தானே யாராதித்தலும் பகவத்பாகவத விஷயங்களில் டம்பமற்றிருக்கையும், பகவத்கதையை சிரத்தையோடு கேட்டலும் பக்திகார்யமான கண்ணீர் சோரல் கத்கதத்வனி மயிர்க்குச் செறிந்து ஆடல், ஆகிய ஸ்வரநேத்ர அங்கவிகாரங்களும் பகவத் விக்ரக குணசேஷ்டிதங்களை இடைவிடாமல் நாள்தோறும் நினைத்தலும், பிரயோஜத்தைக் கோலாது அநந்யப்ரயோஜனராதலும், ஆகிய எட்டு விதமாம். ஒன்பது விதமாகக்கூறுவதும் உண்டு.

### தாஸ்யம்.

14. *தாஸ்யமாவது யாது?* 63

பகவத் பாகவத விஷயங்களில் மனம், வாக்கு காயங்களாகிய முக்கரணங்களாலும் வல்ல அளவு

செய்யப்படும் சேஷத்வ ஸ்வரூபத்தின் கார்யமான கைங்கர்யமாம்.

### பிறர் துக்கங்கண்டு சகியாமை வைஷ்ணவம்.

15. *நஞ்சீயர் அருளிச்செய்த வைஷ்ணவ லக்ஷணம் யாது?* 64

ஒருவன் துக்கப்படக்கண்டால் சகிக்கமாட்டாமல் 'ஐயோ' என்று அந்த துக்கம் தன்னதாக இருந்தானாகில் தனக்கு வைஷ்ணவம் உண்டு எனவும், படட்டும் என்று இரக்கம் அற்று இருந்தானாகில் தனக்கு வைஷ்ணவம் இல்லை யெனவும், தானே யறிந்து கொள்ளலாம் என்று, நஞ்சீயர் அருளிச் செய்தார். இதனால் வைஷ்ணவனுக்கு ஜீவகாருண்யம் அவசியம் வேண்டும். அஃதில்லாதவன் வைஷ்ணவ னல்லனென்று சொல்லப்பட்டது. எம்பார் பாம்பின் வாயில் கையிட்டு முள்வாங்கியது அறியற் பாலது.

### வைஷ்ணவம் கொக்கு, கோழி, உப்பு, உம்மைப்போலாம் என்பது.

16. *அனந்தாழ்வான் அருளிச்செய்த வைஷ்ணவ லக்ஷணங்கள் எவை?* 65

ஸ்ரீபராசரபட்டர் ஏவ வந்து, வைஷ்ணவம் எப்படி இருக்கும் என வினவிய வைஷ்ணவ ரொருவரை நோக்கி "கொக்கைப் போலும், கோழியைப் போலும், உப்பைப் போலும், உம்மைப் போலும் இருக்கும் வைஷ்ணவம்" என்று அனந்தாழ்வான் அருளிச்செய்தார். இதனால் 'கொக்கு' தனக்கு தாரகமான நீருள்ள இடங்களில் வசிக்குமாபோலே வைஷ்ணவன் தனக்கு தாரகமான

பகவத் பாகவத சந்நிதிகளுள்ள இடங்களில் வசித்தல் வேண்டும். அதுதனக்கு இன்பமான இடந்தேடிப் போதற்குச் சாதனமான இரண்டு சிறகுகளை உடைத்தா யிருக்குமாப் போலே இவன் பேரின்ப வீடு பெறுதற்குச் சாதனமான ஜ்ஞானம் அநுஷ்டானம் இரண்டையும் உடைத்தா யிருத்தல் வேண்டும். அது வெளுத்திருக்குமா போலே இவன் உள்ளும் புறம்பும் சுத்தஸ்வபாவனு யிருத்தல் வேண்டும். அது தன்வாய்க்கு அடங்காததை விட்டு அடங்கும் சாரமான இரையைக் கிரகித்து விழுங் குமா போலே இவன் பெரியார் பரக்க அருளிச் செய்யும் அர்த்தங்களில் அப்ரதானமான அம்சத்தை விட்டு ப்ரதானமாய் சாரமான அர்த்தங்களைக் கிரகித்து உள்ளே பதியும்படி வைத்தல் வேண்டும்.

கோழி, குப்பையைச் சீய்த்துச் சீய்த்து அசாரங்களைத் தள்ளி சாரமான மணிகளை கிரகிக்குமா போலே வைஷ்ண வன் பிறரிடமுள்ள குற்றங்களைத் தள்ளி குணங்களையே கிரகித்தல் வேண்டும்.

உப்பு, தான் உருமாறி அழிந்து பதார்தங்களுக்குச் சுவையைத் தருமாபோலே வைஷ்ணவன் தன்னை அழிய மாறியும் பரப்ரயோஜனனுயே யிருத்தல் வேண்டும் என்று கூறியவாறும். எம் பெருமானுர் தமக்குத் திருக்கோட்டியூர் நம்பி ஒருவருக்கும் சொல்ல வேண்டாம் என்று இரகசிய மாக உபதேசித்த மந்த்ரார்தத்தை குருவினுணையை மீறி நடந்தால் நரகத்துக்கு ஹேதுவாம் என்பது அறிந்தும், தமது அழிவைக் கருதாதே பரப்ரயோஜனத்தையே நோக்கி தூளிதானம் செய்தது அறிக.

17. *உம்மைப்போலிருக்கும் வைஷ்ணவம் என்று அந்தாழ்வான் கூறிய வரலாறு என்னே?* 66

அனந்தாழ்வான் 'வைஷ்ணவம் எப்படி யிருக்கும் எனக்கேட்ட அவ்வைஷ்ணவரை போனகம் புஜிக்கும் பொழுது முதல் திரையில் எல்லார்க்கும் முதலில் எழச் செய்ய, அவ்வைஷ்ணவர் தமது நைச்யம் தோற்ற முதல் திரையிலிருந்து புஜிக்கக் கூசி முகம் வாடி யிருத்தல் கண்டு, அவரை எழுப்பி நடுத்திரையில் வைக்க அவர் தம்மை அயோக்யராக எண்ணி, அத்திரையி லிருக்கவும் அஞ்சி வருந்தலும், பின்னர் அவரை அங்குநின்றெழுப்பிக் கடைத்திரையில் எல்லார்க்கும் கடைசியில் இருத்தலும் வைஷ்ணவத்திரளில் கடைப்படும் பேறு தமக்கு வாய்த்த பாக்யத்தை எண்ணி, அப்போது அலர்ந்த செத்தாமரைப் பூப்போல் முகமும் அகமும் மகிழ்ந்து புஜித்தனர். அது கண்டு 'உம்மைப் போலிருக்கும் வைஷ்ணவம்' என்று அருளிச் செய்தார். இதனுல் வைஷ்ணவன் வைஷ்ணவத் திரளில் முற்பாட்டுக்கு நாணி பிற்பாட்டைப் பேணி யிருத்தல் வேண்டும் என்ற தாயிற்று.

18. *ஞானமாவது யாது?* 67

ஞானமாவது அறிவு நூல்களைப் பெரியார் பக்கல் ஐயந்திரிபறக்கற்று விதி நிஷேதங்களை உணர்தலாம்.

19. *அநுஷ்டானமாவது யாது?* 68

கற்றுணர்ந்த வழியே விதியைத் தழுவி ஆசரித்து நிஷேதங்களைப் பிராமாதிகமாகவும் தன் பக்கல் அணுகாமல் அறவிட்டு ஒழுகுதலாம்.

**வைஷ்ணவன் தவிர வேண்டுவன இவை என்பது.**

20. *வைஷ்ணவன் அவசியம் தவிர வேண்டியவை எவை?* 69

செய்யத்தகாத காரியங்களைச் செய்தல்: பகவதபசாரம், பாகவதாபசாரம், அஸஹ்யாபசாரம் ஆகியவையாம்.

**செய்யத்தகாத காரியங்கள்.**

21. *செய்யத் தகாத காரியங்கள் எவை?* 70

பிறரை இம்சித்தல், பிறரைத்துதித்தல், பிறர் மனைவியரை இச்சித்தல், பிறர் பொருளைக் கவர்தல், பொய் சொல்லல், புசிக்கத்தகாதவற்றைப் புசித்தல், முதலியனவாம்.

**பரஹிம்ஸை.**

22. *பிறரை இம்சித்தலாவது யாது?* 71

தன்னையும் பகவத் பாகவத விரோதிகளையும் ஒழிந்த பிறருக்குச் செய்யும் இம்சையாம். இப்படிக்கூறுது தன்னையொழிந்தா ரெல்லாம் பிறர் எனக் கூறுமிடத்து சாஸ்திரங்களில் ஆகாது என நிஷேதித்துள்ள தன்னுடைய இம்சை தகுவதும் சாஸ்திரங்களில் இம்சிக்கும்படி விதித்துள்ள பகவத்பாகவத விரோதிகளுடைய இம்சை தகாததுமாகும். ஆகையால் தன்னையும் பகவத்பாகவத விரோதிகளையும் ஒழிந்த பிறருக்குச் செய்யும் இம்சை என்றே கொள்ள வேண்டும்.

**பரஸ்தோத்ரம்.**

23. *பிறரைத் துதித்தலாவது யாது?* 72

பிராப்தமான பகவத்பாகவத விஷயங்களைத் துதித்தற்குரிய வாக்கைக்கொண்டு அப்ராப்தமான பிற விஷயங்களைத் துதித்தலாம். இங்கும் பிறர் என்று தன்னை

யொழிந்த பிறரைக் கூறுமிடத்து சாஸ்திரங்களில் துதிக்கும்படி விதித்துள்ள பாகவத ஆசார்யர்களைத் துதித்தல் தகாததும் சாஸ்திரங்களில் ஆகாதென நிஷேதித்திருக்கிற தன்னைத் துதித்தல் தக்கதும் ஆகும். ஆகையால் பகவத் பாகவத ஆசாரியர்களை யொழிந்தவரையும் தன்னையும் பிறர் என்று கொள்ளல்வேண்டும்.

### பரதார பரிக்ரகம்.

24. *பிறர் மனைவியரை இச்சித்தலாவது என்னை ?* 73

மகாபாதகமாய் உலகப் பழிப்புக்கும் நரகத்துக்கும் ஹேதுவான பிறர்க்குரிய பெண்களை மோகத்தினாலே இச்சித்தலும் சேர்தலுமாம். பிறர்க்குரிய பெண்கள் என்றது, கன்னி விதவை வேசி தாசிகளுககும் உபலக்ஷணமாகும். "கன்னியரைப் பொன்னுண்கழிந்தோரை மற்றயலார் பன்னியரை மாயப் பரத்தையரை உன்னரியதாதியரை நல்லோர் தழுவ நினையார் நரகத்தீதுவருமென்றே தெரிந்து" என்றதறிக. (அனன்ய போக்யத்வ ஸ்வரூபத்துக்கு நாசமாம் என்று) சாஸ்த்ர விகிதமுமாய் உலகப் பழிப்பும் நரகஹேதுவும் அல்லாத தனதுமனைவியிடத்து தர்மபுத்தியாகச் செல்லுதற்கும் "அனன்ய போக்யத்வ ஸ்வரூபத்துக்கு நாசமாம்" என்று அஞ்சி அருவருத்திருக்கும் ப்ரபன்னனான வைஷ்ணவனுக்கு சாஸ்த்ர நிஷித்தமாய் உலகப்பழிப்பாய் நரகத்துக்கு ஹேதுவான பிறபெண்கள் விஷயத்தில் செல்லுதல் எங்ஙனம் கூடும்.

### பரத்ரவ்யாபகாரம்.

25. *பிறர் பொருளைக் கவர்தலாவது என்ன ?* 74

பிறருடைய பொருளை அவர்கள் இசைவின்றி அறிந்தாதல் அறியாமலாதல் கவர்தலாம்.

## அசத்ய கதனம்.

26. *பொய் சொல்லலாவது என்ன?* 75

கண்ணுற் காணுததும் பிராணி இதமல்லாததுமான வசனத்தைச் சொல்லுதலாம். கண்ணுற் கண்ட மெய்யாயினும் ஒரு பிராணிக்குக் கெடுதியை உண்டாக்குமாயின் அது சொல்லலாகாது. சொன்னுல் அது பொய்யின் பாற்படும்.

கண்ணுற் காணுததாயினும் ஒரு பிராணிக்கு நன்மையை உண்டாக்குமாயின் சொல்லலாம். சொன்னுல் அது மெய்யின்பாற்படும் "பொய்மையும் வாய்மையிடத்த புரை தீர்ந்த நன்மை பயக்குமெனின்" என்று திருக்குறள் கூறுமாறறிக.

## அபக்ஷ்ய பக்ஷணம்.

27. *புசிக்கத்தகாதவற்றை புசித்தலாவது என்ன?* 76

ஜாதி தோஷம், ஆச்ரய தோஷம், நிமித்த தோஷம் ஆகிய மூவகைக் குற்றங்கள் உள்ள பதார்த்தங்களைப் புசித்தலாம். புஜிக்கத் தகாத பதார்த்தங்கள் இன்னவை யென்பதும், முக்குற்றங்கள் இன்னவை யென்பதும், ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை முதல் பாகத்திற் காண்க. "ஆஹாரசுத்தாத் ஸத்வ ஸித்தி: ஸத்வாத் ஸம்ஜாயதே ஞானம் ஞானுன் மோக்ஷம்" சுத்தமான ஆஹாரத்தால் சத்வகுணமுண்டாம் சத்வகுணத்தால் ஞானமுண்டாம் ஞானத்தால் மோக்ஷமுண்டாம் என்னும் வசனப்படி மோக்ஷத்துக்கு முதலான ஞானத்துக்கு ஹேதுவான சத்துவகுணத்துக்குச் சாதனமான ஜாதி, ஆச்ரய நிமித்தம் என்னும் முக்குற்றங்களில்லாத சுத்தமான

அன்னத்தையே மோக்ஷாதிகாரியான வைஷ்ணவன் உண்ணல் வேண்டும்.

### பகவதபசாரம்.

28. *பகவதபசாரமாவது யாது ?* 77

ஈடும் எடுப்புமில்லாத லக்ஷ்மீகாந்தனுன நாராயணனே பிரமன் சிவன் முதலான தேவர்களோடு சமமாக நினைத்தலும், "ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம் யாத்மமாயயா" அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரகத்தை அதிஷ்டித்துக்கொண்டு, எனது இச்சையினுல் பிறக்கிறேன் என்னும் பகவத் கீதா வசனத்தின்படி, பிறப்பிலியான தான் தனது இச்சையினுலே லோக ரக்ஷணத்தின் பொருட்டு இதர ஜாதியில் அவதரித்த தறியாதே, அவதாரத்தில் மெய்ப்பாட்டுக்காக நடித்துக்காட்டிய, கர்ப்ப வாச சோக மோகாதிகளையிட்டு, கர்மவசியரான மனிதரோடு சமான ஜாதியன் என்று நினைத்தலும், தமருகந்ததொரு திரவியத்தை தனக்குத் திருமேனியாகக் கொண்டு அதில் அப்ராக்ருத விக்ரகத்தில் பண்ணும் ஆதரத்தைப் பண்ணி, எழுந்தருளியிருக்கும் ஏற்றத்தை யறியாதே இது இன்ன திரவியம் என்று, விக்ரக உபாதானத்தை நிரூபித்தலும், பகவத் சேஷமான ஆத்மாவில் ஸ்வதந்த்ர புத்தியும், அர்ச்சாவதார சன்னதி திரவியங்களை பிறரறிந்தாதல் அறியாமலாதல் தனக்காக்கிக் கொள்ளுதல், முதலியனவுமாம்.

### பாகவத அபசாரம்.

29. *பாகவத அபசாரமாவது யாது ?* 78

பிறர் உயர்த்திகண்டால் பொருமைக்கும் தன்னினும் உயர்ந்தார் இல்லையென்று தன்னைப் போரப் பொலிய

எண்ணும் புத்திக்கும் ஹேதுவான அகங்காரத்தாலும், காசாசையாலும் பாகவதர்கள் திறத்தில் பண்ணும் விரோதமாம். பகவத் விஷயத்தில் அபசாரப்பட்ட சிசுபாலன் உயர்ந்துபோனன். ஆசார்ய விஷயத்தில் அபசாரப்பட்ட நாலூரானும் வீடுபெற்ருன். பாகவத அபசாரப்பட்டார் கரையேறினரென்று எந்நூலிலும் கண்ட தில்லை. பாகவத அபசாரம் நந்தா நரகத்தில் கவிழ்த்து நாசமாக்கிவிடும். ஆகையால் எவ்வாற்ருனுங் கூடாது.

30. *பாகவத அபசாரம் எத்தனை வகைப்படும்?* 79

பாகவத அபசாரம் ஜன்மநிரூபணம் முதலிய 12. பாகவத அபசாரம் பலவகைப்படும். அவற்றுள் அவர்களது ஜன்மத்தை நிரூபித்தல் ஒன்றும் ஒப்பற்றதாகும். "அர்ச்சாவதாரோபாதானம் வைஷ்ணவோத்பத்தி சிந்தனம் மாத்ருயோனி பரீக்ஷா யாஸ் துல்ய மாஹுர் மனீஷிண:" அர்ச்சாவதாரத்தின் உபாதான த்ரவ்யத்தையும் ஒரு வைஷ்ணவனது பிறப்பையும் நிரூபித்தல் பத்துமாதம் சுமர்ந்து பெற்று வளர்த்த தாயினுடைய யோனியை பரீக்ஷை செய்தான் ஒருவனுக்கு எந்தபாவம் உண்டாகுமோ அந்த பாவத்தோடு ஒக்கும். என்று, சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டது. பாகவத அபசாரத்தினது கொடுமையை ஸ்ரீமத் பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த ஸ்ரீவசன பூஷண கிரந்தத்தில் 194 சூர்ணை தொடங்கி பரக்கக் காணலாம்.

## அஸஹ்யாபசாரம்.

31. *அஸஹ்யாப சாரமாவது யாது?* 80

ஒரு காரணமுமின்றி பிறர் உயர்த்தி காணவும் அவர் கீர்த்தி கேட்கவும் பொருது அவர் திறத்தில் செய்யும்

அபசாரமும் ஆசார்ய அபசாரமும் ஆசார்ய பக்தர் திறத்தில் பண்ணும் அபசாரமுமாகும்.

## ஆசார்ய அபசாரம்.

32. *ஆசார்ய அபசாரமாவது யாது?* 81

ஆசார்யன் பக்கல் கேட்டபடி ஒழுகாமையும் அவன் உபதேசித்த மந்த்ரத்தையும் அதன் அர்த்தத்தையும் அற்பப் பிரயோஜனத்தை நச்சி அதிகாரிகளல்லாதார்க்கு உபதேசித்தலுமாம்.

## ஆசார்ய பக்த அபசாரம்.

33. *ஆசார்ய பக்த அபசாரமாவது யாது?* 82

ஆசார்ய பக்தரான ஸப்ரம்மசாரிகளோடு ஒற்றுமைப் பட்டு ஆனந்தமாக வர்த்திக்க வேண்டியிருக்க, அது செய்யாதே அவர்கள் திறத்தில் பொருமைப் படுதலும் அவமதி செய்தலுமாம்.

## தளிகை செய்யும் முறை.

34. *ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை முதற்பாக ஒழுக்க இயலிற் கண்ட வைணவப் பெண்கள் தளிகை செய்யும் முறை யாது?* 83

தளிகை செய்யும் பெண்களாயினும் ஆண்களா யினும் அதிகாலையிலெழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு பல்விளக்கி பரிசுத்தராகி கிரமப்படி நீராடி சுத்தி செய்துள்ள பாத்திரங்களை சோதித்து வைத்துக்

கொண்டு பெண்களாயின் வைஷ்ணவக் கச்சமிட்டு மடியுடுத்தி, ஆண்களாயின் கௌபீனமும் மேலாடையும் உடுத்திக்கொண்டு, திருமண் காப்பணிந்து ஆசாரிய ஸ்ரீபாததீர்த்த முட்கொண்டு திருப்பல்லாண்டு முதலான திவ்யப் பிரபந்தானுசந்தானத்துடன் தளிகை செய்ய வேண்டும்.

### பாத்ர சுத்தி.

35. *பாத்ர சுத்தி செய்யும் முறையாது?* 84

எண்ணெய் நெய் பால் தயிர் முதலியவை அசுத்தி யாயின் எண்ணெய் முதலியவற்றுள் கொஞ்சம் வெளியில் தெளிப்பதனுலும் நெருப்பில் உஷ்ணப்படுத்துவதனுலும் சுத்தியாகும். பொன் வெள்ளி சங்கு மரம் பிரம்பு யானைத் தந்தம் எனும் இவற்றுல் செய்த பொருள்கட்கும் கிருஷ்ண ஜினம் முதலிய சர்மங்கட்கும் ஜலத்தால் செய்யும் சுத்தியே போதுமானது, தாம்பரம் பித்தளை இரும்பு ஈயம் வெண்கலம் இவைகட்கு திருத்துழாய் புளி கொண்டு நன்ருக சோதித்தல் வேண்டும். இவற்றுள் பசு மோந்ததும் சாமான்யர் உபயோகித்ததும் நாய் காகம் தீண்டியதுமான வெண்கலப் பாத்திரததை திருத்துழாய் மண் புளி கொண்டு பத்துமுறை துலக்கல் வெண்கலப் பாத்திரத்தில் ஜலம் கொண்டு காலலம்பல் கொப்பளித்தல் செய்ய லாகாது. அப்படி செய்ய நேர்ந்தால் ஆறுமாதம் பூமியிற் புதைத்து வைக்கவேண்டும். இலைக்கறி கறியமுது கிழங்கு பழம் முதலியவற்றை ஜலங்கொண்டு நன்ருக சோதிக்க வேண்டும்.

## ஏகாதசி விரதத்தை அநுஷ்டிக்கும் முறை.

36. *ஏகாதசி விரதத்தை அநுஷ்டிக்கும் முறையாது?* 85

பக்ஷந்தோறும் வரும் ஏகாதசியன்று புஜிக்கக் கூடாது. அன்று புஜிக்கும் ஒவ்வொரு கவளமும் பாவத்தையுண்டாக்கும். அது இழிபிறவியான நாய் முதலியவற்றின் மலத்தோடு ஒக்கும். கள் குடித்தவனுக்கும் பிராயச்சித்த முண்டு ஏகாதசியன்று புஜித்தவனுக்கு அதுவும் இல்லை.

பிதிர்கர்மங்களை விட்ட உத்தமாச்ரமிகளான சன்யாசிகளும் இவ்விரதத்தை விடலாகாது.

கிரமப்படி செய்யாது விட்டால் கோடி ஜன்னமம் சண்டாளராக்கும். சிரார்த்தமே அன்று வந்தாலும் ஏகாதசி வ்ரதத்தையே முக்கியமாகக் கொண்டு அச்சிரார்தத்தை மறுநாளாகிய துவாதசியிலே செய்தல் வேண்டும்.

ஏகாதசியன்று தசமி வேதையா யிருக்குமானல் த்வாதசியன்று ஏகாதசி வ்ரதமிருந்து மறுநாள் பாரணை செய்யவேண்டும் தசமிவேதையாவது தசமிதியன்று 55 நாழிகைக்குமேல் அத்திதியிருப்பது. ஆனல் பாலர்களும் வயது முதிர்ந்தோர்களும் நோயாளிகளும் இவ்விரதத்தை அநுஷ்டியா தொழிந்தால் குற்றமாகாது.

சிலர் நாங்கள் பிரபந்நர் ஏகாதசி வ்ரதம் எங்கட்கு வேண்டியதில்லை என்று வாய்பறையறைந்து தின்று "தான் கெட்ட பிரஷ்டை சந்த்ர புஷ்கரணியையும் கெடுத்தது" போல தாங்கள் கெடுவதோடு குற்றமிலாப்

பெரியோர்கள்பாலும் அக்குறையை ஏற்றித் திரிகின்றனர். பிரபன்னர்கள் ஏகாதசி வ்ரதத்தை காம்ய புத்தியோடு அநுஷ்டிக்கலாகாது. பகவத் ஆஜ்ஞா கைங்கரியமென்கிற புத்தியோடு அநுஷ்டிக்கவேண்டும்.

சக்தியில்லாதவர்கள் ஏகாதசியன்று பால் மோர் பழங்கள் அவிஸ்ஸு என்னும் இவைகள் உபயோகப் படுத்திக்கொள்ளலாம்.

அவிஸ்ஸாவது செந்நெல் அரிசியை உடைத்து கழுநீர் போக்காமலும் வடிநீர் மாருமலும் பாகம் செய்து ராஜஸ பதார்த்தங்களைக் கூட்டாமலே பகவதாராதனம் செய்து புஜித்தல் வேண்டும்.

துவாதசி பாரணையன்று பாசிப்பயறு வாழைக்காய் பாகற்காய் கருணைக்கிழங்கு சேப்பங்கிழங்கு அகத்திக் கீரை நெல்லிக்காய் சுண்டக்காய் முதலியவற்றை உப யோகித்தல் வேண்டும்.

துவரம்பருப்பு கத்தரிக்காய் முதலிய பதார்த்தங்களை உபயோகித்தல் அறவே கூடாது.

அமாவாசை சிரார்த்தம் முதலானவையும் பகவ தாக்ஞா கைங்கரியமாக அநுஷ்டிக்கப்பட வேண்டிய வையே. சிரார்த்த அமாவாசை தினங்களில் துவரம் பருப்பு கத்தரிக்காய் முதலியவை உபயோகப்படுத்திக் கொள்ளலாகாது. பயிற்றம்பருப்பு முதலியவையே உப யோகப்படுத்திக்கொள்ளல் வேண்டும். சிரார்த்தம் அமா வாசை தர்ப்பணம் முதலியன பிறமதஸ்தரைக் கொண்டு செய்வித்துக் கொள்ளலாகாது.

ஆழ்வார்கள் ஆசாரியர்கள் திருநக்ஷத்திரங்கள் தப்பாது பரிபாலனம் செய்து வருதல் வேண்டும்.

*5-வது ஸ்ரீ வைஷ்ணவ இயல் முற்றுப்பெற்றது.*

ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை இரண்டாம் பாகம் முற்றும்.

*ஆக 36 வினவிடைகள். மொத்தம் 85.*

---

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்
திருவடிகளே சரணம்,

---

ஸ்ரீ:

இந்நூலாசிரியராகிய,

புவனகிரி,

## ஸ்ரீமத். அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

அருளிச்செய்த நூல்கள்.

| | | பதிப்பு ஞூ |
|---|---|---|
| 1. | தில்லை திருச்சித்ர கூடப்பதிற்றுப் பத்தந்தாதி. | 1896 |
| 2. | திருமுட்ட புராணச் சுருக்கம் வசனம். | |
| 3. | திராவிட வேத வைபவப் பிரிகாசிகை. | 1907 |
| 4. | நாலாயிரப் பிரபந்த விசார ஆபாசதர்ப்பணம். | 1908 |
| 5. | திருச்சித்ரகூட மான்மியம் வசனம் 2 பதிப்பு. | |
| 6. | கல்லை கோவிந்தராஜன் திருப்பதிகம். | 1909 |
| 7. | திருக்கோவலூர் ஆயனுர் திருமாலை. | 1909 |
| 8. | திருமுட்ட பதிற்றுப்பத்தந்தாதி. | 1910 |
| 9. | திருப்பதிக மஞ்சரி. | 1914 |
| 10. | தில்லை இதழகலந்தாதி. | 1918 |
| 11. | கோலாசலத்திருவராகன் திருப்பதிகம். | 1922 |
| 12. | செஞ்சி சிங்கபுரப்பதிகம். | 1927 |
| 13. | அர்த்த பஞ்சகஸாராம்ருதம். | 1913 |
| 14. | இராமாநுஜ நான்மணிமாலை. | 1923 |
| 15. | ஸ்ரீ பட்டாபிராமன் பதிகம். | 1925 |
| 16. | திருச்சித்ரகூடக் கலம்பகம். | |
| 17. | பூங்கோவல் தாயார் திருப்பதிகம். | 1919 |
| 18. | தத்வத்ரய வ்யாக்யான தாத்பர்ய தீபிகா விசார உபன்யாஸச் சுருக்கம். | |
| 19. | சமாச்ரயணம் சர்வாதிகாரமென்னும் உபன்யாஸ விஜய சக்ரம். | 1921 |
| 20. | ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை முதற்பாகம். | 1923 |
| 21. | ஸ்ரீ வைஷ்ணவ தீபிகை முதற்பாகம். இரண்டாம் பாகம். | 1968 |

---

A

ஸ்ரீ:

ஸ்ரீ வைஷ்ணவர்கள்

கொண்டாடவேண்டிய

# திரு நக்ஷத்திரங்கள்.

## சித்திரை மாதம்.

புனர்ப்பூசம்—சக்ரவர்த்தித்திருமகன், முதலியாண்டான்.
ரேவதி—பெரிய பெருமாள்.
அஸ்தம்—தேவப்பெருமாள்.
சித்திரை—மதுரகவியாழ்வார், அனந்தாழ்வான்.
கிருத்திகை—உய்யக்கொண்டார்.
திருவாதிரை—எம்பெருமானுர், முடிச்சூர் அப்பாவாரியர்.
அஸ்வனி—வடுக நம்பி.

## வைகாசி மாதம்.

சுவாதி—அழகியசிங்கர், திருமலை நம்பி.
விசாகம்—நம்மாழ்வார், திருவாய்மொழிப்பிள்ளை பிள்ளை, திருமலைநம்பி.
ரோகணி—திருக்கோட்டியூர் நம்பி.
அநுஷம்—பெரியபட்டர், கோயிற் கந்தாடையண்ணன், ஸ்ரீராமப் பிள்ளை.

## ஆனி மாதம்.

சுவாதி—பெரியாழ்வார், வடக்குத்திருவீதிப்பிள்ளை.
அநுஷம்—ஸ்ரீமந்நாதமுனிகள்.
ஆயில்யம்—மாறநேர் நம்பி.

## ஆடி மாதம்.

அஸ்தம்—பதரிநாராயணப்பெருமாள்.
பூரம்—எதுகிரி நாச்சியார், சூடிக்கொடுத்த நாச்சியார், கந்தாடை தோழப்பர்.

திருவாதிரை—புவனகிரி, ஸ்ரீமத் அழகியமணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்.

உத்திராடம்—ஸ்ரீ ஆளவந்தார், புண்டரீகாக்ஷர்.

திருவோணம்—தெற்காழ்வார்.

பூசம்—பிரதிவாதி பயங்கர அண்ணன்.

## ஆவணி மாதம்.

ரோகணி—ஸ்ரீ கண்ணன், பெரியவாச்சான் பிள்ளை, நைநாராச்சான் பிள்ளை.

## புரட்டாசி மாதம்.

மிருகசீரிஷம்—திருக்குருகைப்பிரான் பிள்ளான், பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர்.

திருவோணம்—திருவேங்கடமுடையான். வேதாந்தாசாரியர், பொய்கையாழ்வார், பிள்ளை லோகாசாரியர், மஞ்சகுப்பம், ஸ்ரீமத். கோவிந்தராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்.

பூராடம்—சேனை முதலியார்.

ரேவதி—கீரப்பாளையம், கோ. சுந்தரராமாநுஜ ஸ்வாமிகள்.

## ஐப்பசி மாதம்.

அவிட்டம்—பூதத்தாழ்வார், திருமலையாண்டான், நடுவில் திருவீதிபட்டர்.

சதயம்—பேயாழ்வார், பின் பழகிய பெருமான் ஜீயர்.

மூலம்—ஸ்ரீமத். மணவாளமாமுனிகள்.

உத்திரட்டாதி—விளாஞ்சோலைப் பிள்ளை.

ரேவதி—இரும்பிலியப்பா.

## கார்த்திகை மாதம்.

ரோகணி—திருப்பாணாழ்வார்.

கிருத்திகை—திருமங்கையாழ்வார், நம்பிள்ளை.

பரணி—அருளாளப்பெருமா ளேம்பெருமானார், ஈயுண்ணி மாதவப்பெருமாள்.

## மார்கழி மாதம்.

கேட்டை—பெரியநம்பி, தொண்டரடிப்பொடியாழ்வார்
அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்,
நாலூராச்சான் பிள்ளை.

## தை மாதம்.

மகம்—திருமழிசையாழ்வார்.
அஸ்தம்—கூரத்தாழ்வார்.
புனர்ப்பூசம்—எம்பார்.
பூசம்—சூளை, ஸ்ரீமத். அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி
ஸ்வாமிகள்.
விசாகம்—குருகைக்காவலப்பன்.
திருவாதிரை—கூரகுலோத்தமதாஸர்.
மிருகசீரிஷம்—திருக்கோவலூர் எம்பெருமானார் ஜீயர்.
பூரட்டாதி—சொட்டைநம்பி, நாலூரான்.

## மாசி மாதம்.

புனர்ப்பூசம்—குலசேகராழ்வார், கந்தாடையாண்டான்.
மகம்—மணக்கால் நம்பி.
மிருகசீரிஷம்—திருக்கச்சி நம்பி.
ஆயில்யம்—பிள்ளையுறங்காவில்லி தாஸர்.
அஸ்வனி—சிறிய கோவிந்தப்பெருமாள்.

## பங்குனி மாதம்.

ரோகணி—நம்பெருமாள்.
அஸ்தம்—திருநாராயணப்பெருமாள், திருவரங்கத்தமுதனார்.
பூசம்—செல்வப்பிள்ளை.
உத்திரம்—ஸ்ரீரங்கநாசசியார், நஞ்ஜீயர்.
கேட்டை—புதுவை, ஸ்ரீமத். இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள்.

---

ஸ்ரீ:

புவனகிரி

# ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

## தனியன்

ஸ்ரீவேங்கடார்ய க்ருபயா ஸ்வதிலப்த போதம்
ஸ்ரீவான சைல முநிவர்ய பதாப்ஜ ப்ருங்கம்
ஸ்ரீமத்ரமேச பதபங்கஜ ஸக்தசித்தம்
ஜாமாத்ரு ரம்யகுரும் ஸததம் நமாமி.

## வாழித்திருநாமம்

1. ஆரணம் பரசுமொரு நாரணன் றன்னருள்
அமைந்த மேலோன் வாழியே
அகிலமறை மெய்ப்பொருளை யந்தமிழ்செய்
சடகோப னருளமைந்தோன் வாழியே
சீரணவு பூதபுரி யெதிராசனடி மலர்கள்
சேவை செய்வோன் வாழியே
திகழ்பிள்ளை லோகாரியன்கழற் ருமரைகள்
சிந்தை யுடையோன் வாழியே
பாரணவு மெய்ப்புகழ்ப் பரஞான வரயோகி
பண்புரைப்போன் வாழியே
பன்னரிய வரமங்கை சடகோப மாமுனி
பதம்புனைந்தோன் வாழியே
ஆரணவு சீரமர வாதிரு வேங்கடா
சார்ய ரருளோன் வாழியே
அழகியநல் மணவாள மாமுநி யருட்குருவின்
அடிமலர்த்துணை வாழியே.

2. சூடியசீர் எதிபதிதாள்
தொழு தெழுவோன் வாழியே
சொற் பெறும் மனுப் பொருளைத்
தொகுத்துரைப்போன் வாழியே
தேடி யெம்மனோர்க் கிதத்தைச்
செப்புமவன் வாழியே
செகத்தில் விசிஷ்டாத் வைதம்
செழிக்க வந்தோன் வாழியே
நாடிய ராமாநுஜநா
வலனருளோன் வாழியே
நாவீறன் மறைப் பொருளை
நயந்துரைப் போன்வாழியே
ஆடிமதி யாதிரை நாள்
அவதரித்தான் வாழியே
அழகிய மாமணவாளன்
அடியிணைகள் வாழியே.

3. ஆடிமதி யாதிரையில்
அவதரித்தான் வாழியே
அரிந்தமன்ற னடிப்பத்தி
யார்ந்த செல்வன் வாழியே
தேடருஞ்சீர்த் தமிழ்மறையின்
பொருள் தெரிப்போன் வாழியே
திகழீ ரொன்பான் கலையின்
திறமறிந்தோன் வாழியே
நாடுசீர்த் துறவறத்தை
நண்ணி நின்றோன் வாழியே
நல்லருத்த பஞ்சகநூல்
நவின்றபிரான் வாழியே

ஈடில்சீர்ப் புவனகிரி
யினிலுதித்தோன் வாழியே
எழில்கொள் மணவாளமுநி
யிணையடிகள் வாழியே.

நாட்பாட்டு

4. ஓங்கு பெரும்புகழ் வைணவ தரிசன
முலகத் தொளிர்வுறு நாள்
உத்தமராமாழ் வார்கள் தமிழ்மறை
ஒப்பின்றுலவிடு நாள்
நீங்கலில் வைபவ முறுமெதிபதி சீர்
நிலமிசை வளர்வுறு நாள்
நின்மல வுலகாரியன்வர வரமுனி
நீள்கலை நிலவுறு நாள்
பாங்கில் பிறசமயப் பல பூண்டுகள்
பாழ்பட்டழிவுறு நாள்
பத்தியுடன் வைராக்கிய மாம்பயிர்
பண்பொடு திகழ்தருநாள்
தீங்கறு மழகிய மணவாளக்குரு
திறல்முநி வந்திடுநாள்
தெண்டிரை கடல்சூழ் செகமதிலாடித்
திருவாதிரை நாளே.

5. நாராயணனே பரனெனு நற்பொருள்
நானிலத் தோங்கிடு நாள்
நம்மாழ்வா ரெதிபதிவர யோகியர்
நலமதுவளர் வுறுநாள்
சீரார் தமிழ்மறையின் வைபவமது
திகழ்வுற் றெழுதருநாள்

செறிபுகழ் விசிஷ்டாத் வைதான்னெறியது
செகதலத் தெழிலுறுநாள்
கூரார்தீமைகள் செறிதரு கலியின்
கொடுமையழிந்திடு நாள்
கோதில் சொரூபமெய்ஞ் ஞான வைராக்யங்
குலவித்தழைத்திடு நாள்
ஆராவன் பழகிய மணவாள நல்
லாரியர் வந்திடு நாள்
அறிஞர்கள் பரவிடு மாடி மதித்திரு
வாதிரை யெனு நாளே.

ஸ்ரீமத் ஸௌம்யஜாமாத்ர பரம தயாகுரவே நம:

---

திருவரசு



ஸ்ரீ பெரும்பூதூரில் உத்திராதி மடாதிபதி நந்தவனத்தில்
திருவரசு செய்யப்பட்டுள்ள
புவனகிரி
ஸ்ரீமதித்யாதி அழகிய மணவாள ராமாநுஜ
ஏகாங்கி ஸ்வாமிகள்.



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதித்யாதி புவனகிரி

# அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

திருவவதாரம்.
ரௌத்ரிஞ ஆடிமீ 4உ
7—7—1860.

தீர்த்தம்,
பிரபவஞ வைகாசிமீ 28உ
10—6—1927.

## இவர் செய்தருளிய க்ரந்தங்கள்

1. (வசனம்) திராவிட வேத வைபவ ப்ரகாசிகை.
2. ,, நாலாயிரப் பிரபந்த விசார ஆபாச தர்ப்பணம்,
3. ,, அர்த்தபஞ்சக ஸாராம்ருதம்.
4. ,, ஸ்ரீ வைஷ்ணவ விஞவிடை.

1. (செய்யுள்) ஸ்ரீ வசன பூஷண மாலை.
2. ,, இராமாநுச நான்மணி மாலை.
3. ,, பதிக மஞ்சரி முதலியன.

---

இது கல்வெட்டு மண்டபம் (ஸ்ரீபெரும்பூதூர்)
8–9–1968-ல் K. N. ரங்கராஜுலு போட்டோ எடுத்தார்.

இது ஸ்வாமி திருவரசு.

ஸ்ரீ:

ஸ்ரீமங்நிகமாந்த மஹா தேசிகாய நம:

திருவயித்தை, திருத்தண்கா, துறையூர், சென்னை முதலிய இடங்களில் ஸ்ரீ தேசிகனுக்கு 2—10—'68ல், ஏழாவது நூற்றுண்டு விழா கொண்டாடுவதால், அந்நினைவுச் சின்னமாக, அடியேன் வெளியிடும் சிறந்த

**கட்டுரை.**

# "தேசிகன் அருளிய திருமண் வைபவம்."

**குறள்.**

எத்திருமண் வைபவத்தி லேற்றதருள் தேசிகனே !
அத்திருமண் எங்கட்கு மாம்.

நம் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில், பழய எந்த ஆசார்ய புருஷர்களும், திருமண் வைபவத்தைப்பற்றி தனி நூல் செய்து உதவினுரில்லை. அவ்வுதவி செய்த பெருமை நம் வேதாந்த தேசிகர் ஒருவருக்கே உள்ளது. ஸ்ரீ வைஷ்ணவர்கள் வேதகாலம் சங்ககாலம் முற்பட்டே திருமால் வழிபாடுடையராய், அவனது சின்ன (அடையாள)மான சங்கு சக்ரங்கள் தரிப்பதோடு, அவனது திருவடி திருவுருவத்தையும் திருமண்ணுல் தரித்து வருகிருர்கள். இக்கருத்து வேதத்தில் இருப்பதோடு, ஸ்ரீ வைஷ்ணவத்துக்குரிய பாஞ்சராத்ர ஸம்ஹிதையிலேயும், புராணங்களிலேயும், விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அதனைச் சார்ந்த தமிழ் நூல்களின் வழக்கை

யொட்டி ஆழ்வார்களும் அருளியுள்ளார்கள். இக் கொள்கை அநுஷ்டானத்தில் ஒரே விதமாக முன்னூறு ஆண்டுகட்கு முன்புவரை இருந்து வந்தது. எழுநூறு ஆண்டுகட்கு முன்பு ஸ்ரீ வைஷ்ணவர்கள் செய்த தவப் பயனால், திருப்பதி கண்டாம்சராய் திருவவதரித்த நம் நிகமாந்த மஹாகுரு திருமண் வைபவத்தைப் பற்றி, "ஸச் சரித்ர ரக்ஷா" என்ற நூலில் இரண்டாவது அதிகாரமான "ஊர்த்வபுண்ட்ரதாரணாதிகாரோ" என்ற பகுதியில், 42 நூல்களிலிருந்து 280 ப்ரமாணங்கள் காட்டி, விரிவாக விளக்கியிருக்கின்றார்.

ஸ்வாமி காலத்தில் புண்ட்ர விஷயமாய் வாதிட்ட வர்கள், அன்றிருந்த குறுக்கு புண்ட்ரதாரிகளும், அச்சித்ர புண்ட்ரதாரிகளும் ஆவர். அதாவது, விபூதி இட்டுக் கொள்பவரும் கோபீசந்தனம் இட்டுக்கொள்பவரும். மேலும், புண்ட்ரமாக இடுகின்ற பொருள் பஸ்மமா? சந்தனமா? மண்ணா? என்ற கருத்து வேறுபாடும் உடை யார். இவர்களது ஐயம்போக்கி பல பிரமாணங்களால் "மேல் நோக்கு புண்ட்ரமே தரித்தல்வேண்டும். அதுவும் வெள்ளைத் திருமண்ணாக இருக்கவேண்டும், அதன் வடிவம் திருமாலின் திருவடிகளைப் போன்றிருக்கவேண்டும்." என்று பலவகையில் பெருக உரைத்துள்ளார். அதாவது:- "ஹரே: பாதாக்ருதி மாத்மநோ ஹிதாய மத்யேச்சித்ர மூர்த்வபுண்ட்ரம் யோதாரயதி ஸபரஸ்ய ப்ரியோ பவதி ஸபுண்யவான் பவதி ஸமுக்திமான் பவதி" "எவன் பகவானுடைய திருவடியின் ஆகாரம் போன்றதாயும், நடுவில் இடைவெளியுடையதாயும், இருக்கின்ற ஊர்த்வ புண்ட்ரத்தைத் தனக்கு நன்மை யுண்டாவதற்காகத் தரிக் கிறானோ அவன் பகவானுக்கு ப்ரியனாகிறான். புண்யத்

ஹதச் செய்தவனுகிறுன். மோக்ஷத்தை யடைந்தவனு கிறுன்.'' என்று, அதர்வணவேத ப்ரமாணத்தைக் காட்டினுர்.

இந்த ப்ரமாணத்தில் "ஹரே: பாதாக்ருதி'' என்ற வாக்யம் "பகவானுடைய பாதம் போன்ற'' என்ற அர்த் தத்தில் ஒருமையாயிருத்தலின் "ஒரு திருவடி ஆகாரம் போன்று இடவேண்டும்'' என்ற புதிய கருத்து நூற்றைம் பது ஆண்டுகட்கு முன்புதான் தோற்றுவித்தார்கள். அது சுயநல காரணத்தால் புண்ட்ரபேதம் விளைந்து அதன் காரணமாகவே சந்நதிகளைக் கைப்பற்றச் செய்த முயற்சி யால் இந்து கோவில்களுக்கு முஸ்லிம்களால் நேர்ந்த கொடு மையினும் மிகுதியாக அர்ச்சாமூர்த்திகளை அக்ரமம் செய் தார்கள். சில சந்நதிகளை தம்வசமாக்கிக்கொண்டார்கள். சில சந்நதிகள் இன்றளவும் போராட்டத்தில் இருக்கின்றது. போர் மூளத்தோன்றிய இப்புண்ட்ரம் எந்தவித சம்பந்தமு மில்லாத பார்ப்பனால்லாத மக்களிடமும் பரப்பப்பட்டது. அத்தீமை எல்லா மக்களிடத்தும் பரவி கோயில் உரிமை உடையார் அடையவேண்டிய நன்மை தீமைகளில் வேறு இனத்தவரும் பங்குகொண்டார்கள். இது வல்லவன் சூழ்ச்சி. தமிழ் நாட்டில் ஆழ்வார்கள் ஸம்ப்ரதாயத்தைச் சார்ந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள அனைவரும் பகவானுடைய இரண்டு திருவடிகளின் உருவம்போல் வெள்ளை மண் ணால் மேல் நோக்கு புண்ட் ம் அணிந்துகொள்ள வேண்டுமென்ற சித்தாந்தமும் அநுஷ்டானமும் உள்ளது. அதனைச் சார்ந்தவரே நம் ஸ்ரீமத் வேதாந்த தேசிகனும், அவர் காலத்தில் இருந்த குறுக்கு புண்ட்ரம் அச்சித்ர புண்ட்ரம்போன்று, ஏகபாதாக்ருதி புண்ட்ரம் த்விபாதாக்ருதி புண்ட்ரம் என்ற புண்ட்ரபேதம் இன்றுள்

ளதுபோன்று அன்று இருந்திருந்தால், சாஸ்த்ர சித்தமான ஒன்றிற்குப்ரமாணம் காட்டி த்விபாதாக்ருதி புண்ட்ரத்தை நிர்வஹித்திருப்பர். ஆயினும் ப்ரஹ்மராத்ரஸம்ஹிதையி லிருந்து " தமேகீ க்ருத்ய தர்ஜன்யா ஸ்ம்ருத்வாமம பதத் வயம்—விஷ்ணோர் முகேந மந்த்ரேண மந்த்ரயித்வா யதா க்ரமம்." "விஷ்ணோர் முகேந" என்ற மந்த்ரத்தினுலும், திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தினுலும், த்யானித்து ஆள்காட்டி விரலினுல் (திருமண்ணை) ஒன்று சேர்த்துக் குழைத்து, என்னுடைய இரண்டு திருவடிகளையும் த்யானித்து (என் னுடைய இரண்டு திருவடிகள் போன்ற வடிவத்தில் திரு மண் அணிதல்வேண்டும்.) என்பதை எடுத்துக்காட்டினுர். இதனுல் இரண்டு திருவடிபோன்ற வடிவமே தேசிகனுல் நிச்சயிக்கப்பட்டது.

மற்றும், வேதவாக்யங்கள் ஏகவசனமாக வருகின்ற இடங்களில் அதன் உரையாசிரியர்கள் பகுவசனமாகவே பொருள் செய்கின்ருர்களாம். நம் தமிழ் நூல்களில் தலை சிறந்த நம் திருவாய்மொழிக்குப் பூர்வபாகமான திருக் குறளிலே 'நற்ருள்' என்ற விடத்தும் 'மாணடி' என்ற விடத்தும் 'தாளை' என்ற விடத்தும் பரிமேலழகர் பன்மை யாகவே பொருள் விளக்குகின்ருர். மேலும் தமிழ் வேத மான திருவாய்மொழியில் "துயரறு சுடரடி" என்ற விடத்தும், ஆருயிரப்படி, ஒன்பதினுயிரப்படி, இருபத்தி நாலாயிரப்படி, ஈடு முப்பத்தாருயிரப்படி வ்யாக்யானங் களிலே ,அடி' என்பதற்கு 'திருவடிகள்' என்றே பொருள் விளக்குகினருர்கள். இக் கருத்தை மேற்கொண்டே " த்ரமிடோபனிஷத்தாத்பர்ய ரத்னுவளி"யில் "பதத் வாத்" என்று இரண்டு திருவடிகளையே வேதாந்த தேசி கனும் குறிப்பிடுகின்ருர். ஆதலின், பகவானுடைய திரு

வடிகளைக் குறிக்கின்ற சொல் ஒருமையாயினும் இரண்டு திருவடிகள் என்றே பன்மையாகப் பொருள் கொள்ள வேண்டும் என்று போதருகின்றது. இக் கருத்தைக் கொண்டே "ஸ்ரீரங்கநாத பாதுகா ஸஹஸ்ரத்தில் "த்வந்த பத்ததி" என்றே பெயரமைத்து திருவடிகள் இரண்டென்றே நிச்சயித்து இருபது ஸ்லோகங்களால் இரண்டு திருவடிகளின் பெருமையை வர்ணிக்கின்றார். வேண்டுமென்றே அதனை அடுத்துவைத்துள்ள "ஸந்நிவேசபத்ததியில்" "பரச்ய பும்சப்பத ஸந்நிவேசான் ப்ரயுஞ்ஜதே பாவித பஞ்சராத்ரா: அகப்ரதீபா னபதிச்ய புண்ட்ரான் அங்கேஷு ரங்கேசய பாதுகேத்வாம்." "பாபங்களெல்லாம் நீங்கும்பொருட்டு பெருமாளுடைய திருவடிகளைப் போல் திருமண் இடுகிற தென்று சாக்கிட்டு, உடம்பெல்லாம் உன்னைத் தரித்துக்கொள்ளுகிறார்கள்." என்ற இவ்விடத்தில் பன்மையாகவே பொருள் படுத்தி விளக்க வேண்டியுள்ளது. ஆதலின் தேசிகன் சித்தாந்தம் "சித்ரோர்த்வ பாதத்வயாகார புண்ட்ரம்" (இடைவெளியுடைய இரண்டு திருவடிகள் வடிவு போன்ற மேல் நோக்கு புண்ட்ரம்) என்பது தெற்றென விளங்குகின்றது. இதற்கு ஆதாரமாக ஆழ்வார்கள் பாசுரங்களில் பல இடத்தும் இக்கருத்துவிளங்குகின்றது. ஒன்றுகாண்போம். திருவாய்மொழி "நெற்றியுள் நின்று என்னையாளும் நிரைமலர்ப் பாதங்கள் சூடி" 1--9—10 என்றதில் 'நெற்றியுள் நின்று' என்பதால் திருமண்தான் சொல்லப்படுகிறது. 'பாதங்கள்' என்கையால், பாதத்வயாகாரம் சொல்லப்படுகிறது. 'நிரைமலர்' என்கையால் இரண்டு திருவடிகட்கு கீழே தாமரைப் பூப்போன்ற உருவமுள்ள பாதம் சொல்லப்படுகிறது. ஆதலின் "தண்டாமரை சுமக்கும்

பாதப் பெருமான்'' 4—5—8 என்றதற்கு ஏற்ப இரண்டு திருவடி ஆகாரத்தோடு திருவடிகளுக்குக் கீழே ஆசன மாய்த் தாமரைப்பூ வடிவுதாங்க, பிராட்டியோடு கூடிய திருமண்தான் நம் முன்னேயோர் அணிந்து வந்ததும், சாஸ்த்ரங்கள் விதித்ததும், ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளி சித்தாந்தம் செய்ததுமாகும். என்று ஐயமறத் தெளிந்து மகிழலாம்.

பதினாறுவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்த தமிழ் வடமொழி சாஸ்த்ர நூல்களில் பெரும்புலமை யுடைய 'அரிதாஸர்' என்ற பெரியார் இயற்றிய "இரு சமய விளக்கம்'' என்ற சிறந்த சித்தாந்த நூலில் உத்தரகாண்டம் வேத வேதாந்த விதிப்படலம் இரண்டா வது திருமண்காப்பு என்கிற ஊர்த்வ புண்ட்ர பரிச்சேதம் நாலாம் பாட்டில்,

*சீதரனார் இணையடியின் சீர்மைபெற*
*இடைவெளியும் திருத்தமாக*
*மீதுயர் புண்டரமணிவார் அந்நெடுமால்*
*திருவுள்ளம் விரும்பப் பெற்று*
*பாதகமெலாந் தொலைத்துப் பரமபதத்து*
*ஆனந்தம் பயில்வா ரென்று*
*மாதுநல்லாய் வேதாந்தம் எண்ணான்கின்*
*உரைத்த சடவல்லி சொல்லும்.*

என்றும்,

*விமல நாளமுபைநி விகஸித பத்மம்பு*
*பைந ஸ்ரீஹரி திவ்ய பதயுகம்பு*
*ஆவிதம் பங்குலம் பகுநவி யொக்கொக்க*
*யாமத்ய வெடல்பு ரெண்டங்குலாலு*

*அந்தந வேணு பத்ராக்ருதி ஸ்ரீசூர்ண*
*நொஸட ஸ்ரீதோகூட ஹரிவவிஞ்சு*
*முக்குமூடவ பாகமுநநுண்டி கேசால*
*வரகுதிருமணி காபு வைகரமுக.*

*இட்லு புண்ட்ரம்பு முகமந்து இடிநவாரு*
*பஞ்சமுண்டைந ஸ்ரீஹரி பதமு ஜெந்து*
*கலகடஞ்சுநு நிஜசாஸ்த்ர கநுலநகிரி*
*லலித சுபசர்ய வேங்கட லக்ஷ்மணார்ய.*

என்றும் கூறுவதனைக்காண்க. இன்ன பிறவற்றால் ஸ்வாமிதேசிகன் ஸ்ரீ வைஷ்ணவத்துக்குச் செய்த பேருபகாரத்தால் ஸ்வாமியின் எழுநூருவது நூற்றாண்டு விழாவை கீலகஞ்ல புரட்டாசிமீ 16வ புதன்கிழமை (2—10—1968 நாம் கொண்டாடிப் பேரானந்தப் பெரு வெள்ளத்தில் திளைக்கின்ரேம்.

*ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகன் திருவடிகளே சரணம்.*

இங்ஙனம்,
சரமாவதி தாசன்,
**K. நாராயண ரெட்டி,**
மாளிகை மேடு.
(Via) பண்ணுருட்டி, S. A. Dt.

ஸ்ரீ:

புவனகிரி,

ஸ்ரீமத். அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

இயற்றி

1907-ம் வருஷம் பதிப்பித்த

# "திராவிடவேத வைபவப் பிரகாசிகை"

என்னும், நூலின் சாரம்.

---

வைஷ்ணவ சமய த்வேஷங்கொண்ட ஒருவர் "திராவிடப் பிரகாசிகை" என்ற பெயரால் ஒரு புத்தகம் எழுதி வைணவ சமயத்தைப் பல படியில் நிந்தித்துள்ளார். அவரைத் திருத்துவான் வேண்டியும், அந்நூலைக் கண்ணுறும் போதிய ஆராய்ச்சி அறிவு இல்லாத மக்கள் மயங்கா வண்ணமும், நம் ஸ்வாமிகள் "திராவிட வேத வைபவப் பிரகாசிகை" என்ற நூல் எழுதி வெளியிட்டு தெளிவு பெறச் செய்துள்ளார். அந்நூல் கிடைப்பதும் அருமை. மறுபதிப்பு செய்வது அவசியம். அந்நூலின் பெருமை நன்மை தெரிந்துகொள்ளும் அளவுக்கு அந் நூலின் ஸாரமாக அந்நூலிலே முன்னேயுள்ள "விஜ்ஞாபனம்" என்றதில் ஒரு பகுதி இங்கே தருகின்றேன்.

"அடியேன், பாகவதோத்தமர்களின் நியமனம் பெற்று வெளியிட்ட இந்நூலில், கீர்வாண வேதம், பூர்வோத்தர பாகமாயிருப்பது போலத் தமிழ் வேதமும் பூர்வோத்தர பாகமாயிருக்கு மெனவும், பூர்வபாகம் திருவள்ளுவனர் அருளிச்செய்த திருக்குறளும், உத்தர

பாகம் ஆழ்வார் அருளிச் செய்த திவ்யப்பிரபந்தங்களு மெனவும், திருக்குறள் அறத்துப்பாலில் நாராயணனது ஸர்வ ஜகத்காரணத்வம் சொல்லப்படு மெனவும், கண் ணன் பகவத்கீதையில் ஸோஹம்பாவனே செய்தனனெனப் பிறர் கூறியது தவறெனவும், பகவச்சப்தமும், புருஷ சப்தமும் நாராயணனேயே யுணர்த்து மெனவும், துரீயப் பொருளும், ஜகத்காரணனும், சுத்த சத்வ குணமுடை யோனும், சர்வாந்தர்யாமியும் நாராயணனெனவும்; நாராயண சப்தம் ஸ்ரீகாந்தன் ஒருவனேயே யுணர்த்து மெனவும், திருக்குறள் பொருட்பாலில் நாராயணன் சர்வரக்ஷகனெனவும், காமத்துப்பாலில் மோக்ஷப்ரதான னெனவும், சொல்லப்படுமெனவும், ஆழ்வார்கள் அருளிச் செயல் நாராயண பாரம்மிய பிரதிபாதக மெனவும், அருளிச் செயலே தமிழ் வேதமெனவும், தமிழ்மொழி வடமொழி யோடு ஒத்ததெனவும், இவற்றின் இடையிடையே சம்பந்தப் பட்ட பற்பல விஷயங்களுடன் எடுத்துரைத்து, இவை கட்குப் பிறர் கூறும் தடைகளுக்குத் தக்க பரிகாரங்களும், சொல்லப்பட்டுள்ளன.'' என்றும், எழுதியுள்ளார். இதனுல் "திராவிட வேதவைபவப் பிரகாசிகை ''யின் ஸாரம் உணரப்படுகிறீர்கள். அந்நூலேப் பெற்று படிக்க அவா உங்கட்கு உண்டாகின்றது, கிடைப்பதில்லே. பதிப்பிக்கப் படவேண்டும்.

மற்றும், 1905-ம் ஆண்டில் பாம்பன் குமரகுரு தாசரால் எழுதப்பட்டு அச்சில் வெளி வந்த "நாலாயிரப் பிரபந்த விசாரம்.'' என்ற புத்தகம்: நன்குபடித்த ஒருவன் மூளே கோளாருல் தாறுமாருக நூல் நுட்பங்களேச் சொல்லி பிதற்றுவதேபோல, வைணவ சமய நூல்களே குறை கூறு வதறகென்றே அவர் படித்து அங்஗னமே கூறுவதோடு

எழுதியுமுள்ளார். அந்நூல் அவரைப்போன்ற மயக்க அறிவுடையாரை மகிழ்விப்பதோடு சமயநுட்பம் தெரியாத பாமரமக்கள் நம்பிவிடுவார்கள் ஆதலால், அங்ஙனம் நேராதவாறு மக்கள் நன்மைக்காகவே நம் ஸ்வாமிகள் "நாலாயிரப்பிரபந்த விசார ஆபாச தர்ப்பணம்." என்ற அறிவைத் தெளிவிக்கும் ஆராய்ச்சி நூல் எழுதி 1908-ல் பதிப்பித்து வெளியிட்டார்கள். அந்நூலின் ஸாரம் வாசகர் களுக்குத் தெரிவதற்கு அந்நூலின் முன்னே உள்ள ஒரு பாராமட்டும் இங்கே தருகிறேன்.

"நாலாயிரப் பிரபந்த விசாரம்" என்னும் நூல் கண்டனம். அவ்வாபாச நூலில், வைணவர் சிலர் சைவ நிந்தை புரிந்தனராக அவர் பொருட்டு நாலாயிரப் பிரபந்தத்தினின்றே சிவபாரம்மியம் காட்டுவானெழுந்து, நாலாயிரப் பிரபந்தத்துட் சில பாடல்களுக்குப் பூர்வோத்தர பரஸ்பர விரோதமுண்டாம்படி பொருளெழுதியும், ஆழ்வார், அரனடியவராகிய பெரியார்; அவர்க்கு ஐயமும் அச்சமும் உண்டெடன வரைந்தும், தமது ஆபாசப் பொருள் கூறற்கியலாத சில பாடல் கட்கு மறுப்பெழுதியும், சில சுருதி வாக்கியங்கட்கு வஞ்சனைப்பொருள் குறித்தும், தாமத புராண வசனங்களை எடுத்துக் காட்டியும், தாமதத்துட் தாமதமாகத் தம்மவர் பாடிய பாட்டுகளை யெடுத்துத் தீட்டியும், வேறு சில வைணவநூல்களிற் போந்த விடயங்களை மறுத்தும் பலவாறு சென்று உபரதி யடைந்தார் அதனையாக்கியோர்.

அவரது எடுப்பு அறிவுடையோர்க்கு நகைப்புக்கிட மென்பதனை முன்னர் எடுத்துரைத்துப், பின்னர் அவர் கூறுதலை நிரஸித்து நீக்குவாம்.''

என்று தொடங்கி அப்புத்தகத்தின் ஆபாசக் கருத்தை எடுத்து தம் நூலால் விளக்கி தகர்க்கின்றூர். அந்நூலை வைணவர்கள் அவசியம் படித்துத் தெளியவேண்டியன. அந்நூலும் கிடைப்பதருமை. பதிப்பிக்கவேண்டும்.

ஆதலின், ஸ்வாமிகள் லோகோபகாரார்த்தமாக சிறப்பாக வைணவர்களுக்கு உபகாரார்த்தமாய்ச் செய்தருளிய "திராவிட வேத வைபவப்பிரகாசிகை." "நாலாயிரப் பிரபந்தவிசார ஆபாச தர்ப்பணம்" என்ற இரண்டு நூல்களும் சேர்த்துப் பதிப்பித்து உதவவேண்டும் என்ற அவாவுளது. தென்னரங்கன் திருவருள் உங்கள் மூலமாகக் கருணை பாலித்து செய்து வைக்கும் என்ற எண்ணத்தோடு அமைதியுறுகின்றேன்.

தவிர, "நாலாயிரப்பிரபந்த விசாரம்" என்னும் புத்தகம் அதனை ஆக்கியோர் 1905ல்- பதிப்பித்து வெளியிட்டார்கள். அதற்கு மறுப்பு வந்தவாறு மேலே கூறினேன். அக்காலத்தோடு அது முடிவடைந்தது. ஒரு நியாயம். அந்நூலாசிரியர் அதற்கு மறுப்பு எழுதவும் இல்லை. அதனைக்கண்ட அவர் அமைதியுற்றிருக்கலாம், சீற்றங்கொண்டிருக்கலாம், எங்ஙனமாயினும் எழுதினாரில்லை. அவ்வாறிருந்தும் 1956-ம் வருஷம் திருவல்லிக்கேணியிலுள்ள தா. வேங்கடாசல முதலியார் "நாலாயிரப் பிரபந்த விசாரம்" என்ற நூலை இரண்டாம் பதிப்பு செய்துள்ளார். சென்னை, சைவ சித்தாந்த மகாசமாஜம் வெளியீடு செய்துள்ளது. இரண்டாம் பதிப்பின் முன்னுரை ம. பாலசுப்ரமண்ய முதலியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் எழுதியுள்ளார்கள். நேர்மையான கருத்தில்லை. அவரைப் பல முறை கண்டு பேசியிருக்கிறேன். பண்ணுருட்டி

வைஷ்ணவ மகா நாட்டில் 'அர்த்தபஞ்சகம்' என்ற பொருள் பற்றி நன்ருகப் பேசினுர்கள். அவராயிப்படி எழுதினுர்கள் என்று ஐயுற்றேன். அவர் இருந்திருப்பின் இதனைக் கேட்டிருப்பேன், என் செய்வது.

தா. வேங்கடாசல முதலியாரவர்களே "சைவ சமய சரபம்" என்ற புத்தகத்தையும் 1959-ம் வருடம் அச்சிட்டுள்ளார். அப்புத்தகமும் இரண்டாம் பதிப்புதான. அதுவும் வைணவத்தையும், அவர்களணிகின்ற திருமண் காப்பையும் பலவாறு தூஷிப்பதோடு வைஷ்ணவ ஆசார்யர்களையும், ஆழ்வார்களையும் பாமரமக்கள் தங்களுக்குள் நிந்தித்துப் பேசுகின்ற கிராமியச் சொற்கள் போன்று நிந்தித்துள்ளார். இத்தகைய புத்தகங்கள் மறுபடியும் பதிப்பித்தல் அத்தகையினர் பரம்பரை தொடர்ந்து வருகின்ற தென்று தெரிகிறதல்லவா? "ஒழுக்கமுடையார்க்கு ஒல்லாவேதீய, வழுக்கியும் வாயாற் சொலல்." என்பது தமிழ்த் தலைவனின் உள்ளம். இத்தகையினர்க்கு இறைவன் நல்லறிவு தந்து நாட்டைத் தூய்மைப்படுத்த இறைஞ்சுவோமாக.

இங்ஙனம்,

அன்பன்—தாஸன்,

**K. நாராயண ரெட்டி,**

மாளிகைமேடு

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே சடகோபாய நம:

புவனகிரி

# ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

உபன்யஸித்து அருளிய,

"சமாச்ரயணம் சர்வாதிகாரம்." என்னும் விஷயத்தை 1921-ல் பதிப்பித்த "உபன்யாஸ விஜய சக்ரம்" என்ற நூலிலிருந்து முக்கிய விஷயங்கள் தொகுத்தளிக்கப்படுகிறது

---

## சமாச்ரயணம்.

"சமாச்ரயணம்" என்றால், நன்றாக அடைதல் என்று, பொருளாகும். யாரை அடைவது? அடைபவர் யாவர்? என்னில், முமுக்ஷுவான சிஷ்யனானவன் ஞான மனுஷ்டானங்கள் நன்றாகவுடையனான ஆசாரியனை அடைதலாம். அது ஆசார்யன் தன்னையடைந்த சிஷ்யனுக்குத் தாபம், புண்ட்ரம், நாமம், மந்த்ரம், யாகம் ஆகிய ஐந்து தீக்ஷைகளைச் செய்வித்தலாம். இவற்றுள் தாபமாவது; ஆசார்யன் சங்க சக்ர லாஞ்சனையை சிஷ்யனது தோள்களில் பொறித்தல். புண்ட்ரமாவது சிஷ்யனது தேகம் பன்னிரண்டிடங்களிலும் சித்ரோர்த்வ புண்ட்ரங்களைத் தானே தீட்டுதல், நாமமாவது; பகவத் பாகவத நாமங்களை யிடுதல். மந்த்ரமாவது; திருமந்த்ரத்தை உபதேசித்தல். யாகமாவது திருவாராதனத்தைத் தருதலாம்.

## சக்ராங்கிதம்.

"சக்ராதி தாரணம் பும்ஸாம் பரஸம்பந்த நிவேதனம் பதிவ்ரதா நிமித்தம்ஹி வலயாதி விபூஷணம்." பதிவ்ரதையான ஸ்திரீக்கு மங்கள சூத்ரம், மஞ்சள், வளை

முதலிய அலங்காரங்கள் பர்த்தாவினது சம்பந்தத்தை அறிவிப்பதுபோல்; பாகவதற்கு சக்ராங்கிதம், திருமண் காப்பு, துளஸி நளிநாக்ஷமாலைகள் ஈச்வரனது சம்பந்தத்தை அறிவிப்பனவாம். சக்ராங்கிதம் மங்கள சூத்ர ஸ்தான மாகும், மங்கள சூத்ர தாரணம் பர்த்தாவினது அங்கீகார அனன்யார்ஹத்வத்தைக் காட்டும். ஸ்ரீமத் துவாரகையி னின்றும் கண்ணபிரான் சால்வ நிரசனத்துக்கு எழுந் தருளியபோது துவாரபாலகரை நோக்கி "சக்ராங்கிதா ப்ரவேஷ்டவ்ய யாவதா கமனம் மம., நாமுத்ரிதா ப்ரவேஷ் டவ்ய யாவதா கமனம் மம." நான் மீண்டும் வருந் தனையும் சக்ராங்கிதரைச் சந்தேகமின்றி உள்ளே புக விடுங்கோள். முத்ரையில்லாதாரை விடவேண்டா. என் றருளிச் செய்தபடி துவாரகைச் செல்வோர் சக்ராங்கிதம் பெற்று உள்ளே புகுவது இன்றும் நிகழ்வதால், சங்க சக்ரதாரணம் பகவதங்கீகாரத்துக்கு ஹேதுவாம். என்பது, தானே விளங்கும்.

## ஆசார்யர்.

ஆசார்யத்வம்: "ஆசார்யஸ்ஸ ஹரிஸ்ஸா க்ஷாத் க்ருத்வா மர்த்ய மயீம்தனூம் மக்னனுத்தரதே லோகான் காருண்யாச் சாஸ்த்ர பாணினா." சாக்ஷாத் ஹரியே ஆசார்யன். அவன் மனித சரீரத்தைப் பரிக்ரஹித்து ஸம்ஸாரமாகிய கடலிலே ஆழ்கின்ற உலகரை கிருபை யோடு சாஸ்த்ரோபதேசமாகிய கையினால் கரையேற்று கிறான். என்கிறபடி, பகவானது ஆறுவது அவதாரமாம். பகவான் மனித சரீரத்தைப் பரிக்ரஹிக்கிறான் என்றதே யன்றி, பார்ப்பார சரீரத்தைப் பரிக்ரகிக்கிறான் என்னா மையால், **ஆசார்யத்வம் ஸர்வாதிகாரம் என்றதாம்.** "ஸத்வ்ருத்தச் சாஸிதாசைவ முமுக்ஷு: பரமார்த்தவித்

ஏவமாதி குணோபேத ஆசார்யஸ்ஸ உதாஹ்ருத: " நல்லொழுக்கங்களையுடையனாய் சாஸிதாவாய் மோக்ஷத்தில் இச்சையுள்ளவனாய், விசேஷார்த்தங்களை அறிந்தவனாய் இவை உள்ளிட்ட ஆத்ம குணங்களை உடையவன் ஆசார்யனென்று சொல்லப்படுகிறான். என்கையால் இந்த குணங்களில்லாதவன் ஆசார்யனல்லன் என்று பெறப்படுகின்றது.

அனாசார்யர்.

"ஜ்ஞான ஹீனம் குரும்ப்ராபய குதோ மோக்ஷ மவாப்னுயாத் பின்னநா வாச்ரிதோ ஜந்துர்யதா பாரம் நகச்சதி." ஓட்டை ஓடத்தைப் பற்றினவன் எப்படி கரை சேர மாட்டானோ: அதுபோல ஞானமில்லாத குருவை யடைந்தவன் மோக்ஷத்தை அடையமாட்டான் என்றதால், அஜ்ஞான ஆசார்யனது சம்பந்தத்தை விட்டொழித்து ஸுஜ்ஞான ஆசார்ய சம்பந்தத்தைப் பெற்று உஜ்ஜீவிப்பது பெற்றியாம்.

அனாசார்ய த்யாஜ்யம் ஆவச்யகம்.

ஜ்ஞானமில்லாத ஆசார்ய சம்பந்தத்தை விட்டொழிக்க வேண்டியது ஆவச்யகமென்பது முமுக்ஷுப்படி த்வயப்ரகரணம் முதலில் "புறம்புண்டான பற்றுக்களை யடைய வாசனையோடே விடுகையும்" என்ற தொடரின் வ்யாக்யானத்தில் "பிதரம் மாதாம் தாரான் புத்ரான் பந்தூன் ஸகீன் குரூன் ரத்னானி தனதான்யானி க்ஷேத்ராணிச க்ருஹாணிச ஸர்வ தர்மாம்ச்ச ஸம்த்யஜ்ய ஸர்வ காமாம்ச்ச ஸாக்ஷரான் லோக விக்ரந்த சரணௌ சரணம் தே வ்ரஜம் விபோ" என்ற ச்லோக வாயிலாக பகவத் பக்தர்க்குத் தாய், தந்தை; மனைவி, மக்கள், பந்துக்கள் சினேகிதர்கள், ஆசார்யர்கள், ரத்னங்கள், தனதான்யங்

கள், க்ஷேத்ரங்கள், வீடுகள் எல்லாம் த்யாஜ்யமென்று கூறிய கோவையில் "அஜ்ஞான ஆசார்யர்களையும்" விட்டொழிக்கும்படி கூறியிருப்பதாலும் தெற்றென விளங்கும். ஆகையால், ஞானமில்லாத குருவை விட்டொழித்து ஜ்ஞானமுடைய குருவை யடைந்து உஜ்ஜீவித்தல் இன்றியமையாத தொன்றாகும்.

## அநாசார்ய த்யாஜ்யம் த்ரோகமாகாமை.

அது குருத்ரோஹ மாகாதோ என்னில் "அவைஷ்ணவோ பதிஷ்டஸ்யாத் பூர்வ மந்த்ரம் வரம் த்வயம், புனச்ச விதிநா ஸம்யக் வைஷ்ணவாத் க்ராஹயேத் குரோ:" ஸ்வரூப ஜ்ஞான மில்லாதவனாய் அதனால், அவைஷ்ணவனான ஆசார்யனை அடைந்து பூர்வம் அவனால் உபதேசம் செய்யப்பெற்ற திருமந்த்ர த்வயம் ரஹஸ்யங்களை மீண்டும், ஸ்வரூபஜ்ஞனாய் அதனால் வைஷ்ணவனான ஆசார்யனை ஆச்ரயித்து உபதேச வாயிலாக நன்கு பெற்றுக்கொள்ளத் தக்கது. என்றதனாலும், "மதுலுப்தோ யதாப்ருங்க: புஷ்பாத் புஷ்பவரம் வ்ரஜேத் ஜ்ஞானலுப்தஸ்ததா சிஷ்யோ குரோர் குர்வந்தரம் வ்ரஜேத்" வண்டானது தானடைந்த தேனில்லாத பூவை விட்டு தேனுள்ள மற்றொரு பூவை யடைந்து ஜீவிப்பது போல, சிஷ்யனும் ஜ்ஞானமில்லாத குருவை விட்டொழித்து ஜ்ஞானவானான மற்றொரு குருவைப் பற்றி உஜ்ஜீவிக்கக் கடவன். என்ற ப்ரமாணத்தாலும், அது குருத்ரோக மாகாமை காண்க.

## அதற்கு ஐதிஹ்யம்.

சாக்ஷாத் முதலியாண்டானது திருப்பேரனாராகிய கந்தாடை தோழப்பரை, நம்பிள்ளை பக்கல் அபசாரப்பட்டது

கேட்டு அவர் தேவியார் நம் பிள்ளையிடத்தில் அபசாரப் பட்டுவந்த உமது சம்பந்தம் எனக்கு வேண்டா. நான் இஷ்டத்திலே இருந்து ஈடேறிப்போகிறேன். என்றதும் அஜ்ஞுன ஆசார்யனை விட்டொழித்தலே அறமாகும் என்பதற்குச் சான்றும்.

**ஸமாச்ரயணம் ஸர்வாதிகாரம்.**

**நான்காம் வருணத்தில் அவதரித்த, நம் குலநாத ரான நம்மாழ்வார், முதற்குலத்தில் உதித்தவரான மதுரகவிகட்கும், நாதமுனிகட்கும் திருவிலச்சினை செய்தருளிய சிஷ்டாசாரத்தாலும், ஸமாச்ரயணம் ஸர்வாதிகாரம்.**

பகவந்நிர்ஹேதுக கடாக்ஷத்தால் மயர்வறமதிநலம் அருளப் பெற்றவராய், உண்ணுஞ் சோறும் பருகு நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனென்று, பகவத் குணைக தாரகராயிருந்த ஆழ்வாரனுஷ்டானத்தை நம்ம ஞோர் அநுஷ்டானத்தோடு ஒப்பிடலாமா? என்னில், "யத்யதா சரதி ஸ்ரேஷ்டஸ் தத்யதா சரதேஜநா;" என்கிற படியே சிஷ்டரது ஆசாரம் கர்த்தவ்யமேயன்றோ? ஆழ்வார் உயர்ந்தவர்ணத்தில் அவதரியாமல் தாழ்ந்த வர்ணத்தில் அவதரித்ததெற்றுக்கோ? அவர் வம்சபூமிகளை யுத்தரிக்க கீழ்க்குலம் புக்க வராக கோபாலரைப்போலே உயர்ந்த குலத்தோம் நாமென்னும் அகங்காரத்தால் சம்சாரத்திலே அழுந்துகிறவர்களைக் கரையேற்றும் பொருட்டன்றோ அகங்கார மற்ற நான்காங்குலத்தில் தாழ இழிந்தது. ஆழ்வார் "யவரேலும் அவர்கண்டீர் எம்மையாளும் பரமர்." என்றும், "எம்மையாளுடை நாதரென்றும்" "எமக்கெம் பெருமக்கள்" என்றும், "கும்பிநரகர்கள் ஏத்துவரேலும் அவர் எம்பல் பிறப்பிடைதோறும் எங்தொழுகுலந்தாங்கள்"

என்றும், "குலந்தாங்கு சாதிகள் நாலிலுங் கீழிழிந்து எத்தனை—நலந்தானிலாத சண்டாள, சண்டாளர்களா கிலும்—வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்கா ளென்று உள்—கலந்தார் அடியார் தம்மடியார் எம்மடி களே." என்றும் அருளிச் செய்திருப்பது அறியத்தக்கது. எம்பெருமானார் திருக்கச்சி நம்பிகளை தண்டன் சமர்ப்பித்து அடியேனுக்கு திருவிலச்சினை செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனரன்றோ? அதனாலும், **ஸமாச்ரயணம் ஸர்வாதிகாரம்** என்பது வ்யக்தமாம். ஆனால் நம்பிகள் நீர் பரமவைதிகராகையாலே என்னை விரும்பினீர். லோகமர்யா தைக்குச் சேராது. என்று அதனை விலக்கினரே என்னில்? எம்பெருமானார் லோகமர்யாதை எனக்குவேண்டா வைதி கத்துக்குச் சேர்ந்தவாறு செய்தருளவேண்டுமென்று மீண்டும் ப்ரார்த்திப்ப விலக்கினாரில்லையே.

## வர்ணபேத வரம்பு.

எம்பெருமானார் தமது ஆசார்யரான பெரிய நம்பிகள், ஆளவந்தார் அபிமானரான திருக்குலத்திலவதரித்த மாற நேர் நம்பிகட்குப் புத்ரக்ருத்யம் செய்து திருப்பள்ளி படுத்தி நீராடாமலே திருமாளிகைக்கு எழுந்தருளின ரெனக்கேட்டு அவர் பாடே சென்று, அடியேன் ஒருவழியாலே வரம்பு கட்டிவைக்க தேவரீர் ஒருவழியாலே அதை அழித் திடுவதே. எனறு கேட்டனரன்றோ? அதனாலும், **ஜாதி பேதம் கட்டுப்பாடேயன்றி தத்துவம் அன்றென்று தோன்றும். வரம்புகட்டுவது வஞ்சகமன்றோ?**

## ஆசார்யர் எழுபத்து நால்வர் மட்டும் ஆகாமை.

எம்பெருமானார் எழுபத்துநான்கு சிங்காசனாதி பதிகளை ஏற்படுத்தி வைத்தபடியால், ஏனையோர் ஆசார்ய-

ராகக்கூடாதே என்னில், நஞ்ஜீயரும், நம்பிள்ளையும் எந்த சிங்காதனத்தவர்? திருக்கோவலூர் எம்பெருமானார் ஜீயர், ஸ்ரீபெரும்பூதூர் எதிராஜ ஜீயர், கோவர்த்தனம் ரங்கா சாரியர் தொடக்கத்தார் சிங்காசனத்தரன்றே: அவர் தாம் ஆசாரியராய் திருவிலச்சினை செய்து வருமது சேருமோ? சிங்காசனங்களைப் பிரிக்கக் கண்ட ப்ரமாணம் எங்ஙனம்? எழுபத்து நான்கு சிங்காசனங்கள் இப்போது எண்ணி றந்த ஆசனங்களாய், அம்பட்டன் வண்ணானைப்போலே வீடு ஜோடுகளைப் பிரித்துக்கொண்டு வேஷங்காட்டி வீடு வீடாய்த்திரிதல் யோக்யமாமோ?

## ப்ராம்மண்யம் செயற்கை.

"தன்மந்த்ரம் ப்ராஹ்மணாதீனம்" என்கிறபடி ப்ராம் மணன்தான் திருமந்த்ரம் உபதேசம் செய்யும் ஆசார்யனா வான் என்னில், ப்ராஹ்மண சப்தம் "ப்ரஹ்மஜ்ஞானேன ப்ராஹ்மண:" என்கிறபடி ப்ரம்மஜ்ஞானமுள்ள ஒருவனைக் காட்டுமேயன்றி ஜாதியைக் காட்டாது. ஆகையால், ப்ராஹ்மண்யம் செயற்கையேயன்றி இயற்கை யன்றாம். இது "இதின் ஔபாதிகத்வம் ஒரு ராஜா தன்னை மறைமுனிவனாக்கி வைத்தவன் நீசனாக்கிவைத்த ராஜாவை உறுப்பாக யஜிப்பித்து ஸ்வர்க்கமேற்றினபோதே தெரியும்," என்ற, ஆசார்யஹ்ருதய சூத்ரத்தாலும், இனிது விளங்கும்.

## ஆசார்யத்வம் ஸர்வதர்மம்.

மாறனேர் நம்பிகள் எம்பெருமானார்க்கு உத்தாரக ஆசார்யரென்பது, "உத்தாரகம் யதீந்த்ரஸ்ய மாறனேரி குரும்பஜே" என்னும், தனியனால் விசதமாகும்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளை ஆச்ரயித்து, ஜாதிதோஷங்கழியப் பெற்று, ப்ரஹ்மவித்தாய், அதனால், ப்ராஹ்மணரான விளாஞ்சோலைப்பிள்ளை திருவடிகளில் ஆச்ரயித்து திருவாய்மொழிப்பிள்ளை விசேஷார்த்தங்களைக் கேட்டதும், 'ஆசார்யத்வம்' ஸர்வாதிகாரம் என்பதனை நிலை நிறுத்தும். விளாஞ்சோலைப்பிள்ளைக்குத் தனியனும் உண்டு.

## பகவத் பக்தன் ப்ராஹ்மணன்.

"யஸ்தப்த ஸங்க்க சக்ராப்யாம் விமுக்த: பூர்வகில் பிஷை: உபவீதாத்யதா விப்ரோ ஸபவேத் வைஷ்ணவத் விஜ:" உபவீததாரணத்தால் முன்புண்டான சூத்ரத்வம் கழிந்து எப்படி விப்ரனுவனே, அப்படியே சங்க சக்ர தாரணத்தால் முன்புண்டான கீழ்க்குலதோஷ பாபங்களில் நின்றும் விடுபட்டவனாய் ஸ்ரீ வைஷ்ணவ த்விஜனாகிறான் என்றும்,

"பகவத் பக்தி தீபாக்நி தக்த துர்ஜாதி கில்பிஷ: ச்வபாகோபிபுதை ச்லாக்யோ ஸவேதாத்யயனுத்விஜ:" நாய்மாமிசம் தின்னும் சண்டாளனேயாகிலும், பகவத் பக்தனானால், அவன் பக்தியாகிற ஜ்வலிக்கிற நெருப்பினால் கொளுத்தப்பட்டு ஜாதிதோஷம் முதலியன கழிந்து ப்ரஹ்மவித்துக்களாய் கொண்டாடப்பட்டவனாய் த்விஜனாகிறான் என்றும், ப்ரமாணங்கள் உண்மையால், பகவத்பக்தனானவன் ஜாதி தோஷங்கழிந்து அந்த ஜன்மத்திலேயே ப்ராஹ்மணனாகத்தட்டில்லை "வேதவித்துக்களும் மிக்க வேதியரும், சந்தசாம் மாதாவாலும் அதுக்கும் தாயாய் தாயினமாயின செய்யுமத்தாலும் பிறப்பிக்குமது இருவர்க்கும் ச்ரேஷ்ட ஜன்மம்" என்னும், ஆசார்யஹ்ருதய

சூத்ரத்தாலும் திருமந்த்ர உபதேசத்தாலே பிறப்பாலுண்டான தோஷங்கழிந்து ப்ராஹ்மணத்வம் உண்டாம் என்பது போதரும்.

" ஸஹிவித்யா தஸ்தம் ஜனயதி தச்ரேஷ்டம்ஜன்ம." ஆசார்யன் திருமந்த்ர ஜ்ஞான உபதேசத்தாலே சிஷ்யனை உண்டாக்குகிருன். அந்த திருமந்த்ர ஜ்ஞான ஜன்மமே ச்ரேஷ்டம். என்று, ஆபஸ்தம்ப சூத்ரம் கூறும்.

" விஷ்ணும் க்ராந்தம் வாசுதேவம் விஜானன விப்ரோ விப்ரத்வம் கச்சதி தத்வதர்சீ." என்னும், ச்ருதிவாக்யத்தாலும், பகவத்பக்தருக்கு இழிகுலதோஷம் கழிந்து விப்ரத்வம் உண்டாமது திண்ணமாம்.

## ஸர்வ வர்ண சூத்ரத்வம்.

"நசூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதா ஸ்ம்ருதஃ ஸர்வவர்ணேஷுதே சூத்ரா ஏஹ்ய பக்த ஜனார்த்தனே." பகவத் பக்தனவன் சூத்திரனல்லன்; விப்ரனென்றும், பாகவதனென்றும் சொல்லப்படுகிருன். ஜனார்த்தனனிடத்தில் பக்தியில்லாதவன் எவனே அவன் எல்லா வர்ணங்களிலும் சூத்ரனுகிருன். என்று பாரதம் பகரும். இதனுல், ப்ராஹ்ணனிலும் சூத்ரனுண்டு சூத்ரனிலும் ப்ராஹ்ணனுண்டு என்றதாயிற்று.

## பகவத் பக்தன் எவனேலும் பூஜ்யன்.

"பக்திரஷ்ட விதாஹ்யேஷா யஸ்மின்ம்லேச்சேபி வர்த்ததே ஸவிப்ரேந்த்ரோ முநிஸ்ரீமான் ஸயதிஸ்ஸச பண்டிதஃ தஸ்மைதேயம் ததோக்ராஹ்யம் ஸசபூஜ்யோ யதாஹ்யயம்." மிலேச்சனேயாகிலும் எட்டுவித பக்தியை

யுடையனுனல், அவன் ப்ராம்மண ச்ரேஷ்டன், முநி, ஸ்ரீமான், யதி, பண்டிதனுகிருன். அவனுக்கு ஜ்ஞானு பேக்ஷை யுண்டானுல் உபதேசியுங்கோள்: அவனிடம் ஜ்ஞானமுண்டானுல் அவனுல் உபதேசங் கேட்டு க்ருதார்த்தராகுங்கோள்: நான் எப்படி பூஜ்யனே அப்படியே அவனும் ஆராதிக்கத் தக்கவன். என்று, பகவான்தானே வாயோலை இட்டு வைத்தான். இதனை "மிலேச்சனும் பக்தனுனல் சதுர்வேதிகள் அனுவர்த்திக்க அறிவு கொடுத்து குலதெய்வத்தோ டொக்க பூஜை கொண்டு பாவன தீர்த்த ப்ரசாதனும்." என்று, ஆசார்ய ஹ்ருதயமும் கூறும். இந்த ச்லோகார்த்தத்தைத் தொண்டரடிப்பொடி ஆழ்வார் "பழுதிலா வொழுகலாற்றுப் பல சதுப்பேதி மார்கள்—இழிகுலத்தவர்களேனும் எம்மடியார்களாகில்—தொழுமினீர் கொடுமின் கொண்மின் என்று நின்னேடு மொக்க—வழிபடவருளினுய்போல் மதிட்டிருவரங்கத்தானே." என்னும் பாட்டில் ப்ரஹ்மா தொடங்கி வம்சப்ரவாகத்தில் ஒரு தோஷமு மில்லாதவராய் பலராயுள்ள நான்கு வகைப்பட்ட வேதியர்காள் இதிற்கீழில்லை யென்னும்படியான இழிகுலத்திற் பிறந்தாரேனும் எனது சம்பந்த ஜ்ஞானமுடையராகில் அவர்கள் தொழுந்தனையும் பார்த்திராதே நீவிர்கண்டமாத்திரத்தில் அவர்கள் திருவடிகளிலே விழுந்து ஆராதியுங்கோள் என்று பகவான் கூறியதாக அருளிச்செய்தார்.

நல்லான் வேதவதியில் அடித்துக்கொண்டு வந்த பிணத்துக்கு, சங்கு சக்ர குறிகண்டு புத்ரக்ருத்யம் செய்தருளினுர். இதனுல், பகவத் சம்பந்த சூசகமானதொரு அறிகுறி மாத்ரமுடையார் யாவரேனும், பூஜ்யராவரெனல் இனிது விளங்கும்,

### ஜன்ம நிரூபணம்

ஆசாரியர் தாமே என்று இறுமாந்து செருக்கித் திரியும் ஐயங்காரில் பெரும்பாலார் பகவத் பக்தரை சூத்ர ரென்று ஜன்ம நிரூபணம் பண்ணி அஞ்சாமற் பழிப்பது அருநரகம் புகுதற்கே ஹேதுவாம்,

"அதிலேயொன்று அவர்கள் பக்கல் ஜன்ம நிரூ பணம்" என்றதும், அறியற்பாலதாம்.

### பெண்கள் வேதாத்யயன ஜ்ஞானேபதேச யோக்யர்.

கார்க்கி என்னும் பெண்பால் வேதமோதி ஜ்ஞாதிகை யாய் யாஜ்ஞவல்க்யருடன் வாதும் செய்திட்டாள் என்பது வேதாந்தத்தே காண்க.

பொன்னுச்சியார் ஓராத்மாவுக்கு ஆசார்யர் ஒரு வரா? பலரா? என்று, பாஷ்யகாரரால் கேட்டு வரவிட்ட ஸ்ரீ பாஷ்யாதிகாரிகளுக்கு அளகத்தை அவிழ்த்து உதறி சிவப்பு நூலெடுத்து முடித்து தாளிட்டு ஓராத்மாவுக்கு ஆசார்யர் பலர், அவருள் எம்பெருமானுர் உத்தாரக ராவார். இது சத்தியமென்று உபதேசித்ததுண்டன்றோ? இதனுல் பெண்களுக்கும் உபதேச யோக்யதை உண் டென்று பெரிதும் விளங்கும்.

### ஜாதி உயர்வு தாழ்வு.

புஷ்ப, த்யாக, போக, மண்டபங்களில் பணிப்பூவும், ஆல வட்டமும், வீணையுங், கையுமான அந்த ரங்கரை முடிமன்னனும், வைதிகோத்தமரும், மகாமுநியும் அநு வர்த்தித்த க்ரமம் அறிவார்க்கிறே ஜன்மோத்கர்ஷ அபகர்

ஷங்கள் தெரிவது.'' "புஷ்பமண்டபமான திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு மண்பூவையிட்ட குறும் பறுத்தநம்பியை தொண்டைமான் சக்ரவர்த்தி ஆச்ரயித்து அநுவர்த்தித்ததும், த்யாகமண்டபமான பெருமாள் கோயிலில் ஆலவட்டமும் கையுமாய் பேரருளாளனுக்கு வீசி பேசிவந்த திருக்கச்சி நம்பிகளை வைதிக உத்தமரான எம்பெருமானுர் தாழ்ந்து வழிபட்டு அநுவர்த்தித்ததும், போகமண்டபமான கோயிலில் வீணையுங் கையுமாய் பெரிய பெருமாளுக்கு அந்தரங்கரா யிருந்த திருப்பாணுழ்வாரை லோகசாரங்க மகாமுநிகள் வாகனமாக வகித்து அநு வர்த்தித்ததும், அறிவார்க்கன்ருே உயர்குலமும் இழி குலமும் தெரிவது'' என்ற ஆசார்ய ஹ்ருதய வசனமும் அறியத்தக்கது.

## ஜாதி உத்கர்ஷப்ரமம்.

அஜ்ஞர் ப்ரமிக்கும் வர்ணத்தை கர்த்தப ஜன்ம மென்றும், ஆச்ரமத்தை ச்வபசாதம மென்றும், வித்யையை சில்பநைபுணமென்றும், வ்ருத்தத்தை சவவிதவாலங்கார மென்றும் ஞானவான்களான பெரியோர்கள் கழிப்பர்கள்.

*"பூதங்களைந்தும் பொருந்துடலினுற் பிறந்த*
*சாதங்கள் நான்கினெடு சங்கதமாம்—பேதங்கொண்டு*
*என்னபயன் பெறுவீர் எவ்வுயிர்க்கும் இந்திரைகோன்*
*தன்னடியே காணும் சரண்.*

பஞ்சபூதமாகிய சரீரத்தாலுண்டான ஜாதியில் ஒருபயனும் இல்லை. யாவர்க்கும் பகவத் ஸம்பந்த மாத்ரத்தால் ஜன்ம தோஷங்கழிந்து ப்ராஹ்ணத்வமுண்டாம் என்பது திண் ணம். ஆகையால், சமாச்ரயணம் ஸர்வாதிகாரம்.

---

# சமாச்ரயணம் ஸர்வாதிகார விஜய சக்ரம்.

## 36-ம் பக்கம் தொடங்கி



ப்ராஹ்மண்ய மாவதுயாது? ஜீவனு? தேகமா? ஜாதியா? ஞானமா? கர்மமா?

### ஜீவன்.

ஜீவன் ப்ராஹ்மண்யம் என்னில், ஆத்மாவானது யாதானுமோராக்கையில் புக்கு அங்காப்புண்டும், ஆப்ப விழ்ந்தும், மூதாவியிற்றடுமாறு முயிர் என்கிறபடி பழமை யான தேவ, மனித, திரியக்கு, ஸ்தாவரமென்னும் நால் வகைப் பிறப்புக்களுள் யாதா யினும் ஓருடம்பில் பிரவே சித்து, அவ்வுடம்பில் கட்டுப்பட்டு நின்றும், அங்கு நின்று தொடர்ச்சி நீங்கியும், நிலைமாறி உழலுந்தன்மையதாத லாலும், ப்ராஹ்ணுத்மா, க்ஷத்திரியாத்மா, வைச்யாத்மா, சூத்ராத்மா, சண்டாளாத்மா என்னும் பேதமின்றி ஒரே ரூபத்தோடு இருப்பதாலும், **ஜீவன் ப்ராஹ்மண்யமன்று.**

### தேகம்.

தேகம் ப்ராஹ்மண்ய மென்னில், சண்டாளப் பிறப்பு வரையிலுள்ள எல்லா மனிதர்களது தேகம் ஒரு ரூபமாய் இருக்கக் காண்கிறோம். ப்ராஹ்ணன் வெளுத்தவன், க்ஷத்ரியன் சிவந்தவன், வைச்யன் மஞ்சள்நிற முடையவன், சூத்ரன் கருத்தவன் என்னும் நியதியுமில்லை. பிதா முதலானவர்கள் சரீரங்களை புத்ரன் முதலானவர்கள் கொளுத்தும்பொழுது ப்ரஹ்மஹத்தி தோஷமும் உண்

டாகும. ஆகையால் தேகம் ப்ராஹ்மண்யம் என்று சொல்லப்போகாது.

## ஜாதி.

ஜாதி ப்ராஹ்மண்ய மென்னில் "சேற்றில் பிறந்த செங்கழு நீர்போல் பிரமர்க்குக் கூத்திவயிற்றிற் பிறந்த வசிட்டரும், வசிட்டர்க்குச் சண்டாளி வயிற்றிற் பிறந்த சத்தியரும், சத்தியர்க்குப் புலைச்சிதோள் சேர்ந்து பிறந்த பராசரரும், பராசரர்க்கு மீன் வாணிச்சி வயிற்றிற் பிறந்த வியாசரும், இந்நால்வரும் வேதங்களோதி மேன்மைப்பட்டு மாதவராகி வயங்கினரன்றோ?" என்கிறபடியே வசிஷ்டர் பிரமற்கும், தேவர்களையும், புரூரவர், யயாதி முதலிய மனிதர்களையும் வரையின்றிப் புணர்ந்து அர்ச்சுனனையும் புணர்வான் ஆசைப்பட்ட கூத்தியான ஊர்வசியினது வயிற்றிற் பிறந்தார்.

அந்த வசிட்டர்க்கு அருந்ததி என்னும் சக்கிலிச்சி வயிற்றில் சக்தர் பிறந்தார்.

அந்த பராசரர்க்கு மச்சகந்தி என்னும் வலைச்சி வயிற்றில் வியாசர் பிறந்தார்.

இவர்கள் ப்ராஹ்மணி வயிற்றில் பிறந்தாரில்லையே. வியாசர் மீன் வாணிச்சி வயிற்றில் பிறந்தாரென்பதை "பிறவிபார்க்கில் அஞ்சாமோத்தும் ஆறு மூன்றுங் கழிப் பனும்." என்னும், சூத்திரவாயிலாக ஆசார்யஹ்ருதய க்ரந்தாசிரியரும் ஒப்பியுள்ளார்.

கௌசிகர்—தர்ப்பையிற் பிறந்தார்.

ஜாம்பூகர்—நரிவயிற்றிற் பிறந்தார்.

கலைக்கோட்டுமாமுனிவர்—மான்வயிற்றிற் பிறந்தார்.

சுகர்—கிளி வயிற்றிற் பிறந்தார்.

அகஸ்தியர்—கலசத்தில் பிறந்தார்.

சௌனகர்—நாய் வயிற்றிற் பிறந்தார்.

ப்ராஹ்மணி வயிற்றிற் பிறவாத இவர்களெல்லாரும் ப்ராஹ்மண ச்ரேஷ்டர்களானுர்களன்ருே?

விச்வாமித்ரர் ராஜாவாய்ப் பிறந்து தவத்தாலும், வசிஷ்டர் வாக்கினுலும் அந்தப் பிறப்பிலேயே ப்ராஹ்மண ராய்விட்டார்.

ஹாரிதர் என்னும் ராஜா அந்த ஜன்மத்திலேயே ப்ராஹ்மணரானுர்.

அந்த ஹாரித கோத்ரத்தில் அவதரித்தவரன்ருே ஆசார்ய பதத்துக்கு உரியவரான நமது ராமாநுஜர்.

விச்வாமித்ர கோத்ரத்தில் பிறந்தவரன்ருே வேதாந்த தேசிகர்.

இன்னுேர்க்கு ப்ராஹ்மணத்வம் எய்துமாறு எங்கனேயோ?

இப்போது ப்ராஹ்மண ரெனப்படுவோ ரெல்லாரும், பெரும்பாலும் வசிஷ்ட, பராசர, விச்வாமித்ராதி கோத்ரத் தாராக இருத்தலால் நேரே ப்ராஹ்மணனுக்கும் ப்ராஹ் மணிக்கும் பிறந்தவரென்று பேசுவதற்கு இடமில்லையே. ஆகையால், ஜாதியும் ப்ராஹ்மண்யமல்ல.

## ஞானம்.

ஜ்ஞானம் ப்ராஹ்மண்ய மென்னில், ஆட்டு வாணியம் செய்துவந்த வேடனுன தர்மவ்யாதனும், துர்யோதனன் 'வ்ருஷலன்' என்று, தூஷித்த விதுரனும், க்ஷத்திரயனுன

பீஷ்மனுதியரும், ப்ரஹ்மரிஷிகட்கும் உபதேசிக்கும் ஞான வான்களாக இருந்தார்கள். ஆகையால், **ஞானமும் ப்ராஹ்மண்யமன்று.**

## கர்மம்.

கர்மம் ப்ராஹ்மண்யம் என்னில், எல்லாரிடத்தும், சஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாம்யம் என்னும் மூன்று வகைப் பட்ட கர்மங்கள் ப்ரத்யக்ஷத்தாலும் சாஸ்த்ரத்தாலும் காணப்படுகின்றன. கர்மத்தால் தூண்டப்பட்ட மனிதர்கள் அந்தந்த கர்மத்துக்குரிய கார்யங்களைச் செய்துவருகின் றனர். ஆகையால், **கர்மமும் ப்ராஹ்மண்யமன்று.**

## ப்ராஹ்மணனுவான்.

ஆனுல் ப்ராஹ்மணனுவான் யாவனென்னில்? நாகேந்த்ரன் "ப்ராஹ்மண: கோபவேத்ராஜன்" ப்ராஹ் மணனுவான் யாவனென்று கேட்ப, அதற்கு விடையாக "ஸத்யம் தானம் க்ஷமா சீலம் ஆந்ரு ஸம்ஸ்யம் தமோக்ருணு த்ருச்யந்தே யத்ர நாகேந்த்ர ஸப்ராஹ் மண இதி ஸ்ம்ருத:" சதயம், தானம், பொறுமை, சீலம், ஆந்ரு சம்ஸ்யம், தமம், தயை ஆகிய இக்குணங்கள் எவனிடம் காணப்படுகின்றனவோ அவன் ப்ராஹ்மணன் என்று தர்மபுத்ரர் சொன்னுர்.

"நயோனிர் நாபி ஸம்ஸ்காரோ நச்ருதம் நச சந்ததி, காரணுனி த்விஜத்வஸ்ய வ்ருத்தமேவது காரணம்." ப்ராஹ்மண்யத்துக்கு பிறப்பு, க்ரியை, வேதாத்யயனம், ஜ்ஞானம், ஸந்ததி இவை யெல்லாம் காரணமன்று; ஒழுக்கமே காரண மென்று பாரதம் ஆநுசாசன பர்வம் பகரும்.

"அந்தணரென்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான். என்னும் திருக்குறளுக்கு" அந்தணரென்பது அழகிய தட்பத்தினையுடையாரென ஏதுப் பெயராகலின் அது அவ்வருளுடையார் மேலன்றிச் செல்லாது என குணமே காரணமென்றும்.

"ஒழுக்கமுடைமை குடிமை இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்." என்னும் திருக்குறளுக்கு "பிறந்த வருணத்துள் இழிந்த குலத்தாராயினும், ஒழுக்கமுடையவராக உயர் குலத்தாராவர். உயர்ந்த வருணத்தில் பிறந்தாராயினும் ஒழுக்கத்தில் தவறத் தாழ்ந்த வருணத்தாராவர்." என ஒழுக்கமே காரணமென்றும், பரிமேலழகர் பொருள் கூறினர். இதனால், ப்ராஹ்மண்யம் இயற்கையென்றது அடிபட்டொழிந்து செயற்கையே யென்று தீர்மானிக்கப்பட்டது,

*குடியுங்குலமு மெல்லாங் கோகனகை கேள்வன்*
*அடியார்க் கவனடியேயாகும்—படிமீதில்*
*நீர்கெழுவுமாறுகளின் பேரும் நிறமு மெல்லாம்*
*ஆர்கலியைச் சேர்ந்திட மாய்ந்தற்று.*

என்ற, ஞானஸார வசனமும் கொள்ளத்தக்கது."

---

விளக்கம் நன்கு வேண்டுவோர் மூல நூலைக்கண்டு தெளிக.

தாஸன்,
**K. நாராயண ரெட்டி,**
மாளிகை மேடு.

---

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

புவனகிரி

# ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

# பதிகம்.

சென்னைச் சர்வகலாசாலை ஆராய்ச்சித்துறைத்
தமிழ் விரிவுரையாளர்
வித்வான்
ஸ்ரீமான், வே. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்கள்
இயற்றியது.

உலகுபுகழ் தமிழ் நிலத்துள்
உயர்ந் தோங்கு சோணாட்டின்
திலகமென வருமணி சேர்
சித்திர கூடத் தருகில்
புலவர்பலர் புகழ்ந் தேத்தும்
புவனகிரி யெனு நகரில்
மலர்மகள்கோ னருளின் வரு
மணவாள மாமுனியே. (1)

செந்தமிழ் நாட்டணி குருகைத்
திருநகரில் அவதரித்த
நந்தலைவன் சடகோபன்
நல்கியசீர் நான்மறையும்

முந்துபுகழ் முடும்பையர் கோன்
மொழிமறையும் நனிதழைக்க
வந்துதித்தாய் புவனகிரி
மணவாள மாமுனியே. (2)

சீர்வசன * முப்பொருணூற்
சேருரையில் வடமொழியின்
நேர்வசனம் பிறரறிதல்
நேராதென் றவனுரையைக்
கூர்வசனத் தொழித்தெவருங்
கொளத்தந்தாய் குலவுதிரு
மார்வ, சனம் புகழ் புவனே
மணவாள மாமுனியே. (3)

தன்னுள்ளே தோற்றுவதும்
தன்னுள்ளே யொடுக்குவதும்
முன்னுள்ள வவைமீள
முகிழ்ப்பதுவும் இறைசெயலென்
றுன்னகிலார் வாதமெலாம்
ஒருங்கவிய வுரைசெய்து
மன்னுபுகழ் படைத்தனையெம்
மணவாள மாமுனியே. (4)

செந்தமிழ மறைப் பொருளைத்
தெளியகிலார் தெளிவில்லார்
தந்தமறி வாற்புகன்ற
தவறுதெரித் தொருநூலும்
முந்துபொருள் முறைதெரித்தோர்
முழுநூலும் முதல்வனுய்
வந்தருளித் தெளிவித்தாய்
மணவாள மாமுனியே. (5)

* தத்வத்ரயம்

வலிந்துற்று நின்னோடு
    வாதஞ் செய்தோர் தாமே
நலிந்துதுய ரெயதியதிந்
    நாடந்த நாளறியும்
பொலிந்தகதிர் நெல்வயல்சூழ்
    புவனகிரி நகர்தோன்றி
மலிந்த புகழ் படைத்துயர்ந்த
    மணவாள மாமுனியே. (6)

தோத்திரநூல் பலவளித்தாய்
    அவையல்லால் தொன்னெறியின்
ஆத்திகர்க்கோர் நிதியாகும்
    *ஐம் பொருளைத் தெளிவித்துச்
சாற்றியநூல் ஒன்றேநின்
    றண்ணளிக்குச் சாலும் நிலன்
வாழ்த்தியநற் புகழ்படைத்த
    மணவாள மாமுனியே. (7)

குருகையர்கோன் மறைமொழியுட்
    கொண்டுதொழு மடியரெலாம்
ஒருகுலமே பிறந்தகுல
    மொழிந்த தறிவுரனுடையோர்
தெருள்குரவ ராவரிது
    செயல்முறையே யென்றறிஞர்
வருமவையில் நிறுவினை யெம்
    மணவாள மாமுனியே. (8)

ஆயுமறை முதற்பொருளை
    அறிந்தோரும் வியந்துகொளச்
சீயமெனப் பேரவையில்
    எடுத்தியம்பு திறத்தினிலும்

---

* அர்த்த பஞ்சக ஸாராம்ருதம்.

D

நேயமுட னுரைப்பதிலும்
நிகரில்லாய் என்றுலகம்
வாயெடுத்துத் துதிக்குமுயர்
மணவாள மாமுனியே. (9)

தெள்ளுபுனற் காவிரிசூழ்
திருவரங்கத் தரவணையிற்
பள்ளிகொடிவ் வுலகளிக்கும்
பரமனடி தொழுவுறுநாட்
கொள்ளுமியல் பில்லாத
அடியெனையும் ஆட்கொண்டாய்
வள்ளல், அருள் மாறாத
மணவாள மாமுனியே. (10)

நின்னுடைய வருளுக்கும்
அறிவிற்கும் நிலைக்களனாய்த்
துன்னுபுகழ் மலிவுற்ற
சுந்தரராமானுசர் தாள்
சென்னிகொளு மடியேனுக்
கவர்க்காகத் திருவருள் செய்
மன்னுபுகழ்ப் புவனகிரி
மணவாள மாமுனியே. (11)

ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்
திருவடிகளே சரணம்.